

# திண்டுக்கல்லில் கலவரம் ஏன்?

**இந்து முன்னணியின் மாநிலத் தலைவர் இராம கோபாலன் கூறுகிறார்...**

**கே:** முஸ்லிம்களுக்குத் தனியாகப் பாகிஸ்தானைப் பிரித்துக் கொடுக்க வேண்டும் என்று காயிதே மில்லத் முகமது இஸ்மாயில் சொன்னதற்காக அவரைத் தேசத் துரோகி என்று சொல்கிறீர்கள். அவர் பெயரை மாவட்டத்துக்கு வைத்ததையும் எதிர்க்கிறீர்கள். காந்திஜியும் ராஜாஜியும் கூட பாகிஸ்தானைப் பிரித்துக் கொடுத்து விடுவது நல்லது என்றுதானே கூறினார்கள்...?

இராம கோபாலன்: கருணாநிதியின் குதர்க்க வாதத்தைத்தான் நீங்களும் கூறுகிறீர்கள். முகமது அலி ஜின்னா, காயிதே மில்லத், லியாகத் அலிகான் போன்றவர்களின் பிடிவாதத்தின் பேரில்தான் தேசம் துண்டாடப்பட்டது. காந்திஜி, 'Quit India' என்று வெள்ளைக்காரனைப் பார்த்துக் குரல் கொடுத்த போது, முஸ்லிம் லீக் தலைவர்கள், 'Cut India, Quit India' என்று கோஷம் எழுப்பினார்கள். நாட்டின் பல இடங்களில் நடைபெற்ற வகுப்புக் கலவரங்களையும் அதையொட்டிய படுகொலைகளையும் கண்ட காந்திஜி, ராஜாஜி ஆகியோர் 'பிரித்துக் கொடுத்து விடலாம்' என்ற கசப்பான முடிவை எடுத்தார்கள். தேசத் தலைவர்களுக்கு ஒரு நெருக்கடியைக் கொடுத்து, 'பிளாக்மெயில்' செய்வது போல் பாகிஸ்தானைப் பிரித்துக் கொண்டு போனார்கள் அன்றைய முஸ்லிம் லீக் தலைவர்கள். அதன் பிறகும் சும்மா இருக்கவில்லை. அன்று முதல் இன்று வரை பாகிஸ்தான் நமக்குக் கொடுத்து வரும் தலைவலிகள் எல்லோரும் அறிந்தவை. இன்று காஷ்மீரில் அது தொடர்கிறது. இப்படிப்பட்ட சூழ்நிலையில் பாகிஸ்தானுக்காகப் போராடிய ஒருவர் பெயரை மாவட்டத்துக்குச் சூட்ட வேண்டுமா என்பதுதான் கேள்வி. இன்று பாகிஸ்தான் நம்மிடம் விரோதம் பாராட்டாமல் நேசப் பான்மையுடன் நடந்து கொண்டால், நமது அணுகுமுறையும் வேறாகத்தான் இருக்கும். நாங்கள் முஸ்லிம்களுக்கு எதிரானவர்கள் அல்ல. எல்லோரும் சரிசமமாக அமைதியுடன் வாழ வழி விடுவதுதான் எங்கள் நோக்கம். இப்போது கூட வள்ளல் சீதக்காதி, செய்குதம்பிப் பாவலர், உமறுப் புலவர் போன்றவர்களின் பெயர்களை மாவட்டத்துக்கு வைக்கட்டும், எங்களுக்கு ஆட்சேபணை இல்லை.

கே: அமைதிப் பூங்காவான தமிழகத்தில் இந்து முன்னணி மதக் கலவரங்களை உண்டாக்குகிறது என்றும், வடக்கே பி. ஜெ. பி. பெற்றுக் கொண்டிருக்கும் எழுச்சிதான் இந்து முன்னணியை வேகமாகச் செயல்பட வைத்திருக்கிறது என்றும் கூறப்படுவது பற்றி...

இராமகோபாலன்: *1981* — இல் இந்து முன்னணி தோற்றுவிக்கப்பட்டது. அப்போது பி. ஜெ. பி. யின் செல்வாக்கு என்ன? திண்டுக்கல் மாவட்டத்துக்குக் காயிதே மில்லத் பெயர் வைப்பதற்கு முன்பு, நாகப்பட்டினத்தைத் தலைநகராகக் கொண்டு, காயிதே மில்லத் பெயரில் புதிய மாவட்டம் உருவாக்கப்படும் என்று எம். ஜி. ஆர். சொன்னார். அதற்கு அன்றே எங்கள் எதிர்ப்பைப் பல வழிகளில் தெரிவித்தோம். பி. ஜெ. பி. யின் வளர்ச்சிக்கும் எங்களுக்கும் சம்பந்தமில்லை.

கே: உங்கள் மீது பாதுகாப்புச் சட்டம் பாயும் என்று முதல்வர் சொல்லியிருக்கிறாரே?

இராமகோபாலன்: சாதாரணச் சட்டங்களின் மீது முதல்வருக்கு நம்பிக்கை போய் விட்டதா? பெரியார் திடலில் பிரிவினை பேசுகிறார்களே; அவர்கள் மீது பாதுகாப்புச் சட்டம் பாயாதா? இந்திய அரசின் கட்டளைப்படி இலங்கையில் பணியாற்றிவிட்டுத் திரும்பிய இந்திய அமைதிப் படையினரை வரவேற்கச் செல்லாத முதல்வர் நமது ராணுவத்தையே அவமதித்திருக்கிறாரே. பாதுகாப்புச் சட்டம் இவர் மீதல்லவா முதலில் பாய வேண்டும்?

சந்திப்பு: ப்ரியன்



* சப்—இன்ஸ்பெக்டர் ராஜகோபால்



* விஸ்வநாத சிவாச்சாரியார்

# அறுபத்துமூவர் விழா: மயிலையில் பக்தி வெள்ளம்!

வெள்ளியாலான ரிஷப வாகனம், மெருகேற்றப்பட்டுக் கொண்டிருக்கிறது. புன்னை மர (ஸ்தல விருட்சம்) வாகனத்துக்கு வண்ண பல்ப் அலங்காரம் நடந்து கொண்டிருக்கிறது. சூரியர், சந்திரர், நாகம், கிளி வாகனங்கள் புதுப் பெயிண்ட் வாடையுடன் பளிச்சென்று இருக்கின்றன. இன்னும், அன்னம், பூதம், பூதகி, தாரகாசுர வாகனங்களின் பெயிண்ட் வேலை மும்முரமாய் நடந்து கொண்டிருக்கிறது. கோவிலுக்கு வரும் பக்தர்கள் ஆங்காங்கே இந்தப் பணிகளையெல்லாம் நின்று கொஞ்ச நேரம் வேடிக்கை பார்த்து விட்டுப் போகிறார்கள். பிராகாரங்களில் பிரம்மாண்டமான பந்தல் உருவாகிக் கொண்டிருக்கிறது. நான்கு மாட வீதிகளிலும், ஆங்காங்கே கீற்று மண்டபங்கள் கட்டப்படுகின்றன. ஆம், மயிலை கபாலீஸ்வரர் கோவில் விழாக் கோலம் கொள்கிற காட்சிகள் தாம் இவை. அறுபத்து மூவர் உற்சவத்துக்காகத்தான்.

ஒவ்வோர் ஆண்டும் பங்குனி மாதம் பௌர்ணமியன்று பத்து நாள் பங்குனிப் பெருவிழா பூர்த்தியாகும். இந்த பத்து நாள் திருவிழாவில் எட்டாவது நாளில் அறுபத்து மூவர் உற்சவம் வெகு சிறப்பாய்க் கொண்டாடப்படுகிறது.

டாக்டர். விசுவநாத சிவாசாரியாரைச் சந்தித்த போது சொன்னார்: "உமா தேவியார், சிவபெருமானை மயில் வடிவம் கொண்டு வழிபட்ட தலம் மயிலை. தவிர முருகப் பெருமான், நான்முகன், சுக்கிரன், இராமர் ஆகியோரும் இத் தலத்தில் கபாலீசுவரரை வழிபட்டுப் பேறு பெற்றிருக்கிறார்கள். இறைவனுக்கு நேர் எதிரே வாயிலார் நாயனார் மௌனமாய் அமர்ந்து, வழிபட்டு முக்தியடைந்ததும் இத்தலத்தில்தான். திருஞானசம்பந்தர், எலும்பைப் பெண்ணுருவாக்கி அருளியதும் இங்குதான்."

"அது என்ன கதை?"

"மயிலை தலத்தில் வாழ்ந்த பெருவணிகர் சிவநேசச் செட்டியார். அவர் பெயருக்கேற்றபடி ஆழ்ந்த சிவ பக்தர். அவருக்கு ஒரு பெண். பெயர் பூம்பாவை. சிவநேசச் செட்டியார், தம் மகளை திருஞான சம்பந்தருக்கே மணமுடித்துத் தரப்போவதாய் உறுதிபூண்டுள்ள நிலையில், பூம்பாவை, பாம்பு தீண்டி மாண்டு போகிறாள். ஆயினும் இறைவனிடம் பக்தியும் ஞானசம்பந்தரிடம் நம்பிக்கையும் கொண்ட சிவநேசர் பூம்பாவையின் எலும்புகளை ஒரு பானையில் இட்டு மூடிப் பாதுகாத்து வருகிறார். திருஞானசம்பந்தர் மயிலைக்கு வரும் போது, எலும்புகள் அடங்கிய பானையைச் செட்டியார், ஞானசம்பந்தரிடம் சமர்ப்பிக்க, சம்பந்தர், "மட்டிட்ட புன்னை" எனத் தொடங்கும் பதிகம் முதலாகப் பத்து திருப்பதிகங்களைப் பாட, பானை உடைந்து பூம்பாவை உயிருடன் வெளிப்படுகிறாள். இறைவன் காட்சி தந்து அருள் செய்கிறார் என்பது ஐதீகம்.

"இதன் அடிப்படையில், பங்குனிப் பெருவிழாவில் எட்டாம் நாளான அறுபத்து மூவர் உற்சவ தினத்தன்று பிற்பகலில் சிவநேசச் செட்டியார், ஞானசம்பந்தர் விக்ரகங்கள் குளக்கரைக்குக் கொண்டு செல்லப்படுகின்றன. கூடவே ஒரு வாய் மூடிய பானையும் கொண்டு செல்லப்படும். அங்கே யாவரும் கேட்டு மகிழ ஓதுவார்கள் சம்பந்தரின் பதிகங்களைப் பாட, மண்குடம் உடைக்கப்படும். திரையிட்டு மூடப்பட்ட பூம்பாவை விக்ரகத்தின் திரை விலகும். பின், வலம் வரும் போது கபாலீசுவரர் காட்சியளிப்பார்."



* கபாலீஸ்வரர் கோவில்

மற்றெந்தக் கோவில்களிலும் இல்லாத முறையில், பஞ்சமூர்த்திகளும், அறுபத்து மூன்று நாயன்மார்களும், மாணிக்கவாசகரும், ஒன்பது தொகையடியார்களும் வீதி உலா வருவார்கள். இதிலே விசேஷமான



* விழாவில் ஒரு காட்சி...

அம்சம் என்னவெனில், வீதி உலாவின் போது, நாயன்மார்கள் (விக்ரகங்கள்) இறைவனைத் தொடர்ந்தோ அல்லது, இறைவன் தொடரவோ போக மாட்டார்கள். மாறாக, இறைவனுக்கு முன்னே, ஆனால் இறைவனை நோக்கியபடியே பின்னோக்கிச் செல்வார்கள். இறைவனைத் தரிசித்தபடியே நாயன்மார்கள் வீதிஉலா வருவார்கள்.

முன்காலத்தில் அறுபத்து மூன்று நாயன்மார்கள் மற்றும் தொகையடியார்களை தனித்தனியே விமானத்தில் எடுத்துக் கொண்டு வருவார்களாம். இப்போதெல்லாம், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகர் நால்வரும் பல்லக்கில் பவனி வர, மற்ற நாயன்மார்கள், தொகையடியார்கள் நான்கு நான்கு பேராய் விமானத்தில் வீதி உலா வருகிறார்கள். "இப்போது, சாமி தூக்கக் கூலிக்கும் ஆள் கிடைப்பதில்லை; பக்தர்களும் அதிக அளவில்முன் வருவதில்லை. சிரமமாய் இருக்கிறது" என்றார் கபாலி கோவிலில் உள்ள ஒருவர்.

"இது ஒரு கெசட் பதிவு பெற்ற திருவிழா!" என்றார் மயிலை கோவிலின் நிர்வாக அதிகாரியான ராஜநாயகம். "திருவிழாவுக்கு மூன்று மாதங்கள் முன்னாலிருந்தே விழா ஏற்பாடுகள் ஆரம்பமாகி விடுகின்றன. வாகனங்களைப் புதுப்பிப்பது, விழாவில் இலக்கியப் பேருரை, கச்சேரி நடத்த ஏற்பாடுகளைக் கவனிப்பது, திருவிழாவுக்கு வரும் ஆயிரக்கணக்கான பக்தர்களுக்குத் தேவையான பந்தோபஸ்து ஏற்பாடுகள், குடிதண்ணீர் வசதி, சுகாதார வசதி, மின்சார வசதி ஆகியவற்றைச் செய்ய அந்தந்த அரசாங்க அமைப்புகளுடன் தொடர்பு கொள்வது என்று ஏகப்பட்ட வேலைகள்."

"மயிலாப்பூர் அகாடமியின் வாலண்டியர் சேவை பாராட்டுக்குரியது. அதன் உறுப்பினர்கள் போலீஸுக்கு உதவியாய் இருந்து, கூட்டத்தைக் கட்டுப்படுத்துவது, பக்தர்களுக்குத் தேவையான தகவல்களை அளிப்பது, குடிதண்ணீர் விநியோகம் போன்றவற்றைக் கவனிக்கிறார்கள்" என்றார் ஒரு மயிலைவாசி.

"சென்னை நகரில் பெருந்திரளாய் பக்தர்கள் குழுமும் ஒரே திருவிழா அறுபத்து

மூவர்தான். நான்கு மாடவீதிகளும், திருக்கோவில் கோபுரங்களும் ஜகஜ் ஜோதியாய் இருக்கும். நிறையக் கடைகள் முளைக்கும். இரும்புப் பாத்திரங்கள், பீங்கான் ஜாடிகள், வளையல்கள் என்று ஒரே கடைகள் மயம் தான்...!'' என்றார் வடக்கு மாடவீதியில் நாம் சந்தித்த ஜானகியம்மாள்.

**"பா**துகாப்பு ஏற்பாடுகள், கூட்டத்தை கட்டுப்படுத்துதல், போக்குவரத்தைச் சரி செய்தல், போன்ற பணிகளில் சுமார் ஐநூறு போலீஸ்காரர்கள் தவிர, சாரணர்கள், ஹோம் கார்டுகள் ஆகியோரும் ஈடுபடுத்தப்படுகிறார்கள்'' என்றார் மயிலை சட்டம் ஒழுங்கு சப்—இன்ஸ்பெக்டர் ராஜகோபாலன். தொடர்ந்து அறுபத்துமூவர் உற்சவத்தின் போது நடக்கும் குற்றங்களை வரிசைப்படுத்தினார்: 1. பிக்பாக்கெட், 2. நகைத் திருட்டு, 3. ஈவ் டீசிங்.

''ஒலிபெருக்கிகள் மூலமாய் பிக்பாக்கெட்டுகளிடமும் நகைபறிப் பேர் வழிகளிடமும் ஜாக்கிரதையாய் இருக்கும்படி அறிவித்துக் கொண்டே இருப்போம். சாதாரண உடையில், கூட்டத்தோடு கூட்டமாய் நின்று கண்காணிக்கும் காவல் துறையினர், சந்தேகத்துக்கிடமான பேர்வழிகளை நுணுக்கமாய்க் கவனித்துக் கைவரிசையைக் காட்டும் போது 'கப்'பெனப் பிடித்து விடுவார்கள். பெண்களிடம் தகாத முறையில் நடந்து கொள்வோருக்கு முந்நூறு முதல் நானூறு ரூபாய் வரை அபராதம் விதிக்கப்படும். சென்ற ஆண்டு இந்த வகையில் சுமார் நூறு வழக்குகள் போடப்பட்டன!

''குழந்தைகள் தொலைந்து போவதும் வழக்கமாய் நடக்கும் விஷயமே! இதற்கென போலீஸ் அவுட் போஸ்ட்டில் பிரத்தியேகப் பிரிவு இயங்கும். பெற்றோரைத் தவற விட்டு விட்ட குழந்தைகளைப் போலீஸாரும், பொது மக்களும் அங்கே கொண்டு வந்து விடுவார்கள். விவரங்கள் கேட்டு அதை ஒலிபெருக்கியில் அறிவிப்போம். வருஷத்துக்கு இதுபோன்ற கேஸ்கள் சுமார் இருபது, இருபத்தைந்து வரும்'' என்றார் ராஜகோபாலன்.

**இ**ந்தக் கட்டுரையைப் படித்து வரும் உங்களுக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டிருந்தால் நியாயமானதே. அது, 'பூம்பாவை என்ன ஆனாள்?' என்பதுதான்! உயிர் பெற்று எழுந்த அவள் திருஞானசம்பந்தரைத் திருமணம் செய்து கொண்டாளா? அதுதான் இல்லை! ஞானசம்பந்தர் அவளுக்கு உயிர் தந்ததால் 'தந்தை போல் ஆகி விட்டேன்' என்றும் 'சர்வ ஆன்மாக்களும் உய்யும்படி இவளை உயிர்ப்பித்தேன்' என்றும் கூறினார். பூம்பாவையோ திருஞானசம்பந்தரை மனத்தால் நினைத்து விட்டதால் வேறு யாரையும் திருமணம் செய்து கொள்ள விரும்பாமல் சிவத்தியானத்திலேயே ஈடுபட்டுப் பரம்பொருளுடன் ஐக்கியமடைந்தாள். இவ்வாறு மிக எளிய ஒரு கதை மூலம் மிக உயர்ந்த நோக்கங்களை நமது மனத்தில் பதியச் செய்கிறது மயிலை அறுபத்து மூவர் திருவிழா.

கட்டுரை: **எஸ். சந்திரமௌலி**

அட்டையிலுள்ள அறுபத்து மூவர் விழாக் காட்சி வண்ணப்படமும் உள்பக்கத் திருவிழாக் காட்சிப் படமும்: **உத்ரா**
மற்ற படங்கள்: **ரமணன்**

புத்தாண்டு வாழ்த்துக்கள்!

# திருமண அழைப்பிதழ்

## "சாவி" யின்

## வாஷிங்டனில் திருமணம்

## 400 வது நாடகம்

**13-4-90**

### கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் 15வது ஆண்டு விழா.

கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ், 15வது ஆண்டு விழாவை முன்னிட்டு ஏப்ரல் 13ம் தேதி வெள்ளி மாலை 6.45க்கு, நாரதகான சபா அரங்கில் ஆசிரியர் 'சாவி'யின் 'வாஷிங்டனில் திருமணம்' 400வது நாடகம், தமிழ் எழுத்தாளர் நலநிதிக்கு உதவும் வண்ணம் நடைபெறுகிறது.

நடிப்பு:குட்வில் ஸ்டேஜ் குழுவினர்

இயக்கம் : கூத்தபிரான் தயாரிப்பு : கோவை பத்து

**மாண்புமிகு முதல்வர்**

**டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி** அவர்கள்

தலைமை தாங்க அன்புடன்
இசைந்துள்ளார்கள்.

'கவியரசு' வைரமுத்து அவர்கள் பாராட்டுரை வழங்குவார்கள்.

சிறப்பு விருந்தினர்:

திரு எம். கோபாலகிருஷ்ணன்
(தலைவர் மற்றும் நிர்வாக இயக்குநர், இந்தியன் வங்கி)

பாராட்டு பெறுபவர்கள்:

ஆசிரியர் திரு சாவி

நாடக இயக்குநர் திரு கே.எஸ். நாகராஜன்

திரு பூர்ணம் விஸ்வநாதன், கோவை பத்து.

திரு கூத்தபிரான் முதலானோர்.

பி.கு: நன்கொடை வழங்குவோர் 'தமிழ் எழுத்தாளர் நலநிதி' என குறிப்பிட வேண்டுகிறோம்.

சிறப்பு அம்சம் : கொட்டு மேளத்துடன் திறந்த காரில் 'ஜாம்,-ஜாம்' 'மாப்பிள்ளை அழைப்பு' ஊர்வலம்.

| 10நாள் கோடை நாடக விழா : 20.4.90 முதல் 29.4.90 வரை. |
|---|



# பூர்ணம் விஸ்வநாதன் ஏன் சோடா பருகுவதை நிறுத்தி விட்டார்?



நான் பம்பாய்க்கு சென்று நாடகம் நடிக்கும் பொழுதெல்லாம் சோர்வு அடையும் பொழுது சபாக்காரர்கள் என் சோர்வை தீர்க்க ஒரு அற்புதமான சோடாவை பருக கொடுப்பார்கள்! அந்த அற்புதமான சோடாவை பருகியவுடன் என் களைப்பு நீங்கி உற்சாகமுடன் நடிக்கத் துவங்குவேன்.

அந்த உயர்தர ... சோடா ஏன் சென்னையில் கிடைப்பது இல்லை என்று வருந்தியதுண்டு. ஆனால் பம்பாயில் பிரபலமான அந்த அற்புத சோடா- சென்னையிலும் தமிழகத்தின் குறிப்பிட்ட சில இடங்களிலும் கூடிய விரைவில் விற்பனைக்கு வர இருப்பதாக கேள்விப்படுகிறேன்.

அந்த சோடாவின் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன் அதுவரை நான் எந்த சோடாவையும் பருகுவதில்லை என முடிவு செய்துள்ளேன்.

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 1990



| | | |
|---|---|---|
| முதல் பரிசு | ரூ. | 1500 |
| இரண்டாவது பரிசு | ரூ. | 750 |
| மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ. 375 விதம் | ரூ | 750 |

ஆக மொத்தம் ரூ. 3000 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்குமுன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தர வேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி: ஜூன் 15.

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் கல்கி ஆகஸ்டு 5 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

ஆசிரியர், கல்கி, சென்னை — 600 032.

• பிரச்னை விளக்க ஊர்வலம்

# காங்கிரீட் அலுவலகமா? குழந்தைகள் பூங்காவா?

ஒரு பெரிய ஆபத்து நிகழ்ந்து விடுமோ என அஞ்சி ஓர் இயக்கமே உருவாகியுள்ளது. அந்த இயக்கத்தின் பின்னணியில் உள்ள சென்னை பெசன்ட் நகர் குடியிருப்போர் சங்கத்தைச் சேர்ந்த ப. மோகன் கூறுகிறார்:

''கடற்கரையை ஒட்டிய நிலப்பரப்பில், பூமிக்கடியில் குறிப்பிட்ட ஆழத்தில் கடல் சார்ந்த உப்பு நீர் பரவிக் கிடக்கிறது. அதற்கு மேல் தேங்கி நிற்பது அருந்துவதற்கேற்ற நல்ல தண்ணீர். உப்பு நீரின் அடர்த்தியும் நல்ல தண்ணீரின் அடர்த்தியும் வேறு படுவதால் முந்தியதின் மீது பிந்தியது எண்ணெயைப் போல மிதந்து கொண்டிருப்பது சாத்தியமாகிறது.



• டி. கே. ராம்குமார்

• ப. மோகன்

''இந்தப் பிராந்தியம் முழுவதுமே குடிநீருக்கு இந்த நிலத்தடித் தண்ணீரைத்தான் நம்பியுள்ளது. இப்பகுதி மட்டும் என்றில்லை. சென்னை நகரின் பிற பகுதிகளுக்கும் லாரிகளில் எடுத்துச் செல்லப்பட்டு விநியோகிக்கப்படுவது இந்தப் பரப்பைச் சேர்ந்த நிலத்தடி நீர்தான்.

''ஏதாவது ஒரு காரணத்தால் உப்பு நீரும் நல்ல தண்ணீரும் கலந்து போய் விட்டால் அவ்வளவுதான். அதன்பிறகு குடிநீருக்கு வழியே கிடையாது.

''சென்னை நகரின் இதர பகுதிகளுக்குப் புழல், செம்பரம்பாக்கம் போன்ற ஏரிகளிலிருந்து தண்ணீர் விநியோகிக்கக் குழாய் இணைப்புக்கள் இருக்கின்றன. இந்தப் புறநகர் மற்றும் இதனை ஒட்டிய பகுதிகளுக்கு அத்தகைய இணைப்புகள் இல்லாத நிலையில், கிடைக்கிற நிலத்தடிநீரும் உப்பாகி விட்டால் வேறு வழியே இல்லை.



எஸ். என். அருணாசலம்

"எனவே, உப்புநீரும் நல்ல தண்ணீரும் ஒன்று கலந்து விடும் சூழ்நிலை உருவாகி விடக் கூடாது என்பதுதான் இப்பகுதி மக்களின் கவலை."

"ஏற்கெனவே எக்கச்சக்கமாக அடுக்கு மாடி வீடுகள் கட்டப்பட்டுவிட்டன. அதன் விளைவை இப்போதே உணர முடிகிறது. பெசன்ட் நகரை அடுத்துள்ள ஊரூர் குப்பத்தில் நிலத்தடிநீரில் உப்பு தெரியத் தொடங்கி விட்டது'' என்கிறார் பெசன்ட் நகர் ரெஸிடென்ட்ஸ் ஃபோரம் செயலாளர், எஸ். என் அருணாசலம்.

பொதுவாக, குடியிருப்புப் பகுதிகளில், மொத்தப் பரப்பளவில் குறைந்த பட்சம் பத்து சதவிகிதமாவது திறந்தவெளியாக இருக்க வேண்டும். அப்போதுதான் மழைநீர் பூமிக்குள் இறங்கி நிலத்தடிநீரின் அளவை நிலையாக வைத்திருக்க முடியும்.

ஏற்கெனவே இங்கே ஏகமாகக் கட்டடங்கள் எழுந்து விட்டதால் இப்போதுள்ள திறந்த வெளிப் பரப்பே ஆறு சதவிகிதம் தான் உள்ளது. அதனையும் மேலும் குறைக்கும் வகையில் 3,55,080 சதுர அடிப் பரப்பில் நாலு அடுக்கு கொண்ட மத்திய அரசு அலுவலகம் ஒன்றை மத்தியப் பொதுப் பணித்துறை கட்ட முடிவு செய்தது தான் பிரச்னை.

1985-லேயே இக்கட்டடத்துக்கான ஆரம்பப் பணிகள் தொடங்கப்பட்டன. அப்போதே இப்பகுதி மக்கள் தங்கள் எதிர்ப்பைத் தெரிவித்தார்கள். பெசன்ட் நகர் முழுக்க முழுக்க ஒரு குடியிருப்புப் பகுதி என்று அறிவிக்கப்பட்டுள்ள நிலையில் மாபெரும் அலுவலகக் கட்டடம் ஒன்றை இங்கே எப்படி உருவாக்கலாம் என்று கேள்வி எழுப்பினார்கள்.

"பலன் கிடைத்தது. கட்டடத்துக்கான தொடக்க வேலைகள் நிறுத்தப்பட்டன.

"அதன் பின்னர், ஜனாதிபதி ஆட்சிக் காலத்தில் இந்தக் குறிப்பிட்ட நிலப்பரப்பு மட்டும் அலுவலகம் கட்டுவதற்கு வசதியாக, 'இன்ஸ்டிட்யூஷனல் யூஸ் ஜோன்' என்று எம். எம். டி. ஏ. வால் அறிவிக்கப்பட்டுத் திரும்பவும் கட்டுமான வேலைகள் தொடங்கின'' என்கிறார் பெசன்ட் நகர் குடியிருப்போர் சங்க உறுப்பினரான வழக்கறிஞர் டி. கே. ராம்குமார்.

பெசன்ட் நகர் வாசிகள் மீண்டும் தங்கள் குரலை இதற்கெதிராக எழுப்பினார்கள். மனிதச் சங்கிலிப் போராட்டத்துக்குத் திட்டமிட்டுப் பின்னர் அதுவே பிரச்னை விளக்க ஊர்வலம் ஆயிற்று.

அவர்கள் இது தொடர்பாக எடுத்துக் கொண்ட முயற்சிகளுக்குப் பலன் கிடைக்கவில்லை. நீதி மன்றத்துக்குச் செல்வதைத் தவிர வேறு வழியில்லாமல் போயிற்று.

ஒரு மாடிக்கு மேல் கட்டுவதற்கு இடைக் காலத் தடை விதித்துள்ளது நீதி மன்றம். வழக்கு இன்னும் விசாரணைக்கு வரவில்லை.

இதனிடையில் மத்திய பொதுப்பணித் துறை திரும்பவும் கட்டுமானப் பணியைத் தொடங்கியுள்ளது. கட்டட வேலைகளுக்காகப் பெரிய பெரிய மோட்டார் பம்ப்புகளைப் போட்டுத் தண்ணீரை எடுக்கும் போது நிலத்தடிநீரின் அழுத்த நிலைகளில் வேறுபாடு ஏற்பட்டு, அதன் விளைவாகக் கடல்நீரும் நல்ல தண்ணீரும் ஒன்று கலந்து விடும். அதன் பின்னர் இந்தப் பிராந்தியத்தில் நல்ல தண்ணீருக்கே வழியில்லாமல் போய் விடும் என்று இந்தப் பகுதி மக்கள் பயப்படுகிறார்கள்.

மேலும் பெசன்ட் நகருக்கென்று இருக்கும் ஒரே ஒரு திறந்தவெளிப் பகுதியும் கட்டடங்கள் நிறைந்து அவர்களுக்கு இல்லாமல் போய்விடும். பல மாடிக் கட்டடம் கட்டப்படுவதற்குப் பதிலாகக் குழந்தைகள் பூங்காவாகவும் விளையாட்டு மைதானமாகவும் அந்தப் பரப்பு உருவாக வேண்டும் என்பது இவர்கள் கோரிக்கை.

— சி. ஆர். கண்ணன்.

---

பெண்ணின் தாய்: என் பெண்ணுக்கு இனிமேல் நல்லது, கெட்டது எல்லாமே நீங்கதான் பார்த்துக் கொள்ளணும்...!

பிள்ளையின் தாய்: எல்லாப் பொறுப்பையும் என் தலையிலே கட்டாதீங்க. நீங்க சொன்னதிலே, முதல் பாதியை நீங்க செய்ங்க; பின்பாதியை நான் செய்யறேன்!

— வி. ரேவதி.



நான்தான் ஆருநார்...
மறந்திடாதே!

நான் சொன்னபடி கேளுங்க!

ஐயோ, விடுங்க!
காஷ்மீர் பிரச்னைதானே...
உங்க எல்லோர் சொல்படியும்
கேட்கறேன்!

என் பேச்சைக் கேளு,

வி.பி.சிங்

அத்வானி

ராஜீவ்

நான் சொல்றதைக் கேட்கலேன்னா
ரொம்பக் கஷ்டப்படுவே!

இந்திய ராணுவம்

உன்கிட்ட
எனக்கு ரொம்ப
மதிப்பு, மரியாதை...
அதனால்தான்
கரி பூசறேன்!

கருணாநிதி

இதர கட்சிகள்

முப்பத்தாறு பேர்

படுகொலை.

ஹா... ஹா...
இது டிபனுக்கு
ஆச்சு...
லஞ்சுக்கு ஒரு
ரவுண்டு
போக
வேண்டியதுதான்!

பஞ்சாப்
பயங்கரவாதிகள்



# கல்கி

1990 ஏப்ரல் 15
மலர் : 48 இதழ் : 37
பிரமோதூத சித்திரை 2



## காஷ்மீர் தலைவலியும் பஞ்சாப் மண்டை இடியும்!

பஞ்சாபில் நிலைமை அபிவிருத்தி அடைந்து வருவதாகப் பிரதமரின் அறிக்கை வெளியான மறுநாளே, முப்பத்தாறு பேர் அங்கு பயங்கரவாதிகளால் கொல்லப்பட்டதாகச் செய்தி! காஷ்மீரிலும் இதே மாதிரி நிலைமைதான். முதல் நாள் நம்பிக்கையை வளர்க்கும் நாளிதழ் மறுநாள் நம்மை விரக்திக் கடலில் மூழ்கடிக்கிறது.

பஞ்சாபும் காஷ்மீரும் மாநிலப் பிரச்னைகள் அல்ல, தேசியப் பிரச்னைகள். எனவே, பிரதமர் வி. பி. சிங் எல்லாரையும் அரவணைத்துக் கொண்டு போக வேண்டும் என்று எண்ணுவதில் தவறில்லை. ஆனால் அவர் எல்லாரையும் எல்லா விஷயங்களிலும் திருப்திப்படுத்த முயற்சி செய்யும் போது யாரையுமே திருப்திப்படுத்த முடியாமல் திணறுகிறார். ஆளுக்கு ஒரு பக்கமாக இழுக்கும் போது வி. பி. சிங் திசை புரியாமல் தவிக்க நேரிடுகிறது.

ஜக்மோகனை ஆளுனராக நியமித்த அவர், பிறகு யாரையோ திருப்திப்படுத்த ஃபெர்னாண்டஸைக் காஷ்மீர் விவகாரத்துக்கு அமைச்சராக்கிக் கூடுதல் பொறுப்பை ஏற்கச் செய்தார். இவர் அரசியல் நோக்கில் போராளிகளுடன் பேச்சு வார்த்தை தொடங்க முயற்சி செய்கிறேன் என்று கூறிக் கொண்டு நாலு தடவை காஷ்மீர் சென்று ஒவ்வொரு முறையும் கையை விரித்துக் கொண்டு திரும்பியிருக்கிறார். காஷ்மீர் சட்டமன்றம் கலைக்கப்பட்டது தொடர்பாக விமர்சனம் எழுந்தபோது உள்துறை அமைச்சர் முப்தி, அதுபற்றி மறுபரிசீலனை செய்யலாம் என்பது போல் காங்கிரஸைத் திருப்திப்படுத்தக் கூறப்போக அது புதிய பல பிரச்னைகளைக் கிளப்பியிருக்கிறது.

இவையெல்லாம் ஆட்சியில் ஒருமித்த சிந்தனை இல்லை, ஒற்றுமை இல்லை என்ற எண்ணங்களை எதிரிகளிடம் வளர்க்கும். பஞ்சாப் — காஷ்மீர் பயங்கரவாதிகளுக்கும் அவர்களை ஊக்குவிக்கும் பாகிஸ்தானுக்கும் புதிய துணிவை அளிக்கும். பயங்கரவாத அக்கிரமங்கள் அதிகரிக்கும்.

அணைத்துக் கொண்டு போக வேண்டும்தான். அது எந்த விஷயத்தில் என்றால் அடிப்படைகளில் மட்டுமே. உதாரணமாக, பாகிஸ்தானை எச்சரிக்கும் விதமாக எல்லாக் கட்சிகளும் சேர்ந்து ஓர் அறிக்கை தயாரித்து வெளியிடலாம். 'வன்முறைக்கு இடம் தர மாட்டோம்; நாட்டைத் துண்டாட அனுமதிக்க மாட்டோம்' என்று இந்தச் சர்வ கட்சி அறிக்கையில் அனைவரும் சபதம் செய்யலாம். 'தேவைப்பட்டால் — பாகிஸ்தான் இந்த எச்சரிக்கையைப் புரிந்து கொண்டு செயல்படாமல் விரோதத்தை வளர்த்தால் — இந்தியா அந்நாடு மீது படையெடுக்கக் கூடத் தயங்காது' என்று கூட இந்த அறிக்கையில் குறிப்பிடலாம். இத்தகைய ஓர் அறிக்கையில் முரண்பாட்டுக்கு இடமில்லை என்பதுடன், பாகிஸ்தானுக்கு நமது ஒற்றுமையையும் உறுதியையும் உணர்த்தி, உண்மையிலேயே ஓர் அச்சத்தை உருவாக்கும்.

இதுபோன்ற அடிப்படை விஷயங்கள் தவிர, இதர நடைமுறை அம்சங்களில் பிரதமர், தைரியமாகத் தமக்கு நம்பிக்கை உள்ள இருவர் மூலம் பயங்கரவாதத்தை ஒடுக்கப் பஞ்சாபிலும்; காஷ்மீரத்திலும் இயங்க வேண்டும். அந்த இருவரிடமும் தாம் எதிர்பார்ப்பதைத் தெளிவாக்கிச் சுதந்திரமாக இயங்க அவர்களை அனுமதிக்க வேண்டும். இதிலெல்லாம் சர்வ கட்சிகளையும் சம்பந்தப்படுத்தக் கூடாது. பல்வேறு கட்சிகளைச் சேர்ந்தவர்களை ஸ்ரீநகருக்கு அழைத்துப் போய்ப் பேச்சு வார்த்தை தொடங்க எண்ணியதில், சில வாரங்கள் முன்பு, ராஜீவ் காந்தி ஒரு நாடகமாட அரங்கம் அமைத்துத் தந்ததைத் தவிர வேறு என்ன சாதிக்கப்பட்டது? அனைவரையும் அணைத்துப் போவது என்பது அடிப்படை விஷயத்துடன் நிற்பதுதான் நல்லது. காஷ்மீரில் ஜக்மோகன் பயங்கரவாதிகள் விஷயத்தில் உறுதியாக இயங்குகிறார். பஞ்சாபிலும் அதே உறுதியுடன் ஆளுனர் இயங்கப் பிரதமர் ஊக்கமளிக்க வேண்டும்.

அரசியல் தீர்வு தேவையற்றது அல்ல. அதனைப் பிரதமரும் உள்துறை அமைச்சரும் அயல்துறை அமைச்சரும் மட்டுமே கலந்து பேசி, சாணக்கியம் வகுக்க வேண்டும். எல்லாவற்றிலும் எல்லாரையும் சம்பந்தப்படுத்திக் குட்டை குழப்பக் கூடாது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

அன்னை நர்ஸிங்ஹோம்...

கவுண்டரில் வந்து நின்ற அந்த மனிதரைக் கண்டதும், வரவேற்பாளராகப் பணி ஆற்றிய தேவகி எழுந்து நின்றாள்.

வந்து நின்றவர் பெரிய டாக்டர் கிருஷ்ணனின் மாப்பிள்ளை மது ஆயிற்றே!

"டாக்டர் உள்ளேதான் இருக்கிறார்... நீங்கள் வந்திருப்பதாக நான் வேண்டுமானால் இண்டர்காமில் சொல்லட்டுமா?"

"வேண்டாம்... அவருக்குத் தொந்தரவு தர வேண்டாம். என் பையனுக்கு உடம்பு சரியில்லை. பணம் எவ்வளவு கட்ட வேண்டும்?" எனக் கேட்டான் மது.

தேவகி குழம்பிப் போனாள். மனிதன் வேண்டுமென்றே விளையாடுகிறாரா? அவளைச் சீண்டிப் பார்க்கிறாரா? சொந்த மாப்பிள்ளையின் பிள்ளைக்கு — அதாவது தன் சொந்தப் பேரனுக்கு வைத்தியம் பார்க்க எந்த டாக்டர் பணம் கேட்பார். இவர்கள் இரண்டு பேருக்கும் இடையே ஏதாவது மனஸ்தாபமோ?

# இலவசமா? மூச்!

"ஸார்... பெரிய டாக்டரிடம் ஒரு வார்த்தை கேட்டு விட்டு..."

"யாரிடமும் எதையும் கேட்க வேண்டாம். நான் ஒரு நோயாளியைக் கூட்டிக் கொண்டு வந்திருக்கிறேன். வந்திருப்பது யார் எனப் பார்க்க வேண்டியது உங்கள் வேலை இல்லை. எனக்கு அட்மிஷன் கார்டு தர முடியுமா? முடியாதா? இல்லையென்றால் ஊரில் வேறு எத்தனையோ டாக்டர்..."

தேவகி பதறிப் போனாள். இது என்ன புதிய வம்பு? இந்த விஷயம் பெரிய டாக்டர் காதிற்கு எட்டினால் என்ன சொல்வாரோ...?

"சரி... இருபத்தைந்து ரூபாய் கொடுங்கள்!" என்றாள்.

மது தன் பிள்ளை குருவின் பெயரில் 'அட்மிஷன் கார்டு' வாங்கிக் கொண்டான். டாக்டரின் அறை வாசலில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் ஒன்றில் மற்றவர்களுடன் தானும் ஒருவராக உட்கார்ந்து கொண்டான்.

அறை வாசலில் நின்றிருந்த பையன் மதுவை அடையாளம் கண்டு கொண்டான். "ஸார்...! நீங்கள் உள்ளே போங்கள்" என்றான் மரியாதையுடன்.

"இதோ பார்... என் முறை வரும் போது கூப்பிடு. நான் போகிறேன். தனியாக எனக்கு எந்தச் சலுகையும் வேண்டாம். என்ன?"

அரை மணி நேரம் காத்திருந்த பிறகுதான் அவன் முறை வந்தது.

மது குருவுடன் உள்ளே போனான்.

டாக்டர் கிருஷ்ணன் அறையில் இருந்த உதவி டாக்டர் மற்றும் நர்ஸ்கள் மரியாதையுடன் எழுந்து நின்றனர்.

மாப்பிள்ளை நீட்டிய சீட்டைப் பார்த்த கிருஷ்ணன் திகைத்துப் போனார். "மது... இதெல்லாம் என்ன... நீங்களே நேராக வந்திருக்க வேண்டியதுதானே?"

மது அவர் பேச்சைத் தன் காதுகளில் வாங்கியதாகத் தெரியவில்லை.

"டாக்டர் ஸார்! இவன் என் பிள்ளை. நேற்று இரவு முதல்..." என ஆரம்பித்தான்.

டாக்டர் கிருஷ்ணன் முகம் மாறியது. மௌனமாகத் தம் பேரனைப் பரிசோதித்தார்.

"சாதாரண ஜுரம்தான். மருந்து எழுதிக் கொடுத்திருக்கிறேன். டிஸ்பென்ஸரியில் போய் வாங்கிப் போங்கள்."

மது அந்தச் சீட்டை டிஸ்பென்ஸரியில் காட்டி, அதற்கான விலை ரூபாய் இருபத்தெட்டு பைசா இருபத்தைந்தைக் கட்டாயமாகக் கொடுத்து விட்டுப் போனான்.

அன்று இரவு மதுவின் மனைவி மாலதி அவனிடம் குறைப்பட்டுக் கொண்டாள்.

"உங்களுக்கு என் அப்பா மேல் என்ன கோபம்?"

"உன் அப்பாவிடமா! ஒன்றும் இல்லையே.."

"பின்னே என்ன! நம்ம குருவைக் கூட்டிப் போய்க் காண்பித்ததற்குக் கட்டாயப்படுத்திக் கன்ஸல்டிங் ஃபீஸ் கொடுத்தீர்களாம். மருந்து விலையைக் கூட வற்புறுத்திக் கொடுத்து விட்டு வந்தீர்களாம். அம்மா டெலிபோனில் என்னிடம் ரொம்பவும் வருத்தப்பட்டுக் கொண்டார்கள்."

"இதில் என்ன வருத்தப்பட இருக்கிறது? உறவு வேறு; தொழில் வேறு. ஆஸ்பத்திரி நேரத்தில், உன் அப்பாவின் ஒவ்வொரு நிமிஷமும் அவருக்குப் பொன்னைப் போன்றது. அங்கு ஏற்பட்டுள்ள விதிமுறைகளை யாராயிருந்தாலும் கடைப்பிடித்தாக வேண்டும்."

"இதெல்லாம் என்ன பிடிவாதம்...? இப்படியெல்லாம் நடந்தால் உறவு பலப்படாது. பாசம் விட்டுப் போகும்."

"அதெல்லாம் இல்லை. உன் அம்மா தானே உன்னிடம் சொன்னாள்? உன்

பாலாஜி

அப்பாவுக்குத் தெரியும். நான் செய்தது சரி என்று!'' — என மது மேலே விவாதத்திற்கு இடம் கொடுக்காமல் நகர்ந்து போனான்.

ஒரு மாதம் கழித்து —

டாக்டர் தம்முடைய நர்ஸிங் ஹோமிற்குக் கூடுதலாக ஒரு பிரிவு கட்டத் தீர்மானித்தார்.

அதற்கான வரை படம், மதிப்பீடு — இவற்றைத் தயார் செய்யத் தம் மாப்பிள்ளை மதுவை, பிரபலமான கட்டட இன்ஜினியரை — கேட்டுக் கொண்டார்.

எல்லா விவரங்களையும் தயாரித்து அனுப்பிய மது — தன் வேலைக்குக் கூலியாக ரூபாய் அறுநூறுக்கு டைப் அடிக்கப்பட்ட 'பில்' இணைத்திருந்தான்!

அதைப் பார்த்த டாக்டரின் மனைவி — மாமியார் அதிர்ந்து போனாள்.

''என்னங்க இது! விநோதமாக இருக்கு. மாப்பிள்ளை நமக்குப் 'பில்' அனுப்பியிருக்கிறார்! லட்சம் லட்சமா செய்திருக்கிறோம். இந்த அறுநூறு ரூபாய்க்குப் போய்...''

''இதிலே எனக்கு ஒன்றும் வித்தியாசமாத் தெரியலே. அன்றைக்கு நான் என் பேரனுக்குச் செய்த சிகிச்சைக்கு ரூபாய் கொடுத்து விட்டுப் போனார். இன்றைக்குத் தான் எடுத்துக் கொண்ட சிரமத்திற்கு, மற்றவரிடம் வாங்குவது போல் பில் போட்டிருக்கிறார். அவ்வளவுதான்!''

''நல்ல மாமனார். நல்ல மாப்பிள்ளை!'' என அலுத்துக் கொண்டாள் அவர் மனைவி.

மேலும் ஒரு மாதம் கழித்து —

மதுவைப் பார்க்க அவன் கிராமத்திலிருந்து ஒருவர் — அவனுக்கு தூரத்து உறவு — வந்திருந்தார்.

''என் குழந்தைக்கு உடம்பு சரியில்லை. இங்கே பட்டணத்திலே ஆபரேஷன் செய்யணும்னு டவுன் டாக்டர் எழுதிக் கொடுத்திருக்காரு. எல்லாரும் சொல்றாங்க... உன் மாமனாருக்கு நல்ல கைராசின்னு... அங்கே தான் சேர்க்கலாம்னு வந்திருக்கேன். ஆயிரக்கணக்கில் செலவாகும்னு சொல்





அருள்வாக்கு

"எப்பொருள் யார் யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்ப(து) அறிவு."

என்று திருக்குறளில் சொல்லியிருக்கிறது.

எந்த விஷயமாகட்டும், அதை யார் தான் எடுத்துச் சொல்லட்டும், அதன் சரியான தாத்பர்யம் என்னவென்று பார்த்து ஏற்றுக் கொள்வதே புத்திசாலித்தனம் என்று அர்த்தம். இப்படிச் சொன்னதால் முதலிலேயே எந்த ஒரு வித்யையும் தப்பு என்று ஒதுக்கி வைத்து விடாமல் எதிலும் ஏதாவது உசந்த கருத்து இருக்குமா என்று ஆலோசிக்க வேண்டுமென்று ஏற்படுகிறது. அதே போல, "போயும் போயும் இவர்களிடமா கற்றுக் கொள்வது? இவர்கள் சொல்லியா கேட்டுக் கொள்வது" என்றெல்லாம் நினைக்காமல், "சொல்வது யாராக வேண்டுமானாலும் இருக்கட்டும்; சொல்வதில் தாத்பர்யம் இருந்தால் எடுத்துக் கொள்வோம்" என்று நினைக்க வேண்டுமென்றும் ஏற்படுகிறது. இந்த இரண்டு பண்புகளையும் தர்மசாஸ்திரங்களில் வெகுவாக ஆதரித்து வற்புறுத்தியிருக்கிறது.

"விஷயமிருக்கிறதா என்று பார்க்கிறேன்" என்று பொய் ஸமாதானம் சொல்லிக் கொண்டு, கன்னாபின்னா ஸமாசாரங்களைக் கூட ஒருத்தன் படிக்கலாம். ஆனால் உசத்தி தாழ்த்தி பார்க்காமல் "யாரார் வாய் கேட்பது" லேசில் முடியாது. அதனால் இந்த அம்சத்தை சாஸ்திரம் நன்றாக அழுத்தம் கொடுத்துச் சொல்லியிருக்கிறது.

கோபத்திலே கொக்கை எரித்த கொங்கணரிஷி ஒரு ஸ்திரீயிடமிருந்து அநேக தர்மங்களைத் தெரிந்து கொண்டு, அப்புறம் அவள் வார்த்தைப்படி பாக்கியிருந்த தர்மங்களை ஒரு கசாப்புக் கடைக்காரனிடம் கேட்டறிந்ததாக மஹாபாரதத்திலிருக்கிறது. அந்தக் கதையை விட நம் பூர்விகர்கள் அறிவுக்காக "யாரார்வாய் கேட்க"வும் தயாராயிருந்ததற்குப் பெரிய சான்று வேண்டாம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

நாங்க.. உனக்கு என் நிலைமை தெரியும். உன் மாமனார்கிட்டச் சொன்னேன்னா... நீ சொன்னாத் தட்டவா போறார்! கொஞ்சம் குறைச்சுப் போட்டு எனக்குச் சகாயம் பண்ணலாம். நீ சொன்னா பீஸே வேண்டாம்னு கூடச் சொல்லிடுவாரு..."

"நல்லாச் சொன்னீங்க சித்தப்பா... என் மாமனார் ரொம்ப ரொம்பக் கண்டிப்புக்காரர். தெரிஞ்சவங்க, உறவுக்காரங்கன்னு கூட தாட்சண்யம் காட்ட மாட்டாரு. பாருங்க... என் பிள்ளைக்கு உடம்பு சரியில்லை. அவருடைய சொந்தப் பேரன். பார்க்கறதுக்குத் தனியா, மருந்துக்குத் தனியான்னு எண்ணி வாங்கிட்டாரு... இதோ பாருங்க.. ரசீது கூட வச்சிருக்கிறேன்."

மது எல்லாவற்றையும் தன் மேசை டிராயரிலிருந்து எடுத்துப் போட்டான்.

வந்தவர் பதில் பேசவில்லை.

ஒரு வாரம் கழித்து —

"டாக்டர் கிருஷ்ணன்?"

"எஸ்?"

"நான் டாக்டர் கோபால்..."

"என்ன, டாக்டர்... எப்படி இருக்கீங்க?"

"நம்ம பையன் அமெரிக்காவிலிருந்து திரும்பி இங்கேயே செட்டில் ஆயிடலாம்னு பார்க்கிறான். ஒரு சின்ன பங்களா பெசண்ட் நகரில் கட்டணும். பிளாட் ரெடியா இருக்கு. கண்ட காண்டிராக்டர்களிடம் போக எனக்கு இஷ்டம் இல்லை. பணத்தையும் முழுங்கி சாமான்களையும் சாப்பிட்டு சரியாவும் கட்ட மாட்டாங்க... உன் மாப்பிள்ளை கிட்டப் போகலாம்னு பார்க்கிறேன். நீ ஒரு கடிதம் கொடுத்து ஒரு வார்த்தை டெலிபோனில் சொன்னால் அவர் கமிஷனில் கொஞ்சம் குறைத்து..."

"என் மாப்பிள்ளையா! நல்ல ஆள் பார்த்தீர்கள் டாக்டர்.. நான் கடிதம் கொடுத்தால் அதற்கு மதிப்பே இருக்காது."

"என்ன சொல்கிறீர்கள்?"

"ஆமாம்... அவர் நல்ல இஞ்ஜினியர். எல்லாம் சிரத்தையுடன் செய்வார். ஆனால் பிஸினஸ் விஷயத்தில் ரொம்பக் கண்டிப்பு. பாருங்களேன். என் நர்ஸிங் ஹோம் எக்ஸ்டென்ஷனுக்கு ஒரு பிளான் கேட்டேன். போட்டுக் கொடுத்தார். கூடவே ஒரு பில்.. அறுநூறு ரூபாய்க்கு. மறு பேச்சுப் பேசாமல் கொடுத்தேன்."

"ஓ... ஐ.ஸி."

கூப்பிட்ட டாக்டர் போனைக் கீழே வைத்து விட்டார்.

மாப்பிள்ளையும் மாமனாரும் கூடிப் பேசி, சிபாரிசுகளைத் தவிர்க்க, வருமானத்தில் ஒரு பைசா கூடக் குறையாமல் பார்த்துக் கொள்ள, போட்ட திட்டம் இது என்று அவர்கள் மனைவிமார்களுக்கே கூடத் தெரியாது!



# ஆரோக்கிய ரகசியம்

## 1 யோகாசனமென்றால் பயப்பட வேண்டாம்!

'ஆரோக்கியமே அருந்தனம்' என்பது ஆன்றோர் வாக்கு. அந்தத் தனம்தான் மற்ற எல்லாச் செல்வங்களுக்கும் அடிப்படையானது. எனவே, மற்ற எல்லாவற்றையும் விடச் சிறந்தது. கல்விச் செல்வம், பொருட் செல்வம், மக்கட் செல்வம், அருட் செல்வம் இன்னும் என்னென்ன செல்வங்கள் உண்டோ அவைகளையெல்லாம் அடைய, அனுபவிக்க ஆரோக்கியச் செல்வம் அவசியமானது.

உதாரணத்துக்கு அருட் செல்வத்தையே எடுத்துக் கொள்ளலாம். அது மற்ற எல்லாச் செல்வங்களையும் விடச் சிறந்த செல்வம் என்பதில் மாற்றுக் கருத்து இல்லை. ஆனால் அதற்குக் கூட ஆரோக்கியம்தான் அடிப்படை. ஜபம் செய்வதும் தியானம் செய்வதும் உடல் ஆரோக்கியமில்லாவிடில் எப்படிச் சாத்தியம்?

''நாராயணா, நாராயணா! நோகிறதே! ராமராமா! அப்பாடியோ! கொல்லுகிறதே! சிவசிவா! அந்த மருந்து பாட்டிலை எடுத்து வாயேன்'' என்றால் தியானமாகிவிடுமா? அருட் செல்வம் கிடைத்து விடுமா? அதனால்தான் முதிர்ந்த ஞானியும் அருட்ஜோதி வள்ளலுமான ராமலிங்க சுவாமிகளும் ''நோயற்ற வாழ்வு நான் வாழ வேண்டும்'' என்று அன்புருகப் பாடினார்.

உடல்நலம் குன்றினால் பணம் இருந்து என்ன பயன்? பணத்தினால் கிடைக்கக் கூடிய வசதிகளை எப்படி அனுபவிப்பது? வக்கீலோ, நீதிபதியோ, எழுத்தாளரோ, அரசியல் தலைவரோ கல்விச் செல்வம் உடையவராக இருக்கலாம். அவர்கள் சேவை நாட்டுக்குத் தேவையாகவும் இருக்கலாம். இவர்கள் நோய்வாய்ப்பட்டால் நாட்டுக்கே நஷ்டமல்லவா?

ஆகவே ஆரோக்கிய அஸ்திவாரத்தைப் பலமாகப் போட்டுக் கொண்டால்தான் பல துறைகளிலும் இயங்கி, நமக்கும் நாட்டுக்கும் நல்லது செய்யலாம். சரீரம் நோய் கொண்டால் மனமும் நோய் கொள்ளுகிறது. நோயாளி, எப்போதும் பிறரைக் குறை கூறிச் சிடுசிடுத்துக் கோபப்பட்டுக் கொண்டிருப்பான். பெரிய அறிவாளிகள் கூட, டென்ஷனால் பாதிக்கப்பட்டு நோயைத் தருவித்துக் கொள்கிறார்கள். உடல் நோயினால் பாதிக்கப்பட்டு டென்ஷனை வளர்த்துக் கொள்கிறார்கள். இது ஒரு விஷ வட்டம் போலச் செயல்படுகிறது. ஆரோக்கியமும் தேஜஸும் ஆத்மபலமும் கொண்டவர்கள் பிறரைக் குறை கூற மாட்டார்கள்.

யோகாசனம் என்பது உடல் ஆரோக்கியத்தைப் பேணுவதோடு தேஜஸையும் ஆத்மபலத்தையும் அளிக்கிறது.

ஆரோக்கியம் பொருந்தியவரிடம்தான் உயர்ந்த நோக்கங்களும் நல்ல எண்ணங்களும் தோன்றும். அந்த நோக்கங்களை நிறைவேற்றும் ஆற்றலும் உண்டாகும்.

காலையில் கிழக்கில் சூரியன் உதிப்பது எவ்வளவு நிச்சயமோ அவ்வளவு நிச்சயம் யோகாசனம் பயில்பவர்களுக்கு நோய் வராமல் இருக்கும் என்பது. யோகாசனம் என்றதும் பயப்பட வேண்டாம். ஆண், பெண், சிறுவர், சிறுமியர் எல்லோரும் செய்யலாம். அதனால் நோய் எனும் நரகத்திலிருந்து மீளலாம்.

ஆனால் எந்தக் காரியத்தையும் முறைப்படி செய்ய வேண்டும் என்பது போல் இதற்கும் சில நியமங்கள் உண்டு. இவை எளிதானவை. சுலபத்தில் கடைப்பிடிக்கக் கூடியவை. நம் தினசரி வாழ்க்கையைக் கொஞ்சம் திருத்திக் கொண்டாலே போதும்.

யோகாசனம் செய்து உடல் ஆரோக்கியம் பெற, பணச் செலவு ஏதும் கிடையாது. ஏழை, பணக்காரன் எல்லோரும் செய்யலாம். என்ன, காற்றோட்டமான ஓர் அறை, அதில் விரிக்க ஒரு ஜமக்காளம், இடுப்பில் உடலோடு ஒட்டிய மாதிரி அணிய ஒரு ஜட்டி — இவைதாம் தேவை. பெண்கள் உள்ளா

ஜி.என். குமாரசாமி




டைக்கு மேல் பைஜாமா குர்த்தா என்கிறார்களே அப்படி ஏதேனும் அணியலாம்.

**யோ**காசனம் பழக ஆரம்பிப்பதற்கு முன்னால், முதலில் நமது ஆகாரத்தைக் கொஞ்சம் சீர்படுத்திக் கொள்ள வேண்டும். ஸ்பெஷல் ஆகாரம் ஏதும் தேவையில்லை. எளிய உணவுகளை உட்கொண்டே செய்யலாம். ஆனால் சத்துக் குறைக்காமல் சாப்பிடத் தெரிந்து கொள்ள வேண்டும். கண்ட வேளைகளில் சாப்பிடும் பழக்கத்தை விட்டுவிட வேண்டும். மூன்று வேளை ஆகாரம் மிதமாகச் சாப்பிட்டால் போதும். அதில் ஒரு வேளை மட்டும் சற்று பலமாகச் சாப்பிடலாம். மற்ற இரு வேளைகள் இலேசான ஆகாரமாய் இருப்பது நல்லது.

காலையில் இட்டிலி, தோசை, பொங்கல், உப்புமா என்று வசதிப்பட்டதை அளவாகச் சாப்பிடலாம். இவற்றைச் சாப்பிட வசதியில்லாதவர்கள் — அல்லது வசதி இருப்பினும் கூட — பழையமுது சாப்பிடுவது மிகவும் நல்லது. நம் நாடு உஷ்ணமானது. அதற்கு ஏற்றாற் போல் ஆகாரம் சாப்பிட வேண்டும். கொளுத்தும் வெயிலில் நண்பர் வீட்டுக்குப் போனால் கூட, "காப்பி சாப்பிடுகிறீர்களா?" என்றுதான் கேட்கிறார்கள். நாமும் நாகரிகம் என்று எண்ணி வியர்க்க விறுவிறுக்க காப்பி சாப்பிடுகிறோம்.

இம்மாதிரியெல்லாம் உபசாரத்துக்காகச் சாப்பிடாமல் எந்தக் காலத்தில் எதைச் சாப்பிட வேண்டுமோ அதை மட்டும் யோசித்துச் சாப்பிடப் பழகிக் கொள்ள வேண்டும்.

மத்தியானச் சாப்பாடு சற்று பலமாக இருக்கலாம்; தவறில்லை. அதில் முக்கியமானது சாதம்தான். இந்தக் காலத்தில் இதில் கவனம் குறைந்து விட்டது. வெள்ளை வெளேர் என்று நைசாக இருக்கிறதா என்று பார்க்கிறோம். சத்து இருக்கிறதா என்று பார்ப்பதில்லை. காய்கறி, சாம்பார் போன்றவற்றால் சாதத்துக்கு ருசி ஏற்படுகிறது. ஆனால் இந்தக் காய்கறியும் சாம்பாரும் கூட சத்துடன் சமைக்கப்படுகிறதா என்று கவனிப்பார் இல்லை.

"சத்துணவுக்கும் யோகாசனத்துக்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்காதீர்கள். நேரடியான சம்பந்தம் உள்ளது. இரண்டுமே உடல் ஆரோக்கியத்தைக் கருதித்தானே!

யோகாசனம் பயிலுவோர் அளவாகச் சாப்பிட வேண்டும். முட்டமுட்டச் சாப்பிடக் கூடாது. அப்படி அளவாகச் சாப்பிடும் போது அது ஆரோக்கியமான, சத்துள்ள உணவாக இருக்க வேண்டியது மிகவும் அவசியமல்லவா?

எனவேதான் யோகாசனம் பற்றித் தெரிந்து கொள்வதோடு — அதற்கு முன்பாகவே — சத்துணவு பற்றியும் அறிந்து கொள்வது அவசியமாகிறது.

(தொடரும்)

அடுத்த இதழில்....

விளம்பர வில்லன்கள்!
— ஸ்பெஷல் ரிப்போர்ட்

8 இலவச இணைப்புக்களில் மூன்றாவது:

என்றும் இளமையாய் இருப்பது எப்படி?
— 16 பக்க இலவச இணைப்பு

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**ஏனெனில், காம்ப்ளான், குழந்தைகளுக்கு அன்றாடம் தேவைப்படும் அத்யாவசிய ஊட்டச்சத்தை வழங்குகிறது.**

குழந்தைகளின் வளர்ச்சிப் பருவம் சாதாரணமாக 15 அல்லது 16 வயதிலே நிறைவு பெறுகிறது. இந்த வளர்ச்சிக்கு அடிப்படையான ஊட்டச்சத்து, புரதமாகும். ஆகவே, உங்கள் குழந்தைகளுக்கு இப்போது காம்ப்ளான் மிகமிக அவசியம். புரதச் சத்துக்களிலேயே தலைசிறந்த பால்-புரதம் (20%) கொண்டது காம்ப்ளான். மேலும் 22 ஆதார உணவுச்சத்துக்களும் காம்ப்ளானில் உள்ளன.

குழந்தைகள் ஆசையோடு கேட்டு அருந்தும் சுவைகளில் கிடைக்கிறது காம்ப்ளான்.




**23**

மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்
பால் சேர்க்கத் தேவையில்லை

**காம்ப்ளான்®**

GX/62/203 TAM

## திட்டமிட்ட பரிபூரண உணவு

# உன்னைச் சொல்லி குற்றமில்லை



தனித்தனியே நிர்ணயிக்கப்பட்டுள்ள வலுவான நிகழ்ச்சிகள்.

அவற்றை இணைக்க முயலும் மெலிதான் கோடாக உருவாக்கியுள்ள அடிப்படைக் கதை.

படத்தின் பலமும் அதுதான். பலவீனமும் அதுதான்.

பளுவைத் தாங்கி நிற்கும் இரண்டு தோள்களில் ஒன்று ராதாரவியினுடையது. இன்னொன்று கார்த்திக்கினுடையது.

இதில் சற்று அதிகப்படியாகத் தாங்குபவர் முன்னவர்.

ஒரு போலீஸ் அதிகாரிக்குத் தேவையான மிடுக்கும் அலட்டலும் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தப் போராடும்போது ஏற்படும் தாடைகளின் இறுக்கமும் சர்வ அலட்சியமாக அவரிடம் இடம் பெறுகின்றன.

அவ்வளவு பெரிய போலீஸ் அதிகாரி, 'கெட்டும் பட்டணம் சேர்' என்கிற வகையில் நகரத்தையடைந்த கார்த்திக்கை ஓர் ஆள்காட்டியாக (இன்ஃபார்மர்) நியமித்துக் கொண்டு —

அந்த ஆள் காட்டியின் உதவியை மட்டுமே நம்பி வேலையில் சிறந்து விளங்கிப் பதவி உயர்வு பெறுகிறார் என்பதும் —

அதற்காக அவனைப் பாராட்டி நன்றி தெரிவிக்கும் வகையில் தன் வீட்டுக்கு அழைத்து விருந்தளிக்கும் அவரே —

பின்னர் அவன் அந்தத் தொழிலைச் செய்ய மறுக்கிறான் என்பதால் உடனே அவனுக்கு விரோதமாகப் போய் அவனை ஒழித்துக் கட்ட முயலுகிறார் என்பதும் எவ்வளவு செயற்கையோ —

அவ்வளவு செயற்கை, அந்த ஆள் காட்டி திடும் திடுமெனக் கடத்தல்காரர்களின் வியாபாரத்தில் அடிக்கடி குறுக்கிட்டு அவர்களுடைய பணத்தை அடித்துக் கொண்டு போய்க் கோமகவரனாக ஆகிவிடுகிறான் என்பதும்.

ஒரு சாதாரண கிராமவாசி நகரத்துக்கு வந்து தன்னந்தனியாக இப்படிப்பட்ட சாகசங்களைச் செய்து முடிக்க இயலும் போது —

அதிகாரமும் ஆள் பலமும் நிறைந்து விளங்கிய அந்தப் போலீஸ் அதிகாரியால் எப்படி அந்தக் கடத்தல்காரர்களைக் கண்டுபிடித்துக் கைது செய்யக் கடைசி வரையில் இயலாமல் போய் விடுகிறது?

இதுபோல அங்கங்கே நிறையக் கேள்விக் குறிகள்.

பாம்பைத் தன் கைமீது கொத்தவிட்டுக் கொஞ்சி முத்தமிடும் அந்த வித்தியாச வில்லன் கடைசியில் பாம்புகளை அள்ளிக் கைகளில் சுற்றிக் கொண்டு கதாநாயகனுடன் கராத்தே சண்டையில் ஈடுபடுவதும் —

அந்தப் பாம்புகளில் ஒன்றை உருவிப் பிடுங்கி வில்லனின் கழுத்தைச் சுற்றிக் கயிறு போலப் போட்டு இறுக்கி அவனைக் கதாநாயகன் சாய்ப்பதும் நம்ப முடியாத, எல்லைகளைக் கடந்து விட்ட கற்பனை.

"உன்னுடைய ஆள் காட்டி வேலையை விட நான் ஆடைகளை அவிழ்த்துப் போட்டு ஆடுவது மேலான வேலை தான்" என்று கார்த்திக்கிடம் குமுறிச் சீறும் கட்டத்தில் குயிலி பளிச்.

நாலு பாடல்கள். நாலும் இனிமை. அதுவும், 'கெட்டும் பட்டணம் போய்ச் சேர்' அரங்கில் ரசிகர்களின் கைக்கொட்டலை வரவழைக்கிறது.

சண்டைக்காட்சிகளிலும், கடத்தல்காரர்களைக் கார்த்திக்கும் சார்லியும் வழிமறித்துப் பணம் பறிக்கும் கட்டங்களிலும் காமிராவைக் கையாண்டவர் பளிச்சிடுகிறார்.

ஏன், எப்படி என்கிற கேள்விகளையெல்லாம் எழுப்பாமல், சாத்தியமா — அல்லவா என்பது பற்றியெல்லாம் கவலைப்படாமல் உருவாக்கப்பட்டுள்ள விறுவிறுப்பான பொழுது போக்கு.

— சி. ஆர். கே.

# மத்யமர்:

# ஒரு கல்யாண ஏற்பாடு



இங்கேயும் இல்லாமல், அங்கேயும் செல்ல முடியாமல் ஒரு வர்க்கமே இருக்கிறது. இவர்கள் ஏறக்குறைய நல்லவர்கள்: பெரும்பாலும் கோழைகள். பணக்கார சௌகரியங்களுக்குத் தொட்டும் தொடாத அருகாமையில் இருப்பவர்கள்.

பக்தி, காதல், பரிவு, பாசம், தியாகம், நேர்மை போன்ற குணங்களைத் தேவைக்கும் அவசரத்துக்கும் ஏற்பச் சற்று மாற்றிக் கொள்பவர்கள். சமூகம் வாசல் கதவைத் தட்டுவதைக் கேட்காதவர்கள்... இந்த மௌனப் பெரும்பான்மையினருக்கு ஒரு பெயர் உண்டு.

மத்யமர்.

இவர்களைப் பற்றிய பன்னிரண்டு கதைகளில் முதல் கதை இது.

சுஜாதா

நடு ராத்திரி சுரேஷ் போன் பண்ணினான். ராமநாராயணனுக்கு அந்த வேளையில் அமெரிக்காவிலிருந்துதான் கால் வரும் என்று தெரியும். ராங் நம்பர் பகல் வேளைகளில்தான் வரும். எடுத்ததும் சர்வதேச 'பீப்' ஒன்று கேட்கச் சற்று நேரம் அலை ஓசைக்குப் பின் "ஹலோ!"

"அப்பா? ஹௌ ஆர் யூ? ஹௌ ஈஸ் அம்மா? சுரேஷ் ஹியர்."

"நாங்க சௌக்கியமா இருக்கோம் சுரேஷ். இதோ அம்மாகிட்ட பேசு."

போனைக் கஸ்தூரியிடம் கொடுத்தார். கஸ்தூரி எதற்காகவோ கண்ணாடி மாட்டிக் கொண்டாள்.

"அம்மா எப்படியிருக்கே? இந்த கிறிஸ்துமஸ் ஹாலிடேஸின் போது வரேன். ஓகே? ஒரு மாதிரி சிம்பிளா மேரேஜ் செட்டில் பண்ணிடு. ஓகே? ஜாஸ்தி பெண் பார்க்க வேண்டாம். நீயே ஒண்ணு ரெண்டு பார்த்து செலக்ட் பண்ணி வை. ஓகே? போட்டோ அனுப்பி வைச்சா நான் பார்த்து ஓகே சொல்லிடறேன். ஓகே? லெட் மி ஜஸ்ட் டாக் டு ஹர்.... யு நோ ஃப்பார் எ வைவ். மாம், நீ பார்த்து ஓகே சொன்னால் போதும்-ஓகே?"

"தை மாதம் பிறக்கிற வரைக்கும் இருந்தால் முதல் முகூர்த்தத்திலேயே கல்யாணத்தை முடிச்சுடலாண்டா சுரேஷ்."

"தை... தட் மீன்ஸ் மிட் ஜன்யுவாழி. ஓ தட்ஸ் இம்பா...ஸிபிள் நோ வே! லெம்மி ஜஸ்ட் டாக்டு மாக்ஸ் மா லெம்மி ட்ரை... ஐ மைட் ஜஸ்ட் பி ஏபிள் டு மேக்கிட் கம்பைனிங் எ டோக்கியோ விஸிட்... டோன் ப்ழாமிஸ். ஒக்கே பை!"

"என்ன சொன்னான்?" என்றார் ராமநாராயணன். அவள் போனை வைத்ததும்.

"என்னவோ இழுத்து இழுத்துப் பேசினான். பாதி புரியலை."

"கல்யாணம் பண்ணிக்கிறானாமா?"

"ஆமாம். பொண் பார்த்துடுன்னான். கிறிஸ்த்மஸுக்கு வர்றானாம். நீங்க பேசக் கூடாதோ?"

"அதுக்குள்ளே போனை வெச்சுட்டானே! தூக்கத்தைக் கெடுத்தான்!" ராமநாராயணன் படுக்கையில் போய்ப் படுத்து விட்டத்தை இருட்டில் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு ப்ராஸ்டேட் உபத்திரவம் உண்டு. சிறுநீர் கழிக்க வேண்டும் போல இருக்கும். போனால் வராது. இம்சை. ராமநாராயணன் ஜியலாஜிகல் சர்வேயில் சீனியர் ஜியாலஜிஸ்ட்டாக ஓய்வு பெற்றவர். டைரக்டர் பதவி கிடைக்கவில்லை. பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணி கோவாவில் இருக்கிறாள். மாப்பிள்ளை மெட்டலர்ஜிஸ்ட். மூத்தவன் சுரேஷ் பெங்களூர் யுனிவர்ஸிடியில் படித்து அமெரிக்கா போய் மிஸ்ஸோரி ரோலாவில் எம். எஸ். படிப்பு முடித்து அங்கேயே வேலை கிடைத்து பீட்டர் கிராஃபிகான் என்கிற கம்பெனியில் வைஸ் பிரசிடெண்டாக இருக்கிறான். அவனுக்குத்தான் கல்யாணப் பேச்சு இப்போது.

**Wanted handsome Non-Bharadwaja graduate girl of 24 for US based Iyengar boy, 175 cms, Green Card Holder coming in January for matrimony. Decent, early marriage, no dowry, contact Post Box. ............**

விளம்பரத்துக்கு நிறைய பதில்கள் வந்து. அதில் பத்தைத் தேர்ந்தெடுத்து

சுஜாதா

போட்டோ கேட்டு அனுப்பி வைத்து அவை களில் இரண்டைத் தேர்ந்தெடுத்து சுரேஷுக்கு அனுப்பி, அவன் அவ்விரண்டில் ஒன்றை முதலில் தேர்ந்தெடுத்து போனில் சொல்ல வெள்ளிக்கிழமை ராமநாராயண னும் கஸ்தூரியும் பெண் பார்க்கச் சென் றார்கள். ரொம்ப நாட்களாக ஷெட்டில் வைத்திருந்த காருக்கு கேனில் பெட்ரோல் வாங்கி வந்து ஊற்றி கார்பரேட்டரைச் சுத்தம் செய்து கிளப்பிக் கொஞ்ச நேரம் பாட்டரி சார்ஜ் பண்ணி டர்டர் என்று கிளம்பிச் சற்றே ஆடிக் கொண்டு அடையாறிலிருந்து கிளம்பிப் போனார்கள்.



நரசிம்மன் பெண் நந்தினிக்குத்தான் சுரேஷைப் பார்க்கப் போகிறார்கள். நரசிம் மனின் மனைவி வத்சலா தலைமுடியை டை அடித்துக் கொண்டு லாக்கரில் இருந்த நகைகளைக் கொண்டு வந்து மாட்டிக் கொண்டாள். பழைய மாம்பலத்திலிருந்து ஏழை பிராமணியை வரவழைத்து முந்திரிப் பருப்பு கேக்கும் சௌசௌ மிக்சரும் பண்ணி வைத்திருந்தாள். நரசிம்மன் கூடத்து அலமாரியில் இருந்த ஹெரால்டு ராபின்ஸ் புத்தகங்களை நீக்கி ஜே. கிருஷ்ணமூர்த்திகளை அடுக்கினார். அவர் சிவில் ஏவியேஷனில் இருக்கும் போது கனடா போயிருந்த போது வாங்கி வந்திருந்த மாண்ட்ரியால் பொம்மைகளைத் தூசு தட்டி அலங்கார அலமாரியில் வைத்தார். சிகரெட் பாக்கெட்டை மறைத்து வைத்தார். நந்தினி லெண்டிங் லைப்ரரிக்குப் போயிருந்தவள் திரும்ப வந்ததும் வற்புறுத்தி ஜீன்ஸ் வேண்டாம் என்று சொல்லப் புடைவை கட்டிக் கொண்டாள். அவ்வப்போது இடுப்பிலிருந்து நழுவுவதை ஜானகி மாமிதான் செருகி விட்டாள். நந்தினி காதுக்குத் தோடு போட முடியவில்லை. தூர்ந்து விட்டதால் வலிக்கிறது என்று சொன்னாள். "அவா வந்தால் சொல்லிக்கிறேன், வேணும்னா வைரத் தோட்டைக் காமிச்சுரலாம்."



"எல்லாம் வேஸ்ட்டு" என்றாள் நந்தினி.

"இருந்தும் காமிக்க வேண்டியது நியாயம்தானே!"

ஐந்து மணிக்கு ராமநாராயணன் வந்தார். "வாங்கோ, வாங்கோ!" என்று குழைவாக வரவேற்று, "என்ன இவ்வளவு லேட்டு? வீடு கண்டுபிடிக்கிறதில் சிரமமா?" என்றார் நரசிம்மன்.

கஸ்தூரி, "இல்லை, கார் கொஞ்சம் நடுவழியில்... நின்னுடுத்து... அதை வித்துட்டுப் புதுக் கார் வாங்கணும்னு இருக்கோம்.



அதுக்கு வேளை வரலை....'' என்றாள்.

''புதுக் காரா?'' என்பது போல் ராமநாராயணன் பார்க்க, அவள், ''பூட்ஸைக் கழட்டிடுங்கோ...'' என்றாள்.

''பரவாயில்லை, இருக்கட்டும். நோ ஃபார்மாலிட்டிஸ். நாங்கள்லாம் டில்லி மனுஷா!''

''எதுக்கும் சம்பிரதாயம்னு ஒண்ணு இருக்கோல்லியோ?'' ராமநாராயணன் ஷூவைக் கழற்றி, ஸாக்ஸ் ஓட்டைகளுடன் உள்ளே நுழைந்தார். அவர் கால் வாசனையை அடுத்த அறையில் உணர்ந்து ஜூடி குரைத்தது.

''நாய் இருக்கா?'' என்றார் ராமநாராயணன் பயந்து போய்.

''கட்டிப் போட்டிருக்கோம்.''

''உங்க வீட்டுப் பொண்ணு என்ன உசரம்?'' என்றாள்.

''ஃபைவ் ஃபைவ்... ஃபைவ் சிக்ஸ் கூட இருப்பா. உயரம் சரியாத்தான் இருக்கும்.''

''சுரேஷ் 5-9''

''5-9, எங்கன்னா. 5-11 இருப்பான்.

பட்டாபியை விட உயரமில்லையா? போட்டோ கூட இருக்கே.''

''பட்டாபிங்கறது?''

''எங்க மாப்பிள்ளை. கோவாவில் எம்எம்டிஸில இருக்கார். மெட்டலர்ஜிஸ்ட்.''

''உங்க ஸன் எப்ப வர்றார்?''

''டிஸம்பர் 31 — ஆம் தேதி பான் அமெரிக்கன்ல வர்றான்... நேத்திக்குக் கூட போன் பண்ணினான்.''

''போட்டோ பார்த்தாராமா?''

''பார்த்துட்டு ஓக்கேன்னுட்டாம்மா. நாங்க வளவளன்னு சுத்தி வளைச்சுப் பேச மாட்டோம் வத்ஸலா... பெண்ணைப் பெத்தவா கஷ்டம் நன்னாவே தெரியும் எங்களுக்கு. எனக்கும் பெண் இருக்கா... அப்புறம் என் பிள்ளை நான் சொல்றதைக் கேட்பான். அவனுக்கு ஒரு ஒரு வாசப்படியா ஏறி இறங்கிப் பொண்ணைப் பார்த்துட்டு இது நன்னாருக்கு, அது நன்னாயில்லைன்னு சொல்ல இஷ்டமில்லை. அவன் பொம்மனாட்டியோட கஷ்டம் தெரிஞ்சவன். சின்ன வய்சிலிருந்தே இன்டிபெண்டண்டா வளர்ந்தவன். சுயமா ஒரு வத்தக் குழம்பு சாத்தமுது (ரஸம்) எல்லாம் வெச்சுக்கத் தெரிஞ்சவன்...''

''அமெரிக்காவிலே போயுமா?'' என்றார் நரசிம்மன்.

''அமெரிக்கா போனதால் நம்ம சம்பிரதாயங்கள்லாம் மாறிடணுமா என்ன....? சம்பந்தி....ஏறக்குறைய சம்பந்தம் ஆனப்பலதான். அதனால் சம்பந்தின்னே கூப்பிடறேன்... நம்ப மாட்டீங்க, நீங்க. என் பிள்ளை சந்தி பண்றான், சகஸ்ரநாமம் சொல்றான்...''

''பிரம்மோத்ஸவத்துக்கு பிட்ஸ்பர்க் போய் அங்கே ரெண்டு நீக்ரோக்களுக்கு முழு கஷ”ப்படிக்கு அர்த்தம் சொல்லிக் கொடுத்தான்னா பார்த்துக்கங்களேன்!''

''அடடா, த்ஸொ, த்ஸொ!''

''உள்ளூர்லதான் கெட்டுக் கிடக்கு ஜனங்கள்! அவாளுக்கெல்லாம் அங்கே போனா ஒரு ரிவர்ஸல் மாதிரி வந்துடறது. பிட்ஸ்பர்க்கிறது என்னமோ தேவலோகம் போல இருக்கு... ஊஞ்சல் என்ன, தேர் என்ன...! பக்தி மேற்கே போயிடுத்து.''

''நீங்க போயிருக்கேளா?''

''போன ஜூலைல போயிருந்தோமே! அப்பதான் குளிர் இருக்காது!''

அப்போது நந்தினி உள்ளே வந்து இரண்டு தட்டுகளில் கேக்கும் மிக்ஸரும் கொண்டு வைத்து, ''மாமா, உங்களுக்கு காப்பில ஷுகர் போடலாமா?'' என்று கேட்டாள்.

''வேண்டாம்மா!''

''உங்களுக்கு டயபடிஸா?'' என்றார் நரசிம்மன்.

''மைல்டா இருக்கு. உங்களுக்கு?''

''எனக்கும் மைல்டுதான்.''

''பெரியவாளை சேவிம்மா.''

''அதெல்லாம் வேண்டாம். தீர்க்காயுசா இரும்மா.... நீ என்ன படிச்சிருக்கே?''

''பி. எஸ்ஸி. பாட்டனி!''

''மெடல்லாம் வாங்கியிருக்கா ரிபப்ளிக் டே பரேடில... பரத நாட்டியம் சரசாகிட்ட எட்டு வருஷம் கத்துண்டா. நீடில் ஒர்க் க்ரோஷா எல்லாம் அப்படி செய்வா. ஆயில் பெய்ண்ட் பண்ணுவா... அதோ பாருங்கோ,'' என்று மான்குட்டி தோட்டத்தில் விளையாடும் சித்திரத்தைக் காட்டினார் நரசிம்மன்.

''சுரேஷ் லைக்ஸ் யு வெரிமச். ஹி வாண்ட்ஸ் டு டாக் டுயு... உங்காத்து போன் நம்பர் என்ன?''

''போனுக்குப் போட்டிருக்கு. இன்னும் வரலை. 'ஓ ஒய்ட்டி'யே நாலு வருஷமா கும்கிறா, என்ன கவர்ன்மெண்ட்!''

''என் ஷட்டகர் பி அண்ட் டில இருக்கார். உங்க அப்ளிகேஷன் நம்பரைச் சொல்லுங்கோ!''

''போன் இருக்கட்டும். இப்ப என்ன ஏற்பாடு? ஒண்ணாம் தேதி பையனை அழைச்சுண்டு வர்றேளா?''

''ஆமாம், ஒண்ணாம் தேதி என்ன கிழமை?''

''திங்கள்... ராகு காலம் விட்டு எப்ப வேணா வர்றோம். ஒரு ஃபார்மாலிட்டி மாதிரிதான். சுரேஷ் சரின்னுட்டான். உங்களுக்கு ஆட்சேபணை இல்லைன்னா உடனே சிம்பிளா ஒரு கல்யாணத்தை...''

நந்தினி, ''எக்ஸ்க்யூஸ் மி'' என்று எழுந்து உள்ளே போனாள்.

''வெக்கப்படறா.''

''அவனும் பார்த்துப் பேசிச் சம்மதம் சொல்லட்டும். நம்ம டெசிஷனை ஃப்பாஸ பண்ண வேண்டாம்.''

''உங்க பையன் ஃபோட்டோ இருக்கா?''

''கொண்டு வந்திருக்கமே!''

அதை வத்சலா வாங்கிப் பார்த்து நரசிம்மனிடம் காட்டி, ''நம்ம சம்பத் ஜாடையா இல்லை?'' என்று கேட்டாள்.

''எந்த சம்பத்து....?''

''குளித்தலை சம்பத்து!''

''சேச்சே.''

''பின்னே யார் மாதிரி இருக்கார்?''

''இவர் யார் மாதிரியாவும் இல்லே... ஹி ஈஸ் எ ஹாண்ட்ஸம் பாய்! எங்க நந்தினி குடுத்து வெச்சவ....''

''இப்பவே கம்பெனி வைஸ் பிரசிடெண்ட். கம்ப்யூட்டர் சம்பந்தமா பெரிய காண்ட்ராக்ட் கிடைச்சிருக்காம். கலிஃபோர்னியாவிலே நல்ல பேரு. ஒரு வருஷத்துக்குத் தொண்ணூறாயிரம் டாலர் வர்றது. வீடு வாங்கிட்டான். கார் எல்லாம் தண்ணி பட்ட பாடு!''

''இப்ப கல்யாணம் ஆச்சுன்னா உடனே பெண்ணை அழைச்சுண்டு போக முடியுமா?''

''சில பேர் அப்படியும் பண்றா. ஸ்டுடண்ட் விசாவில் போய் அங்கே ஒரு சிவில் மாரேஜ் பண்ணி... அதுல கொஞ்சம் ரிஸ்க் குங்கறா!''

''எல்லாம் அவன் வந்தப்புறம் விவரமாச் சொல்லுவான். வத்சலா உக்காருங்கோ. ஏதும் தாம் தூம்னு செலவு பண்ண வேண்டாம். எங்க வீட்டிலே மனுஷாள் அதிகம் கிடையாது. இவாத்தில பிரதர்ஸ் எல்லாரோடேயும் சண்டை. மிஞ்சி மிஞ்சிப் போனா இருபது முப்பது பேர்தான் வருவோம். அதனால சிம்பிளா உட்லண்ஸ்ல முடிச்சுடலாம். ரிஸப்ஷன் கூட வேண்டாம்னுட்டான். ஆடம்பரமே வேண்டாம்... இப்படி கல்யாணத்துக்கு வீண் செலவு பண்ணியே ஐயங்கார் கம்யூனிட்டியே அழிஞ்சுண்டிருக்கு. அதனால...''

''ஸாரி, எங்ககிட்டே வீண் செலவு பண்றதுக்குக் காசும் இல்லை. நான் ஒரு ரிட்டையர்டு சென்ட்ரல் கவர்ன்மெண்ட் ஆபீசர், 'அன்கர்ரப்ட்.'''

''நானும்தான்.''

''அதனால ஏதோ எங்களால முடிஞ்சது...''

வத்சலா தொடர்ந்து, ''காதுக்குத் தோடு பண்ணியிருக்கோம். இருபது சவரன் நகை, எங்கம்மா கொடுத்த வெள்ளிப் பாத்திரங்கள், கொஞ்சம் இருக்கு. ஒரு செட்டு எவர்சில்வர் பாத்திரம். குத்துவிளக்கு குடம்... சாந்தி கல்யாண கட்டில்...''

''கட்டில் எல்லாம் வேண்டாம்.''

''ஏதோ நாங்க பண்ணிப் போடறதைப் போட்டுடறோம். அதை வெச்சுக்கிறதோ, விட்டுடறதோ அவா பாடு. எங்க

---

''எழுத்தாளர் நீங்க. உங்க பேருக்குப் பின்னாடி 'மாஸ்டர் ஆஃப் சர்ஜன்'னு போட்டிருக்கு?''

''நிறைய ஜோக் எழுதி வாசகர்களை அறுக்கிறேன்னு அவுங்களா எனக்குக் கொடுத்த பட்டம் அது!''

—எஸ். எஸ். ஸ்ரீராம்.



# மத்யமர்: வாசகர் விமர்சனம்

**ம**த்தியதர வகுப்பினரின் பலங்கள், பலவீனங்கள் இவற்றைப் பிரதிபலிப்பது போல் பல சிறுகதைகளை எழுதி வருவார் சுஜாதா. கரு, அதனைக் கையாண்டுள்ள உத்தி, நடை, போன்ற பல அம்சங்களையும் கருத்தில் கொண்டு அவற்றுள் ஏதேனும் ஓர் அம்சத்தை மட்டும் தேர்ந்தெடுத்து தபால் கார்டில் எழுதி அனுப்பப்படும் விமர்சனங்களை வரவேற்கிறோம். தலைப்புத் தந்து, சிறுகதையின் பலத்தை மட்டுமின்றி பலவீனமிருப்பின் அதனையும் விமர்சிக்கலாம். பிரசுரமாகும் விமர்சனங்களுக்கு ரூ. 25 சன்மானம். சிறந்த விமர்சனத்துக்கு ரூ. 50 சிறப்புப் பரிசு.

**இந்த வாரக் கதைக்கு முடிவு தேதி 17.4.90.**



பொண்ணு அப்புறம், அம்மா அப்பா இதைச் செய்யலை, அதைச் செய்யலைன்னு குறை சொல்லக் கூடாது பாருங்கோ!''

''தலையை கட் பண்ணிண்டுட்டாளா?''

''ஆமாம். நிறைய காடா வளர்ந்திருந்தது... பொடுகு ஜாஸ்தியாய்ப் போயி ஷார்ட்டா வெட்டிண்டுட்டா!''

''அதானே பார்த்தேன். போட்டோல பார்த்ததுக்கும் நேர்ல பார்த்ததுக்கும் கொஞ்சம் வித்தியாசமா இருந்தது.''

''ஜாதகம் பார்த்தேளா?''

''பார்த்தோம். நன்னாப் பொருந்தியிருக்கு.''

''அப்ப, ஏறக்குறைய பக்கா ஆன மாதிரி தான்!''

சுவர்க் கடிகாரம் மணி அடித்தது.

''ஆர் யூ ரெடி ஃபார் என் ஏர்ளி மாரேஜ்?''

''நிச்சயம். என் பிரதர் இன்லா இண்டியன் ஏர்லைன்ஸ்ல இருக்கார். அவர் எல்லா ஏற்பாடுகளையும் பண்ணிடுவார்... தை முதல் முகூர்த்தத்தில் முடிச்சுடலாம்.''

''வெரிகுட்.''

''அப்ப இங்கட்கிழமை...?''

''நாங்க ஸண்டே ஏர்போர்ட்டுக்கே வர்றோம் ஸார்.''

''எதுக்குச் சிரமம்?''

''எதுவும் சிரமம் இல்லை. பிரதர் இன்லா ஏர்லைன்ஸ்ல இருக்கிறதால கஸ்டம்ஸ் கிளியரன்ஸ் எல்லாம் சுலபமா...''

''அப்ப வரட்டுமா?''

''நந்தினி, மாமா போய்ட்டு வர்றேங்கிறார் பாரு.''

நந்தினி வெளியே வந்து நாயுடன், ''பை'' என்றாள். இப்போது சட்டை பாண்ட் அணிந்திருந்தாள்.

**வீ**டு திரும்பும் போது ராமநாராயணன் ''அந்தப் பொண்ணு பேசவே இல்லையே!''

''பேசாட்டி என்ன இப்ப? சித்துப் பண்ணி வெச்சாப்பல பளிச்சுன்னு சேப்பா அழகா இருக்கா. கிளி கொஞ்சறது மூஞ்சில. சுரேஷுக்கும் கச்சிதமாப் பொருந்தும்! அமெரிக்கால ஃபேஷனா இருக்கறதுக்குத் தோதுப்படும்!''

**ந**ரசிம்மன் வத்சலாவிடம் ''என்ன சொல்றே?''

''என்னத்தைச் சொல்றது? இதை விட நல்ல இடம் நமக்குக் கிடைக்காது. எப்படியாவது இந்தப் பெண்ணை...!''

''நந்தினி ஒப்புத்துப்பாளா?''

''அமெரிக்காங்கிறதால ஒத்துப்பா!''

''அதை அவாகிட்ட சொல்ல வேண்டாமா?''

''எதை?''

''டில்லியிலே ஒரு மாசம் உம் பொண்ணு அந்த பஞ்சாபிப் பையனோட...''

''நீங்க பேசாம இருங்கோ. அது முடிஞ்சு போன கதை...''

''**அ**தை அவாகிட்டச் சொல்ல வேண்டாமா?'' என்றார் ராமநாராயணன்.

''எதை?''

''அமெரிக்காவில உன் பையன் நீக்ரோ பெண்ணைக் கல்யாணம் பண்ணிண்டு டைவோர்ஸ் வாங்கினதை....!''

''நீங்க பேசாம இருங்கோ. அது முடிஞ்சு போன கதை!''

# ஆர்.கே. லக்ஷ்மண்


* ஆர். கே. லக்ஷ்மண்

கேள்வி: உங்களால் எப்படி இத்துணை இயல்பாக 'வாக்லே' பாத்திரத்துடன் ஒன்றி நடிக்க முடிகிறது?

பதில்: சாதாரணமாக, ஒரு காரெக்டரை 'ஸ்டடி' செய்தபின், டைரக்டரின் எதிர்பார்ப்பை ப் புரிந்து கொண்டு, நானே கொஞ்சம் 'மசாலா' சேர்த்து, 'ரோலை'க் கலகலப்பாக்குவேன். ஆனால் வாக்லே விஷயத்தில் செயற்கையாக எதையும் சேர்க்கவில்லை! அந்தச் சந்தர்ப்பத்தில் அஞ்சன் ஸ்ரீவ த்ஸவ் எனும் சாதாரணன் என்ன செய்திருப்பான் என யோசித்து, அப்படியே இயற்கையாகச் செய்து விட்டேன். எனினும் 'வாக்லே'யின் வெற்றியில் பெரும் பங்கு ''லக்ஷ்மண்'' ஜிக்குத்தான்.

**அபத்தமும் விரசமும்தான் நகைச்சுவை என்ற பரிதாபமான நிலைமை உருவாகியுள்ள இந்நாளில் 'வாக்லே கே துனியா' போன்ற எளிய ஆர்பாட்டமில்லாத நகைச்சுவை நாடகத் தொடரைக் காணும் போது மனம் குளிர்கிறது. இத் தொடரை ரசிக்க மொழி ஒரு தடையாக இல்லையென்றால் அதற்குக் காரணம் 'வாக்லே' கதாபாத்திரம் நம்மைப் போன்ற மத்தியதர, சராசரி மனிதர்களின் பிரதிபிம்பமாகத் திகழ்வது தான். வாக்லேயாக நடிக்கும் — இல்லை வாழ்ந்து காட்டும் — நடிகர் அஞ்சன் ஸ்ரீவத்ஸவ் கல்கிக்கு அளித்த பேட்டி:**

கே: ஆர். கே. லக்ஷ்மணுடன் உங்களுக்கு ஏற்பட்ட அனுபவங்களைக் கூறுங்களேன்.

ப: என்னை அவருக்கு அறிமுகப்படுத்திய குந்தன்ஷா, ''உனக்கு நடிக்க வாய்ப்புக் கிடைக்கிறதோ, இல்லையோ, லக்ஷ்மணின் நடிப்பைப் பார்க்க வாய்ப்புக் கிடைக்கிறதே என்று சந்தோஷப்படு'' என்று சொல்லிக் கொண்டிருந்தார். வாக்லே பாத்திரத்துக்குப் பலர் தேர்வு செய்யப்பட்டு நிராகரிக்கப்பட்டார்கள் என்று தெரிந்ததும் எனக்கு நம்பிக்கையே போய் விட்டது. அசிரத்தையாயிருந்தேன். முதலில் லக்ஷ்மண் நடித்துக் காட்டினார்; அப்படியே அசந்து விட்டேன். அவர் நடிகரிடமிருந்து மிதமான இயற்கையான நடிப்பை எதிர்பார்க்கிறார் என்பதைப் 'பளிச்'சென்று புரிந்து கொண்டேன். ஸ்க்ரிப்டைக் கொடுத்து என்னைப் படிக்கச் சொன்ன போது மிகக் கவனமாக அ .க்கி வாசித்தேன். என்னை வைத்து ஒரு 'எபிஸோட்' படமாக்க முடிவாயிற்று! 'உனக்கு லாட்டரி அடித்திருக்கிறது' என்று குந்தன்ஷா பாராட்டினார். எல்லோருக்கும் என் நடிப்பு நூறு சதவிகிதம் பிடித்திருந்ததென்றால் லக்ஷ்மணுக்கு எண்பது சதவிகிதம்தான் பிடித்தது! அதனால் அவர் என்னோடு அயராது உழைத்தார்.

தரத்தை மட்டும் மனத்தில் கொண்டு ஆறு பகுதிகளைத்தான் முதலில் தயாரித்தார். தயாரிப்புக் குழுவுடன் விவாதித்து, விவாதித்து ஒரு வாரத்துக்கான கதையைத் தீட்ட இருபது நாட்கள் எடுத்துக் கொள்வார். ஷூட்டிங்கும் அவர் மேற்பார்வையில்தான் — ஒரு பகுதியை எடுத்து முடிக்க ஐந்து நாட்கள் ஆகும்! படப்பிடிப்பின் போது எங்கள் டயலாக்கை உன்னிப்பாகக் கவனிப்பார்; சற்றே தொனி உயர்ந்தாலும் கண்டுபிடித்துத் திருத்துவார். அவர் சிரிப்பினூடே மக்களைச் சிந்திக்க வைக்கத் தெரிந்த மேதை! 'வாக்லே'யிலும் ஹாஸ்யத்தின் முடிவில் ஒரு சோக ரேகை இழையோடுவதை மிக உன்னிப்பாகக் கவனித்தால் புரிந்து கொள்ள முடியும்.

கே: வாக்லே 'இமேஜ்' உங்களை எந்த அளவு பாதித்துள்ளது?

ப: இந்தியா முழுவதிலுமிருந்து ரசிகர்களின் பாராட்டுக் கடிதங்களைப் பார்க்கும் போது நிறைவாக இருக்கிறது; ''வாக்லே சாப்'' என்றே என்னை அக்கம் பக்கத்தில் எல்லோரும் அழைப்பது, இந்த 'வாக்லே' இமேஜின் ஆழத்தைப் புலப்படுத்துகிறது. இனி குறிக்கோளுடன் நடிக்க வேண்டும். டைரக்டர்கள் — ரோல்கள் இரண்டையும் நாம் பார்த்துத் தேர்வு செய்ய வேண்டும். இதுபோன்ற ஒரு ரோலை திரைப்படத்துக்காகவும் செய்ய வேண்டுமென்ற பல உணர்வுகள் தலைதூக்கியுள்ளன.

கே: இத் தொடரில் நீங்கள் தோன்றும் போது மக்கள் உங்களைப் பார்த்துச் சிரிக்கிறார்களா? உங்களுடன் சேர்ந்து சிரிக்கிறார்களா?

ப: பலரும் என்னைப் பார்த்தே சிரிக்கிறார்கள். தான் தவறு செய்யும் போது சிரிக்காத மனிதன், மற்றவன் அதே தவறைச் செய்யும் போது சிரிக்கிறான். 'வாக்லே'யில்

# எளிதில் 'ஓ.கே.' கூறமாட்டார்!

அடங்கியுள்ள தத்துவமே இதுதான். என்னைப் பார்த்து அவர்கள் சிரிக்கும் போது தங்களைத் தாங்களே பார்த்துச் சிரித்துக் கொள்கிறார்கள்; தங்களிடம் தாங்களே அனுதாபம் கொள்ளவும் செய்கிறார்கள். ஆனால் இதை எத்தனை பேர் உணர்ந்து செய்கிறார்களோ தெரியாது.

நடிகர் அஞ்சன் ஸ்ரீவத்ஸவ், நிஜ வாழ்க்கையிலும் கொஞ்சம் வாக்லே போலத்தான்! படிப்பிலே பிரகாசிக்காத இவரை, முட்டி தட்டித்தான் பி. காம். தேற வைத்தார் இவர் தந்தை! தாம் வேலை பார்த்து வந்த வங்கியிலேயே எப்படியோ வேலையும் வாங்கித் தந்து விட்டார்!

ரேடியோ நாடகங்களிலும் கல்கத்தா மேடை நாடகங்களிலும் நடித்து வந்த ஸ்ரீவத்ஸவ், பம்பாய் வந்து சேர்ந்தார். நடிக்க வாய்ப்புக் கிடைப்பது குதிரைக் கொம்பாகத்தான் இருந்தது. ''பேசாமல் தலை முழுகி விட்டு பாங்க் உத்தியோகத்தில் கவனம் செலுத்து'' என்ற உபதேசம்தான் எளிதாக எல்லாரிடமிருந்தும் கிடைத்தது. அதிர்ஷ்டவசமாக ''பக்ரீ'' என்னும் அரசியல் ஸடையர் நாடகத்தில் — வேறு யாரும் ஏற்கத் தயாராக இல்லாததால் — மொரார்ஜி தேசாய், இந்திரா காந்தி ஆகிய இரு வேடங்களில் நடித்தார் ஸ்ரீவத்ஸவ். இந் நாடகத்தை கே. ஏ. அப்பாஸ் பதின்மூன்று தடவை பார்த்துச் சிரித்துப் பாராட்டினார்! அவர் உதவிக்கரம் நீட்ட, ஸ்ரீவத்ஸவ் வளர்ந்து, முப்பது திரைப் படங்களில் சிறிதும் பெரிதுமான ரோல்களில் நடித்தார். இத்தனைக்கிடையிலும் பாங்க் வேலையை அவர் விட்டு விடவில்லை. கடமையைச் செவ்வனே செய்வதுடன், பி. ஆர். ஓ. போலச் செயல்பட்டு, நிறைய டெபாஸிட் வேறு வாங்கித் தருவதால் நிர்வாகத்துக்கு ரொம்பத் திருப்தி.



• தொடரில் ஒரு காட்சி



• அஞ்சன் ஸ்ரீவத்ஸவ்

அஞ்சன் ஸ்ரீவத்ஸவிடம் விடைபெறு முன் கடைசியாகக் கேட்ட கேள்வி: ''நடிப்புத் துறை உங்களுக்கு ரொம்ப சந்தோஷத்தை அளித்திருக்கிறது. மனத்தை ரொம்பப் பாதித்து வருத்தமளித்த சம்பவம் ஏதேனும் உண்டா?''

பதில்: ஒருமுறை ராஜஸ்தானில் படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்த போது, எனக்கு மறுநாள் வேலையில்லை என்பதை உறுதிப்படுத்திக் கொண்டு தூங்கி விட்டேன். மறுநாள் என்னை அவசர அவசரமாக எழுப்பி, டைரக்டர் ஜே. பி. முன் செட்டில் கொண்டு நிறுத்தினார்கள். அங்கே பெரிய பெரிய ஸ்டார்களிலிருந்து ஜூனியர் ஆர்டிஸ்டுகள் வரை பலர் குழுமியிருந்தனர். அனைவர் எதிரிலும், என்னைப் படப்பிடிப்புக்கு லேட்டாக வந்ததாக டைரக்டர் கன்னா பின்னாவென்று கத்தித் தீர்த்து விட்டார்! காமிராமேனோ 'வாயைத் திறக்காதே' என்று சைகை காட்டினார். அவமானத்தால் நான் குன்றினேன். அன்றிரவே சகஜமாக என்னுடன் டைரக்டர் அளவளாவிய போது தான் தெரிய வந்தது — அன்று ஹேமாவும், தர்மேந்திராவும் மிகத் தாமதமாக வந்ததால், அவர்களைத் திட்டவும் முடியாமல், திட்டாமல் இருக்கவும் முடியாமல் என்னை வைத்து நாடகமாடியிருக்கிறார் என்பது! ஈகோ அவ்வப்போது தலைதூக்கினாலும், லட்சியம் ஒன்றையே நினைத்து கோபதாபங்களை அடக்கிக் கொள்ளக் கற்றுக் கொண்டு விட்டேன்.''

பேட்டி: ஜெயஸ்ரீராஜ்

படங்கள்: ரதிஜித் கடக்

# பொன்னியின் செல்வன்



## அத்தியாயம் 71
## 'திருவயிறு உதித்த தேவர்'

செம்பியன்மா தேவியைப் பார்க்கவேண்டுமென்று சுந்தர சோழர் பல முறை சொல்லி அனுப்பிய பின்னர், அம் மூதாட்டி சக்கரவர்த்தியைக் காண்பதற்கு வந்தார். சக்கரவர்த்தி அவர் வரும் செய்தி அறிந்து வாசற்படி வரையில் நடந்து சென்று காத்திருந்து வரவேற்று அழைத்துச் சென்றார். தம் பக்கத்தில் சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் படி கேட்டுக் கொண்டார்.

"அரசர்க்கரசே! அடுத்தடுத்துத் துயரமான செய்திகளே கேட்டு நொந்திருக்கும் என் உள்ளம் தாங்கள் உடல் நலம் பெற்றிருப்பதைப் பார்த்துத் திருப்தி அடைகிறது. இறைவன் அருளால் நெடுங்காலம் தாங்கள் சிரஞ்சீவியாக வாழ்ந்திருந்து இந்த உலகத்தைப் பரிபாலித்து வர வேண்டும்" என்று முதிய பிராட்டியார் கூறினார்.

"அன்னையே! என் கால்கள் மீண்டும் நடக்கும் சக்தி பெற்றிருப்பதைக் குறிப்பிடுகிறீர்கள். அதைப் பற்றி எனக்கும் திருப்திதான்! இந்தச் சோழ நாடெல்லாம் போற்றி வணங்கும் தாங்கள் வரும்போதும் எழுந்து வரவேற்க முடியாதவனாயிருந்தேன். ஊமையும் செவிடுமான ஒரு தெய்வப் பெண்மணியின் அன்பின் சக்தியால் என் கால்கள் இழந்திருந்த இயல்பை மீண்டும் பெற்றன. எழுந்து நின்றும் நடந்து வந்தும் தங்களை வரவேற்கும் பாக்கியம் பெற்றவனானேன். ஆயினும், தேவி, நான் உயிர் வாழ்ந்திருப்பது பற்றித் திருப்தி அடையவும் இல்லை; இனி நெடுங்காலம் உயிர் வாழ விரும்பவும் இல்லை. தாங்கள் அத்தகைய ஆசி எனக்குக் கூற வேண்டாம். விரைவில் சிவ பதம் கிடைக்க வேண்டுமென்று வாழ்த்துங்கள்!" என்றார் சுந்தர சோழர்.

"சக்கரவர்த்தி! தங்கள் குலத்து மூதாதையர் எல்லாரும் வீர சொர்க்கத்தையோ, சிவ பதத்தையோ அடைந்தார்கள். தங்களுக்கும் பரலோகத்தில் அவர்கள் இடந்தேடி வைத்திருப்பார்கள். உரிய காலம் வரும் போது சிவ கணங்கள் வந்து தங்களை அழைத்துப் போவார்கள். ஆனால் அத்தகைய பதத்தை அடைவதற்குத் தாங்கள் அவசரப்படுதல் ஆகாது. இந்த உலகில் தங்களுக்கு இன்னும் கடமை எவ்வளவோ இருக்கிறது. நேர்மை நெறி பிறழாத தங்கள் ஆட்சியின் கீழ் மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்

அமரர் கல்கி

கிறார்கள். சிவாலய கைங்கரியங்கள் நாடெங்கும் நடைபெற்று வருகின்றன. சைவர்கள், வைஷ்ணவர்கள், புத்தர்கள், சமணர்கள் முதலான பல மதத்தினரும் தங்கள் ஆயுள் நீடிக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்து வருகிறார்கள்....''

''தாயே! அவர்கள் யாரும் இனி அத்தகைய பிரார்த்தனை செய்யலாகாது. என் ஆயுள் நீடிக்கப் பிரார்த்திப்பது என் மனவேதனையை நீடிக்கச் செய்யும் பிரார்த்தனையாகும். சோழ நாடு அளித்த வீரர்களுக்குள்ளே வீராதி வீரனான ஆதித்த கரிகாலனைப் பறி கொடுத்து விட்டு, நான் இவ்வுலகில் நெடுங்காலம் உயிரோடு இருக்க வேண்டுமா? அவன் இறப்பதற்கு முன்னதாக என் உயிர் போயிருக்கக் கூடாதா?....''

''சக்கரவர்த்தி! புத்திர சோகம் மிகக் கொடியது தான். ஆனாலும் விதியின் வலிமையைப் பற்றிப் பேதையாகிய நான் தங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. கிருஷ்ண பகவான் அர்ச்சுனனுடன் இணைபிரியாத் தோழராயிருந்தார். காக்கும் கடவுளாகிய திருமாலின் அவதாரம் கிருஷ்ண பரமாத்மா. அவராலே கூட அரவானையும் அபிமன்யுவையும் காப்பாற்றிக் கொடுக்க முடியவில்லை. அத்தகைய வீரப் புதல்வர்கள் இறந்த பிறகும் அர்ச்சுனன் உயிர் வாழ்ந்திருக்க வில்லையா? பெற்ற பிள்ளைகளின் மீது ஆசை இல்லாதவன் அல்லவே அர்ச்சுனன்? 'மன்னுயிரைக் காக்கும் பொருட்டு நீ உன் உயிரைக் காத்துக் கொள்ள வேண்டும்' என்று கிருஷ்ண பரமாத்மா போதித்ததை ஏற்றுக் கொண்டு அர்ச்சுனன் உயிர் வாழ்ந்தான். சக்கரவர்த்தி! கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்குச் செய்த போதனை தங்களுக்கும் பொருத்தமானது.''

''தாயே! அபிமன்யு போர்க்களத்தில் வீரப் போர் புரிந்து மரண மடைந்தான்; வீர சொர்க்கம் எய்தினான்!''

''தங்கள் குமாரன் வீரத்தில் அபிமன்யுவுக்குக் குறைந்தவன் அல்லவே! பன்னிரண்டாம் வயதில் சேவூர்ப் போர்க் களத்திலும் பதினெட்டாம் பிராயத்தில் வீர பாண்டியன் இறுதிப் போரிலும் ஆதித்த கரிகாலன் புரிந்த வீரச் செயல்களை இந்த உலகம் என்றும் மறக்காதே! அபிமன்யுவைக் கடைசியில் பலர் சூழ்ந்து கொண்டு அவனை நிராயுதபாணியாக்கி அதர்ம யுத்தம் செய்து கொன்றார்கள். அது போலவே ஆதித்த கரிகாலனையும் தந்திரத்தால் தனிமைப் படுத்திச் சதிகாரர்கள் பலர் சூழ்ந்து நின்று திடீரென்று தாக்கிக் கொன்றார்கள்....''

''தாயே! அவன் இறந்தது எப்படி என்பதை மட்டும் நான் நிச்சயமாகத் தெரிந்து கொள்ள முடியுமானால் என்மனம் ஓரளவு நிம்மதி அடையும்.''

''சென்று போனதைப் பற்றி எதற்காக மனத்தைப் புண்படுத்திக் கொள்ள வேண்டும்? கரிகாலனுடைய விதி முடிந்தது; வால் நட்சத்திரம் விழுந்தது; சோழ நாடு ஒரு மகா வீரனை இழந்தது. ஏன், எப்படி என்று விசாரித்து என்ன ஆகப் போகிறது?''

''உண்மை தெளிவாகாத படியால், யார் யார் பேரிலோ சந்தேகம் உண்டாகிறது. தாயே! பூமியை ஆதிசேஷன் தாங்குவது போல் சோழ சாம்ராஜ்யத்தையே தாங்கி வந்தவரான பெரிய பழுவேட்டரையர் மேலேயே சிலர் சந்தேகத்தைக் கிளப்புகிறார்கள்; வீண் பழி சுமத்துகிறார்கள்.''

''அவரையே கேட்டு உண்மையைத் தெரிந்து கொள்ளலாம் அல்லவா?''

''பெரிய பழுவேட்டரையரைக் கேட்க யாருக்குத் தைரியம் உண்டு? எனக்கு இல்லை, தாயே! எப்படியோ அவர் இதில் சிக்கிக் கொண்டு மனம் நொந்து போயிருக்கிறார். என்ன நடந்தது என்று அவராகச் சொல்லாத வரையில், அவரை யார் கேட்க முடியும்? அம்மா! தக்கோலம் போர்க் களத்தில் என் பெரிய தந்தை இராஜாதித்தர் யானை மேல் துஞ்சி வீர சொர்க்கம் புகுந்த பின்னர், சோழ சைன்யம் சின்னாபின்னப் பட்டுச் சிதறி ஓடத் தொடங்கியது. ஓடிய வீரர்களை வழி மறித்து நிறுத்தி மறுபடியும் ஒரு சைன்யமாக்கிக் கன்னர தேவன் படைகளை விரட்டியடித்த மகா வீரர் பெரிய பழுவேட்டரையர். அன்று அவர் அவ்விதம் செய்திரா விட்டால், இன்றைக்குச் சோழ ராஜ்யமே இருந்திராது. தக்கோலத்துப் போரில் அவருடைய திருமேனியில் அறுபத்துநாலு காயங்கள் பட்டன. அப்படியும் அவர் சோர்ந்து விடாமல் போர்க் களத்தில் நின்று வெற்றி கண்டார். அதற்குப் பிறகு அவர் போர்க்களத்துக்கே போகக் கூடாதென்று கட்டுப்பாடு செய்து தனாதிகாரியாக்கினோம். அத்தகைய பெரியவரை, — என் தந்தைக்குச் சமமானவரை, — நான் என்ன கேட்க முடியும்?''

''உண்மை வெளியாவதற்கு வேறு வழி ஒன்றும் இல்லையா?''

''வாணர் குலத்து வந்தியத் தேவன் கரிகாலனுடைய உடலின் அருகில் இருந்தான் என்று சொல்கிறார்கள். அவனைக் கேட்டு உண்மை அறியலாம் என்று எண்ணினேன். அவனும் பாதாளச் சிறையிலிருந்து தப்பி ஓடி விட்டான். இதைப் பற்றிச் சின்னப் பழுவேட்டரையர் முதன் மந்திரிமேல் குறை சொல்லுவதற்கு நியாயம் இருக்கிறது.''



து வரையில் மௌனமாக இருந்த குந்தவை இப்போது குறுக்கிட்டு, "தந்தையே! அந்த வீரரை எப்படியும் கொண்டு வந்து ஒப்புவிப்பதாக முதன் மந்திரி பொறுப்பு ஒப்புக் கொண்டிருக்கிறாரே?" என்றாள்.

"குழந்தாய்! இம்மாதிரி முதன் மந்திரி பல தடவை பொறுப்பு ஒப்புக் கொண்டிருக்கிறார். ஆனால் நிறைவேற்றுவது நிச்சயமில்லை. சம்புவரையர் மகன் கந்தமாறன் ஓடியவனைத் துரத்திக் கொண்டு போயிருப்பதாக அறிகிறேன். கந்தமாறன் அவ்வளவு முன்யோசனைக்காரன் அல்ல; அவசர புத்தி படைத்தவன். அதிலும் சம்புவரையர் குலத்துக்குக் களங்கம் உண்டாகக் கூடாது என்ற ஆத்திர முள்ளவன். அவன் வந்தியத்தேவனைத் தொடர்ந்து போயிருப்பது என் கவலையை அதிகமாக்குகிறது."

"ஐயா! சென்று போனதை மறந்து விடுவதே நல்லது. இனி நடக்க வேண்டியதைப் பற்றி யோசியுங்கள்."

"அன்னையே! அதற்காகவே தங்களை அழைத்து வரச் சொன்னேன். ஆளுக்கு மேல் ஆள் அனுப்பிக் கொண்டிருந்தேன். மேலே நடக்க வேண்டியது பற்றி எனக்கு யோசனை கூறி உதவ வேண்டும்."

"சக்கரவர்த்தி! அறிவிற் சிறந்த அமைச்சர்கள் பலர் தங்களுக்கு யோசனை சொல்ல இருக்கிறார்கள். இந்தப் பேதை ஸ்திரீ என்ன யோசனை சொல்லப் போகிறேன்? என்னைக் கரம் பிடித்து என் ஜீவியத்தைப் புனிதப் படுத்திய மகா புருஷர் இவ்வுலகில் வாழ்ந்திருந்த காலத்திலும் நான் அரசாங்க காரியங்களில் கவனம் செலுத்தியதில்லை. அவர் தேவருலகம் சென்ற பிறகு சிவ கைங்கரியத்திலேயே ஈடுபட்டிருக்கிறேன். என்னால் என்ன யோசனை சொல்ல முடியும்?"

"தேவி! கோபித்துக் கொள்ளக் கூடாது. எங்கள் சோழ குலத்தில் தோன்றிய பெண்கள் எல்லாரும் பேதைகளாயிருக்கவில்லை. இதோ இருக்கிறாளே, என் அருமை மகள் குந்தவை, அவளுக்கு நிகரான அறிவு படைத்தவர்களை நான் கண்டதில்லை..."

"மன்னிக்க வேண்டும், சக்கரவர்த்தி! நான் சோழ குலத்தில் பிறந்தவள் அல்லவே? மழவரையர் குலத்தில் பிறந்தவள் தானே?" என்றார் முதிய பிராட்டியார்.

"எந்தக் குலத்தில் பிறந்தாலும், பெண்கள் அறிவுடையவர்களாக இருக்கலாம்; பிறந்த குலம், புகுந்த குலம் இரண்டுக்கும் நன்மை உண்டாக்கலாம். பெண்கள் வெறும் பிடிவாதம் பிடித்துப் பிறந்த குலமும் புகுந்த குலமும் அழிந்து போவதற்குக் காரணம் ஆவதும் உண்டு. தாயே! தாங்கள் அத்தகைய குல நாசத்துக்குக் காரணமாகப் போகிறீர்களா?"



வ்விதம் சுந்தர சோழர் கேட்டதும், செம்பியன் மாதேவி நெருப்பை மிதித்தவர் போல் துடித்து, "சக்கரவர்த்தி! இது என்ன வார்த்தை? என்னால் ஏன் சோழ குலம் நாசம் அடைய வேண்டும்? நான் அவ்வளவு சக்தி படைத்தவள் அல்லவே?" என்று கண்களில் நீர் மல்க விம்மிக் கொண்டே கூறினார்.

"தேவி! சிறிது கடுமையாகப் பேசுவதற்காக என்னை மன்னிக்க வேண்டும். என் மூத்த குமாரன் இறந்து நான் உயிரோடிருக்கிறேன் என்னும் எண்ணம் என் நெஞ்சைப் பிளந்து கொண்டேயிருக்கிறது. ஆனால் இதைக் காட்டிலும் எனக்கு ஏற்படக் கூடிய துன்பம் ஒன்றும் உண்டு. என் மூதாதையர் காலத்திலிருந்து வலுப்பெற்றுப் பரவி வரும் இந்தச் சோழ ராஜ்யம் என் காலத்தில் சின்னா பின்னப்பட்டு அழிந்தது என்றால், அதைக் காட்டிலும் கொடிய தண்டனை எனக்கு வேறொன்றும் இல்லை. மூன்று வருஷங்களாக என் அருமைக் குமாரன் கரிகாலனை நான் பார்க்காமலே இருந்தேன். எனக்காகக் காஞ்சி நகரில் அவன் பொன் மாளிகை கட்டினான். அங்கு வந்து தங்கும்படி என்னை அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தான். நான் போக வில்லை. என் உடல் நிலையைக் காரணமாகச் சொல்லிக் கொண்டிருந்தேன். உண்மையான காரணம் அதுவல்ல. நான் காஞ்சிக்குப் புறப்பட்டுச் சென்றால், பழுவேட்டரையர்களின் சிநேகத்தில் அவநம்பிக்கை கொண்டு நான் போய் விட்டதாக அவர்களும் நினைக்கலாம்; மற்ற சிற்றரசர்களும் பெருந்தர அரசாங்க அதிகாரிகளும் கருதலாம். அதிலிருந்து என்ன சச்சரவு நேருமோ, என்ன விபரீதம் இந்தச் சோழ ராஜ்யத்துக்கு ஏற்படுமோ என்று எண்ணித்தான் நான் காஞ்சிக்குப் போகவில்லை. நான் போயிருந்தால் ஒரு வேளை என் அருமைக் குமாரன் கரிகாலன் இன்று உயிரோடு இருந்திருப்பான்...."

"மன்னர் மன்னா! தாங்கள் எவ்வளவோ அறிவாளி; ஆற்றல் மிகப் படைத்தவர். ஆயினும் விதியை மாற்றி எழுதத் தங்களால் கூட முடியாது!..."

"ஆம், அன்னையே! விதியை என்னால் மாற்றியிருக்க முடியாது. ஆனால் என் குமாரனை அந்திய காலத்தில் பார்க்க முடியாமலே போய் விட்டதே. அவன் மனத்தில்

குடி கொண்டிருந்த வேதனையை அறியாமல் போய் விட்டேனே என்று இன்றைக்கு நான் படும் பச்சாத்தாபம் இல்லாமற் போயிருக்கும். இதையெல்லாம் எதற்காகச் சொல்கிறேன்? விஜயாலய சோழரும் அவர் வழியில் வந்த வீராதி வீரர்களும் இரத்தம் சிந்தி உயிரைக் கொடுத்து ஸ்தாபித்த இந்தச் சோழ ராஜ்யத்தின் நலத்தைக் கருதி என் சொந்த ஆசாபாசங்களையெல்லாம் நான் வேரோடு களைந்து விட்டிருந்தனைத் தங்களுக்குத் தெரிவிப்பதற்காகத்தான். ஆதித்த கரிகாலனை என்ன காரணத்தினாலோ பழுவேட்டரையர்களுக்கும் அவர்களைச் சேர்ந்த சிற்றரசர்களுக்கும் பிடிக்காமல் போய் விட்டது. தங்கள் குமாரனும், என் சகோதரனுமான மதுராந்தகனை எனக்குப் பிறகு சோழ சிங்காதனத்தில் ஏற்றி வைக்க வேண்டும் என்று பிரயத்தனம் செய்தார்கள். அவர்கள் அப்படிப் பிரயத்தனம் செய்ததில் தவறு ஒன்றுமில்லை. மகா புருஷரும் சிவஞான சித்தருமான கண்டராதித்தருடைய புதல்வன் சோழ சிங்காதனத்தில் ஏற எல்லா விதத்திலும் தகுதி வாய்ந்தவன். உண்மையில் நான் முடி சூட்டிக் கொண்டதே தவறான காரியம். அப்போது பெரியவர்கள் எல்லாரும் சொன்னார்களே என்று, மறுத்துப் பேச முடியாமல், இசைந்து விட்டேன். அதன் பலன்களை இன்று அநுபவிக்கிறேன். என் அருமைக் குமாரனைப் பறி கொடுத்து விட்டு நான் உயிரோடிருக்கிறேன்! இவ்வளவு துன்பமே எனக்குப் போதும். இனி இந்தப் பெரிய இராஜ்யம் உள்நாட்டுச் சண்டையினால் அழிந்து போவதை என் கண்ணால் பார்க்க விரும்பவில்லை. தேவி! அத்தகைய அழிவு இந்தச் சோழ சாம்ராஜ்யத்துக்கு நேராமல் தடுப்பதற்குத் தாங்கள் உதவி செய்ய வேண்டும்!'' என்றார் சுந்தர சோழர்.

செம்பியன் மாதேவி தம் கண்களில் துளித்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, ''அரசர்க்கரசே! தாங்கள் கூறியது எதுவும் என் சிற்றறிவுக்குச் சரியென்று தோன்றவில்லை. என்னுடைய கணவருக்குப் பிறகு என் மைத்துனரும் தங்கள் தந்தையுமான அரிஞ்சய தேவர் சிங்காதனம் ஏறி





னார். என் கணவர் விருப்பத்தின்படியே அது நடந்தது. அரிஞ்சயருக்குப் பிறகு தாங்கள் சிங்காதனம் ஏற வேண்டும் என்பதும் என் கணவரின் விருப்பந்தான். மூன்று உலகையும் ஒரு குடையில் ஆண்ட தங்கள் பாட்டனார் பராந்தகத் தேவரும் அவ்வாறு ஏற்பாடு செய்து விட்டுச் சென்றார். ஆகையால், தாங்கள் சோழ சிங்காதனம் ஏறியதில் முறைத் தவறு எதுவும் இல்லை. என்னுடைய நாதர் சிவ பக்தியில் ஈடுபட்டு ஆத்மாநுபூதிச் செல்வராக விளங்கினார். இராஜரீக காரியங்களில் அவருடைய மனம் ஈடுபடவில்லை. ஆகையால் அவருடைய காலத்தில் சோழ ராஜ்யம் சுருங்கிக் கொண்டு வந்தது. தாங்கள் பட்டத்துக்கு வந்த பிறகு மறுபடியும் இராஜ்யம் விஸ்தரித்தது. தெற்கேயும் வடக்கேயும் தோன்றியிருந்த பகைவர்கள் அழிக்கப்பட்டார்கள். இவ்விதம் இராஜ்யம் மேன்மையுறுவதற்கு முக்கிய காரணமாயிருந்தவன் தங்கள் அருமைச் செல்வன் ஆதித்த கரிகாலன். அவனுக்கு உலகம் அறிய இளவரசுப் பட்டம் கட்டப்பட்டது. அதை மாற்றி என் மகனுக்கு இராஜ்ய உரிமையை அளிக்க வேண்டும் என்பதற்கு நான் எப்படிச் சம்மதிக்க முடியும்? நான் சம்மதித்தாலும் உலகம் சம்மதிக்குமா? இராஜ்யத்தின் மக்கள் சம்மதிப்பார்களா? சக்கரவர்த்தி! உள்நாட்டுச் சண்டையினால் இராஜ்யம் அழிவதைத் தடுக்க விரும்புவதாகச் சற்று முன்னால் சொன்னீர்கள். ஆதித்த கரிகாலனைப் புறக்கணித்து விட்டு என் புதல்வனுக்குப் பட்டம் கட்டியிருந்தால், அதே உள் நாட்டுச் சண்டை நேர்ந்திராதா? இராஜ்யம் அழிந்திராதா?'' என்று கேட்டார்.

''ஆம், தாயே! அதனாலே தான் நானும் தயங்கிக் கொண்டிருந்தேன். எல்லாரையும் சமரசப் படுத்தி அனைவரும் ஒப்புக் கொள்ளக்கூடிய ஏற்பாடு செய்யப் பிரயத்தனப் பட்டேன். அது கைகூடுவதற்குள்ளே, விதி குறுக்கிட்டு விட்டது; கரிகாலனுடைய ஆயுள் முடிந்து விட்டது. தாயே! அடுத்தாற் போல் நான் செய்யவேண்டியது என்ன? தாங்களே சொல்லுங்கள்! இந்த இராஜ்யத்தின் பொறுப்பை என்னால் இனித் தாங்க முடியாது. யாரிடமாவது ஒப்புவித்து விட்டுக் கரிகாலனுடைய கடைசி விருப்பத்தை நிறைவேற்ற விரும்புகிறேன். காஞ்சியில் எனக்காகவென்று கரிகாலன் கட்டியுள்ள பொன் மாளிகையில் தங்கி என் அந்திய காலத்தைக் கழிக்க விரும்புகிறேன். இப்போது யாருக்குப் பட்டம் கட்டுவது என்று சொல்லுங்கள். அருள்மொழியைக் காட்டிலும் மதுராந்தகன்



பிராயத்தில் மூத்தவன். என்னைவிட இளையவன் ஆனாலும், அவனுக்குச் சிறிய தந்தை முறையில் உள்ளவன். கொடும்பாளூர் வேளாரும் திருக்கோவலூர் மலையமானும் அருள்மொழிக்குப் பட்டம் கட்ட வேண்டும் என்கிறார்கள். தர்மத்துக்கும் நியாயத்துக்கும் குல முறைக்கும் விரோதமான இந்தக் காரியத்துக்கு நான் எப்படி உடன்பட முடியும்? அல்லது தாங்கள் தான் எப்படி உடன்பட முடியும்? அன்னையே! எனக்கு உதவி செய்யுங்கள்! மதுராந்தகனுக்கு முடி சூட்டத் தங்கள் சம்மதத்தைத் தெரிவியுங்கள். அதை வைத்துக் கொண்டு, நான் சேநாதிபதி பெரிய வேளாரையும் திருக்கோவலூர் மலையமானையும் சம்மதிக்கச் செய்வேன்! தங்கள் சம்மதத்தையும் அநுமதியையும் தெரிவித்து இந்தச் சோழ சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றிய புண்ணியத்தைக் கட்டிக் கொள்ளுங்கள்!'' என்றார் சுந்தர சோழச் சக்கரவர்த்தி.

செம்பியன் மாதேவி, ''ஐயா! என் சம்மதத்தைக் கேட்க வேண்டாம். சிவபதம் அடைந்த என் இறைவர் எனக்கு இட்ட கட்டளைக்கு மாறாக நான் நடக்க முடியாது. ஆனால், இராஜ்ய விவகாரங்களில் நான் இனிக் குறுக்கிடுவதில்லை. மதுராந்தகனை அழைத்து அவன் சம்மதத்தைக் கேட்டு எப்படி உசிதமோ அப்படிச் செய்யுங்கள்!'' என்றார்.

''ஆம், ஆம்! மதுராந்தகனை அழைத்து அவனுடைய சம்மதத்தைக் கேட்டுக் கொண்டுதான் எதுவும் தீர்மானிக்க வேண்டும். அதற்கும் தங்கள் உதவி வேண்டும். தேவி! மதுராந்தகன் எங்கே?'' என்றார் சக்கரவர்த்தி.

செம்பியன் மாதேவி தம் தொண்டை அடைக்க, நாத் தழுதழுக்க, ''மதுராந்தகன் எங்கே? சென்ற மூன்று தினங்களாக அந்தக் கேள்வியைத்தான் நானும் கேட்டுக் கொண்டிருக்கிறேன். யாரும் மறுமொழி சொல்லவில்லை. அரசே! என் புதல்வன் எங்கே? கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையரைக் கூப்பிட்டுக் கேளுங்கள்!'' என்றார்.

''சின்னப் பழுவேட்டரையர் தங்களைக் கேட்க வேண்டும் என்கிறார். தாங்களும் முதன் மந்திரி அநிருத்தரும் ஏதோ சூழ்ச்சி செய்து மதுராந்தகனை மறைத்து வைத்திருப்பதாகக் குற்றம் சாட்டுகிறார். அன்னையே! இப்போது சின்னப் பழுவேட்டரையரையும் முதன் மந்திரியையும் அழைத்து வரச் செய்கிறேன். அநுமதி கொடுங்கள்!'' என்றார் சக்கரவர்த்தி.

''அப்படியே அழைத்துவரச் செய்யுங்கள். நானும் அவர்களைக் கேட்கிறேன்!'' என்றார் செம்பியன் மாதேவி.



ந்தவை உடனே வாசற் பக்கம் சென்று அங்கிருந்த காவலர்களிடம் சொல்லி அனுப்பினாள். சிறிது நேரத்துக்கெல்லாம் முதன் மந்திரியும் சின்னப் பழுவேட்டரையரும் வந்தார்கள்.

சக்கரவர்த்தி சின்னப் பழுவேட்டரையரை நோக்கி, ''தளபதி! சோழ நாடு போற்றி வணங்கும் மூதாட்டியார், நீர் கேட்ட அதே கேள்வியைக் கேட்கிறார். 'மதுராந்தகன் எங்கே?' என்று வினாவுகிறார். மதுராந்தகத் தேவரைப் பற்றித் தாங்கள் அறிந்ததைச் சொல்லுங்கள். தங்கள் சந்தேகத்தையும் ஒளிவு மறைவின்றிக் கூறுங்கள்!'' என்றார்.

சின்னப் பழுவேட்டரையர் கூறினார்:— ''தேவியாரின் சிவ பக்தியும் சீலமும் உலகம் அறிந்தவை. சோழநாட்டு மக்கள் அவரை நடமாடும் தெய்வமாகக் கருதிப் போற்றுகிறது போல் நானும் போற்றுகிறேன். நான் இப்போது தெரிவித்துக் கொள்வதைக் குற்றம் கூறுவதாக எண்ணக் கூடாது. எந்தக் காரணத்தாலோ தேவியார் தமது குமாரர் சோழ சிங்காதனம் ஏறுவதை விரும்பவில்லை. இதுவும் எல்லாரும் அறிந்தது. மூத்த பிராட்டியாரைக் காட்டிலும் எனக்காவது மற்றவர்களுக்காவது அவருடைய புதல்வர் விஷயத்தில் அதிக அன்பு இருக்க முடியாது. ஆயினும் மர்மமாயிருக்கும் சில விஷயங்களை விளக்குதல் அவசியமாயிருக்கிறது. அதிலும் சக்கரவர்த்தி 'மதுராந்தகரைக் கொண்டு வருக!' என்று அடியேனுக்குக் கட்டளையிட்டிருப்பதால், என்னுடைய சில சந்தேகங்களையும் வெளியிட வேண்டி வருகிறது. மூன்று நாளைக்கு முன்னால் மூத்த எம்பெருமாட்டியும் மதுராந்தகத் தேவரும் கோட்டைக்கு வெளியே சென்றார்கள். புஷ்பத் திருப்பணி செய்யும் சேந்தன் அமுதனுடைய குடிசைக்குச் சென்று க்ஷேமம் விசாரித்தார்கள். பின்னர் தேவியார் மட்டும் கோட்டைக்குத் திரும்பினார். சிறிது நேரத்துக்குப் பிறகு நானும் என் தமையனாரும் கோட்டை வாசலுக்குச் சற்றுத் தூரத்தில் நின்று கொடும்பாளூர் வேளாருடன் பேசிக் கொண்டிருந்தோம். மதுராந்தகத் தேவரைப் பற்றி நான் விசாரித்துக் கொண்டிருந்த சமயத்தில் யானை — பல்லக்கு பரிவாரத்துடன் சிலர் கோட்டைக்குள் நுழைந்தார்கள். 'மதுராந்தகத் தேவர் வாழ்க!' என்ற கோஷமும் கேட்டது. முதன் மந்திரி அவர்கள்தான் அப்போது அதைச் சுட்டிக் காட்டினார். யானை மேலிருந்தவர் மதுராந்தகத் தேவர் என்று கூறினார். எனக்கு அதைப் பற்றிச் சிறிது சந்தேகம் ஏற்பட்டது. பின்னர், சக்கரவர்த்தியின் கட்டளைப்படி கோட்டைக்

காவல் என் வசத்தில் வந்தது. என் அரண்மனையில் தான் மதுராந்தகர் தங்குவது வழக்கம். அன்றிரவு அதைப் பற்றி நான் விசாரிக்கவில்லை. மறுநாள் விசாரித்த போது என் அரண்மனைக்கு வரவில்லை என்று தெரிந்தது. பின்னர் கோட்டை முழுவதும் தேடிப் பார்த்தும், யார் யாரையோ விசாரித்துப் பார்த்தும் மதுராந்தகத் தேவரைப் பற்றி ஒன்றும் தெரியவில்லை! கோட்டைக்குள் பிரவேசித்தவர் எப்படி மாயமாய் மறைந்தார்? தேவியாரும் முதன் மந்திரியும் இப்பொழுது நான் சொல்லப் போவதற்காக மன்னிக்க வேண்டும். அவர்கள் இருவரும் ஏதோ சூழ்ச்சி செய்து, மதுராந்தகர் பீதி கொள்ளும்படியான செய்தி எதையோ அவரிடம் சொல்லி, இந்த நகரை விட்டும் நாட்டை விட்டுமே ஓடிப் போகும்படி செய்து விட்டார்கள் என்று நான் ஐயுறுகிறேன். நான் சொல்லுவது தவறாயிருந்தால் மீண்டும் பெரிய பிராட்டியாரின் மன்னிப்பைக் கோருகிறேன்.''

செம்பியன் மாதேவி தழுதழுத்த குரலில் ''தளபதி! தாங்கள் இப்போது கூறியது முற்றும் தவறு. சிவபெருமானுடைய பாத கமலங்கள் சாட்சியாகச் சொல்லுகிறேன். முதன் மந்திரி அநிருத்தரிடம் சமீபத்தில் என் குமாரனைப் பற்றிப் பேசியதுமில்லை; சூழ்ச்சி செய்ததும் இல்லை. அன்று மாலை நானும் மதுராந்தகனும் சேந்தன் அமுதன் குடிசைக்குப் போனது உண்மை தான். நான் அங்கிருந்து புறப்பட்டபோது மதுராந்தகன் சிறிது நேரம் கழித்து வருவதாகச் சொன்னான். அதற்குப் பிறகு நான் அவனைப் பார்க்கவில்லை. மூன்று நாட்களாக நானும் அவனைத் தேடிக் கொண்டு தானிருக்கிறேன்!'' என்றார்.

''தேவியார் கூறுவதை ஒப்புக் கொள்கிறேன். அப்படியானால், முதன் மந்திரி தான் இந்த மர்மத்தை வெளியாக்க வேண்டும்!'' என்றார் காலாந்தகர்.

''எந்த மர்மத்தை?'' என்று முதன் மந்திரி அநிருத்தர் கேட்டார்.

''தேவியின் புதல்வர் காணாமற் போன மர்மத்தைப் பற்றித்தான்!''

''தளபதி! இந்தக் கோட்டை முழுவதும் தாங்கள் நன்றாகத் தேடிப் பார்த்ததாகக் கூறியது உண்மைதானா?''

''ஆம்; தங்கள் அரண்மனையைத் தவிர மற்ற எல்லா இடங்களையும் தேடித் துருவிப் பார்த்தாகி விட்டது.''

''என் அரண்மனையை மட்டும் விட்டு விட்ட காரணம் என்ன?''

''தாங்கள் சோழ சாம்ராஜ்யத்தின் முதன் மந்திரி என்கிற மரியாதை காரணமாகத் தான்!''

''ஆகா! அப்படியானால் தங்கள் கடமையைத் தாங்கள் சரியாகச் செய்யவில்லை என்று ஏற்படுகிறது. போனது போகட்டும். சக்கரவர்த்தி! தங்களுடைய பெரிய அன்னையும் சோழ நாடு போற்றும் சிவ பக்த சிரோமணியுமான மூத்த எம்பிராட்டியார் தமது புதல்வரைப் பற்றி என்னிடம் ஒன்றும் சொல்லவில்லை. நான் அவருடன் சூழ்ச்சி எதுவும் செய்ய வில்லை. ஆனால் ஒன்று சொல்கிறேன். தேவியாரின் திரு வயிற்றில் உதித்த தேவர் என்னுடைய மாளிகையிலேதான் மூன்று நாளாக இருந்தார். இப்போது இந்த அறையின் வாசலிலே வந்து தங்களையும் அன்னையையும் தரிசிப் பதற்காகக் காத்திருக்கிறார். அநுமதி கொடுத்தால், அழைத்து வருகிறேன்!''

இவ்வாறு முதன் மந்திரி கூறியதும் அங்கிருந்தவர்கள் ஒவ்வொருவரும் அடைந்த வியப்பைச் சொல்லி முடியாது.

சக்கரவர்த்தி, ''முதன் மந்திரி! இது என்ன வேடிக்கை! தேவியின் புதல்வரை அழைத்து வருவதற்கு அநுமதி கேட்பானேன்! சீக்கிரமே வரவழையுங்கள்!'' என்றார்.

முதன் மந்திரி அநிருத்தர் வாசற்படியண்டை சென்று கை தட்டி விட்டு மறுபடியும் உள்ளே வந்தார்.

அடுத்த கணம் சேந்தன் அமுதனை முன்னால் விட்டுக் கொண்டு ஆழ்வார்க்கடியான் நம்பி வந்தான்.

சின்னப் பழுவேட்டரையர் மிக்க ஆத்திரத்துடன் ''முதன் மந்திரியின் பரிகாசத்துக்கு ஓர் எல்லை வேண்டாமா?'' என்று கேட்டார்.

ஆனால் செம்பியன் மாதேவி இருகரங்களையும் நீட்டித் தம் திரு முகத்தில் அன்பும் ஆர்வமும் ததும்ப ''மகனே!'' என்று அழைத்ததும், தளபதிக்கு மனக் குழப்பம் உண்டாகி விட்டது.

சேந்தன் அமுதன் ''தாயே! என்னை அழைக்க இப்போதேனும் தங்களுக்கு உள்ளம் உவந்ததோ? அது நான் செய்த தவத்தின் பயன்தான்!'' என்று கண்களில் நீர் ததும்பச் சொல்லிக் கொண்டு செம்பியன் மாதேவியை நெருங்கினான்.

மதுராந்தக உத்தமச் சோழன் என்று சரித்திரத்தில் புகழ் பெற்ற சிவபக்திச் செல்வனைத் திருவயிறு வாய்த்த தேவி அன்புடன் அணைத்துக் கொண்டு மெய்மறந்து ஆனந்தக் கண்ணீர் பொழிந்தார்.

(தொடரும்)

ஜனநாயக மாதர் சங்கத்தினர்: ''எங்களை எதிரிகளைப் போல் பார்க்கிறார்கள்!''

வீரபாண்டித் தொகுதி

# நிஜ முகங்களை இழந்த கிராமங்கள்!

தி. மு. க. எம். எல். ஏ., பி. வெங்கடாசலத்தின் தொகுதி இது....

''**நா**ங்களெல்லாம் பல்வேறு ஊர்களி லிருந்து சேலம் இரும்பாலையில் வேலைக்கு வந்தவர்கள். எங்களுக்கு இங்கே நல்ல வசதி. குடிநீர்ப் பிரச்னையில்லை; மருத்துவவசதிக்குக் குறைவில்லை; குழந்தைகளுக்குப் பள்ளிக்கூட வசதிக்கும் கவலையில்லை. எல்லாம் எங்கள் காம்பவுண்டுக்குள்ளேயே இருக்கின்றன.

''ஆனால், இந்த இரும்பாலைக்காக 3,300 ஏக்கர் நிலங்களை அரசுக்குக் கொடுத்த ஆயிரக்கணக்கானவர்களின் நிலை என்ன? அவர்கள் எங்கள் காம்ப

முருகேசன்: ''கூட்டிற வேலைக்கும் தகுதியில்லையா?''



வுண்டுக்கு வெளியில்தான் இருக்கிறார்கள். ஆனால் வாழ்க்கைத் தரம்? குடிநீர் மட்டும் தான் அவர்களுக்கு ஒரு பிரச்னையாக இல்லை. மற்ற எல்லாமே பிரச்னைகள் தான். ஓர் அவசரத்துக்குச் சிகிச்சை என்றால் எங்கள் மருத்துவமனை டாக்டர்கள் அவர்களிடம் ஆயிரம் கேள்விகள் கேட்பார்கள். எங்கள் பள்ளியில், அந்த மக்களின் புத்திசாலிக் குழந்தைகளைக் கூடச் சேர்த்துக் கொள்ள மறுக்கிறார்கள்.

''இந்த முரண்பாடுகள் காரணமாக, அவர்கள் எங்களையெல்லாம் அந்நியர்களாகவே பார்க்கிறார்கள்; ஓர் எதிரியைப் போலவே பாவிக்கிறார்கள். இது எதிர்காலத்தில் ஓர் ஆபத்தான சூழ்நிலையைத் தோற்றுவித்துவிடும். எனவே, நாங்கள் எங்கள் நிர்வாகத்தினரிடம் எங்கள் மருத்துவமனையில் அவர்களுக்கும் சிகிச்சையளிக்க வேண்டும்; எங்கள் 'பள்ளியில் — அவர்களின் எல்லாக் குழந்தைகளுக்கும் இல்லாவிட்டாலும் — தகுதி பெற்ற குழந்தைகளுக்கேனும் இடமளிக்க வேண்டும் என்று சொல்லிப் போராடுகிறோம்.

''இதற்கெல்லாம் எம். எல். ஏ. வின்



திருமதி விஜயலட்சுமி பழனிச்சாமி: ''ரவுடித்தனத்தைத் தூண்டுகிறார் எம். எல். ஏ.''



அட்டையாம்பட்டி பஸ் நிலையத்துக்காக ஒதுக்கப்பட்ட இடம் ஆக்கிரமிக்கப்பட்டுள்ள காட்சி...

ஆதரவு சரிவரக் கிடைக்கவில்லை. அவருடைய ஆதரவும் இருந்தால் எங்கள் கோரிக்கை சுலபமாக வெற்றிபெற வாய்ப்பிருக்கிறது...'' என்றார்கள், சேலம் இரும்பாலை டவுன்ஷிப்பில் உள்ள ஜனநாயக மாதர் சங்கம் மற்றும் சி. ஐ. டி. யு. யூனியனைச் சேர்ந்தவர்கள்.

இதுபற்றி நாம் எம். எல். ஏ. விடம் பேசிய போது, காம்பவுண்டு சுவருக்கு உள்ளேயும் வெளியேயும் இருக்கிற முரண்பாடான தொரு வாழ்க்கை நிலை பற்றி, அவர் அத்தனை ஆழமாகச் சிந்தித்துப் பார்த்ததாகத் தெரியவில்லை. ஆயினும் அவர்கள் கோரும் ஆதரவைத் தரத் தாம் தயாராக இருப்பதாகக் கூறினார்.

இரும்பாலைக் காம்பவுண்டுக்கு வெளியிலுள்ள கிராமங்களில் ஒன்று மார



* பஞ்சாயத்துத் தலைவர் பெருமாள்: ''எல்லோரும் ஆக்கிரமித்துள்ளதால் நானும் ஆக்கிரமித்தேன்!''



* திருமலை: ''கோயில் எங்களின் தனிப்பட்ட சொத்து!''



* திருப்பதி: ''பஸ் வசதி வேண்டும்!''

மங்கலத்துப்பட்டி. இரும்பாலைக்காக நிலத்தைக் கொடுத்துவிட்டு, தற்சமயம் கஷ்ட ஜீவனத்தில் இருப்பவர்கள் இங்கு ஏராளம்.

''எங்களிடம் நிலத்தை வாங்கும் போது வீட்டுக்கு ஒருவருக்கு இரும்பாலையில் வேலை கொடுப்போம் என்றார்கள், அவ்வளவுதான்! இரண்டொருவருக்குக் கொடுத்தார்களே தவிர, வாக்கை அரசாங்கம் நிறைவேற்றவில்லை... நஷ்டஈடு பெறுவதற்கே பெரும் பாடுபட்டோம்...'' என்றார் விருப்பண்ண கவுண்டர்.

''தகுதியிருந்தாலல்லவா உங்களுக்கு வேலை தர முடியும் என்று கேட்கிறார்கள், இரும்பாலை நிர்வாகத்தினர். நான் கேட்கிறேன், துடைப்பத்தை எடுத்துக் கொண்டு குப்பைகளைக் கூட்டித் தள்ளுகிற வேலைக்குக் கூடவா எங்களுக்குத் தகுதியில்லை? அதற்குக் கூட வெளியூர்களிலிருந்தல்லவா ஆட்களைக் கொண்டு வந்து வைத்திருக்கிறார்கள்...?'' என்று உணர்ச்சிவசப்பட்டுப் பேசினார் இளைஞர் முருகேசன்.

''பஞ்சாயத்தாலயும் கஷ்டந்தாங்க. வீதி வெளக்குங்கூட எரியறதில்லே. சொன்னா, ஆரு கேக்கறாங்க? வோட்டுப் போட்ட பொறவு அவங்களையெல்லாம் பாக்கறதே அபூர்வமாயிடுது...'' என்று ஆதங்கப்பட்டார் சித்தாயம்மாள்.

எம். எல். ஏ. தெரிவிக்கும் சமாதானம்:

''இரும்பாலைக்காக நிலம் கொடுத்த குடும்பங்களுக்கெல்லாம் வீட்டுக்கு ஒருவருக்கு வேலை என்கிற திட்டத்தைச் செயல்படுத்த, ஆலை ஆரம்பிக்கப்பட்ட போதே ஒரு தனி தாசில்தாரைப் போட்டிருந்தது அப்போதைய தி. மு. க. அரசு. அதன் பிறகு வந்த அ. தி. மு. க. அரசு அந்தத் தாசில்தாரைத் தூக்கிவிட்டது. இப்போது மீண்டும் ஆட்சிக்கு வந்துள்ள நாங்கள், மீண்டும் பழையபடி ஒரு தனி தாசில்தாரை நியமித்து, அந்த வாக்குறுதியை நிறைவேற்றும் முயற்சிகளில் ஈடுபட்டுள்ளோம்...

''தெரு விளக்குகள், கழிப்பிட வசதிகள் போன்றவையெல்லாம் பஞ்சாயத்து செய்ய வேண்டிய வேலைகள். பஞ்சாயத்துத் தலைவர்கள் பல்வேறு கட்சிகளைச் சார்ந்தவர்களாக இருப்பதால் அவர்களிடம் எது கேட்டாலும், அது கட்சிப் பிரச்னையாக மாறி விடுகிறது. நீங்களே பார்த்திருப்பீர்கள்... வட்டமுத்தாம்பட்டி ஏரியில் என்ன நடந்து கொண்டிருக்கிறது என்பதை... அந்தப் பஞ்சாயத்துத் தலைவர் பெருமாள் அ. தி. மு. க. காரர். அவரே ஏரிக்குள் நிலத்தை ஆக்கிரமித்துப் பயிர் செய்து கொண்டிருக்கிறார்... என்ன செய்யச் சொல்லுகிறீர்கள்? அவரைக் காலி செய்யச் சொன்னால், அரசியல் சாயம் பூசுவார்கள்...''

எம். எல். ஏ. யின் இந்தக் குற்றச்சாட்டு முழுக்க முழுக்க உண்மை. வட்டமுத்தாம்பட்டிக்குச் சென்ற நாம், அந்தப் பஞ்சாயத்துத் தலைவரையே அழைத்துக் கொண்டு சென்று ஏரியைப் பார்த்தோம். ஏராள ஆக்கிரமிப்புகள். தாம் எந்த அளவுக்கு ஆக்கிரமித்து விவசாயம் செய்து வருகிறார் என்பதைப் பெருமாளே எங்களுக்குக் காட்டினார்.

''பஞ்சாயத்துத் தலைவரான நீங்களே இப்படி ஏரிக்குள் ஆக்கிரமிப்புச் செய்யலாமா?'' என்றதற்கு, ''நான் மட்டுமா செய்திருக்கிறேன்? எல்லோருமே செய்திருக்கிறார்கள். அதனால்தான் நானும் செய்திருக்கிறேன்...'' என்றார் பஞ்சாயத்துத் தலைவர் பெருமாள்!

ஆட்டையாம்பட்டியில் பஸ் நிலையத்துக்காக ஒதுக்கப்பட்ட நிலத்தில் பக்காவாக வீடு கட்டியுள்ளார், ஆட்டையாம்பட்டி யூனியன் சேர்மனும் முன்னாள் எம்.எல்.ஏ.வுமான வேங்கா கவுண்டர். மற்றவர்கள் கட்டிக் கொள்வதையும் அனுமதித்திருக்கிறார். அ. தி. மு. க. வைச் சேர்ந்த இவரிடம் கேட்ட போது, ''நான் மட்டுமா இப்படி ஆக்கிரமித்துள்ளேன்? இங்குள்ள எட்டுப்பட்டி மாரியம்மன் கோயில் நிலத்தைத் தி. மு. க. வினர் ஆக்கிரமிக்கவில்லையா? வீடு கட்டவில்லையா? சேலத்திலுள்ள போஸ் மைதானத்தை ஒட்டியுள்ள புறம்போக்கு நிலத்தைத் தி. மு. க. வைச் சேர்ந்த முன்னாள் எம்.பி. பழனியப்பன் ஆக்கிரமிக்கவில்லையா?

இவர்களெல்லாம் இடிக்கட்டும். நானும் உடனடியாகக் கேள்வியே கேட்காமல் என்னுடைய வீட்டை இடித்து விடுகிறேன்'' என்றார்.

வேங்கா கவுண்டர் சொல்கிற மாதிரி, தி. மு. க. காரர்கள் ஆக்கிரமித்திருப்பது உண்மைதானா?

''உண்மைதான். ஆனால் அது வேங்கா கவுண்டர் அளவுக்கு இல்லை. அவர்கள் எப்போது வேண்டுமானாலும் அதை இடிப்பதற்குத் தயாராக இருக்கிறார்கள்...'' என்றார் எம். எல். ஏ.

இரண்டு கட்சிக்காரர்களும் தனித்தனியாக இப்படிச் சொல்லிக் கொண்டிருந்தாலும், ஒன்றாகச் சேர்ந்து யாரும் தங்கள் ஆக்கிரமிப்புக்களை அகற்றத் தயாராக இல்லை என்பதுதான் நிஜம். எனவே, ஆட்டையாம்பட்டிக்கு இந்த ஜன்மத்தில் பஸ் நிலையம் வரும் என்ற நம்பிக்கை நமக்கு ஏற்படவில்லை.

ஆட்டையாம்பட்டியிலுள்ள இன்னொரு பிரச்னை, எட்டுப்பட்டி மாரியம்மன் கோயில். ''அது எட்டுப்பட்டிக்குமே சொந்தம்...'' என்பது யூனியன் சேர்மன், எம். எல். ஏ. மற்றுமுள்ள பலரின் வாதம். ''அல்ல, அல்ல, அது எங்களின் தனிப்பட்ட கோவில்!'' என்கிறார், பஞ்சாயத்துத் தலைவர் திருமலை.

''கோவில் உண்டியல்களை நீங்களே எடுத்துக் கொண்டு போய் அனுபவிக்கிறீர்களாமே?'' என்றபோது, ''கோவிலில் ஒரு போதும் உண்டியலே இருந்ததில்லை. எனக்கு வேண்டாதவர்கள் கூறும் குற்றச்சாட்டு அது. நான் அப்படிப்பட்டவனாக இருந்தால், எல்லாக் கட்சி வேட்பாளர்களையும் நான் சுயேட்சையாக எதிர்த்து நின்று போட்டியிட்டுப் பஞ்சாயத்துத் தலைவராக வெற்றி பெற்றிருக்க முடியுமா? மக்கள் எப்போதும் என் பக்கம்தான்!'' என்கிறார் திருமலை.

அடுத்தது, குடிநீர்ப் பிரச்னை. இரும்பாலையைச் சுற்றியுள்ள சில கிராமங்கள் தவிர, மற்றபடி தொகுதியிலுள்ள பல கிராமங்களிலும் பூதாகாரமாக நிற்கும் பிரச்னை இது. ஆட்டையாம்பட்டி படுமோசம். குடம் ஒன்றுக்கு அறுபது பைசாவிலிருந்து ஒரு ரூபாய் வரை விலை கொடுத்து வாங்க வேண்டிய அவலம்.

''பூலாம்பட்டி என்னுமிடத்திலிருந்து காவிரி நீர் கொண்டு வரும் திட்டம் துவங்கப்பட்டுள்ளது. இது 1993 — இல் முடிவு பெறும். அப்போது என் தொகுதியிலுள்ள குடிநீர்ப் பிரச்னை முற்றிலுமாகவே தீர்ந்துவிடும்...'' என்கிறார் எம். எல். ஏ. வெங்கடாசலம்.

''எங்கள் ஊர் ஆட்டையாம்பட்டியிலிருந்து மூன்று கி. மீ. தூரத்திலுள்ளது. ஆயிரம் குடும்பங்களுக்குமேல் உள்ளோம். ஆயினும் எங்களுக்குத் தனியான ரேஷன் கடை கிடையாது. ஆட்டையாம்பட்டிக்குச் சென்றுதான் வாங்கிவர வேண்டும். நாங்கள் அங்கு போவதற்குள் எல்லாம் தீர்ந்து போய் விட்டதாகச் சொல்லி விடுகிறார்கள். இதுபற்றி எங்கள் எம். எல். ஏ. விடமும் சொல்லிவிட்டேன். ஆயினும் தனி ரேஷன் கடை வந்த பாடில்லை. எனவே, நீங்களும் எம். எல். ஏ. விடம் எடுத்துச் சொல்லுங்கள்'' என்றார் மருளயம்பாளையம் தி. மு. க. கிளைச் செயலாளரான தேவராசன்.

எம். எல். ஏ. விடம் சொன்ன போது,



* வேங்கா கவுண்டர்: ''அவர்கள் இடித்தால் நானும் இடிக்கிறேன்!''



* போடிநாய்க்கன் பட்டியில் ஜரூராக நடக்கும் கள்ளச் சாராயக் கடை (இது ஓர் உதாரணம்தான்!)



எம். எல். ஏ. வெங்கடாசலம்: குறைகளை ஒப்புக் கொள்கிறார்!

''ஆயிரம்கார்டுதாரர்கள் இருக்குமிடங்களையெல்லாம் இரண்டாகப் பிரித்து இரண்டு ரேஷன் கடைகள் வைக்கலாம் என்று கலைஞரே சொல்லியிருக்கிறார். எனவே, மருளயம்பாளையத்தில் விரைவில் ரேஷன் கடை வந்துவிடும்'' என்றார்.

"எங்கள் கட்சிக்கு வாக்களித்து வெற்றிபெறச் செய்தால், எளம்பிள்ளை நகரில் ஆரம்பச் சுகாதார நிலையம் ஒன்று கட்டாயம் அமைக்கப்படும்'' என்று இதே எளம்பிள்ளையில் தேர்தல் பொதுக் கூட்டத்தில் பேசிய கலைஞரே எங்களுக்கு வாக்குறுதியளித்தார். ஆனால் இதுவரை வந்தபாடில்லை. பெண்கள் பள்ளிக்கூடத்திற்காக ஊர் மக்கள் நிலம் கொடுத்தும் கூட இன்னும் கட்டடம் கட்டப்படவில்லை. ஆரம்பப் பள்ளியிலுள்ள சில அறைகளைக் கடன் வாங்கித்தான் 660 மாணவிகள் ஒண்டுக் குடித்தனம் போலப் படித்துக் கொண்டிருக்கிறார்கள்.

''அதேபோல நூலகம். 'ஒரு நூலகம் திறக்கப்படுகிற போது, பத்து சிறைக் கூடங்களுக்குத் தேவையில்லாமல் போகும்' என்றார் விவேகானந்தர். ஆனால், இங்கோ பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் தொகையிருந்தும் நூலகம் இல்லை. அதற்குப் பதிலாக வீதிக்கு வீதி கள்ளச்சாராயக் கடைகள்தான் வெளிப்படையாகவே திறக்கப்பட்டிருக்கின்றன!

''நீங்களே வந்து பாருங்கள்... ரேஷன் கடைக்குப் பக்கத்திலேயே மூன்று கள்ளச் சாராயக் கடைகள். தயவு செய்து ரேஷன் கடைக்குப் பக்கத்தில் வைக்காதீர்கள். வேறு எங்காவது கொண்டு போய் வையுங்கள் என்று நாங்கள் கேட்டுக் கொண்ட போது, எங்களை அடிக்க வராத குறைதான். இப்படி எளம்பிள்ளையைச் சுற்றி மட்டும் அறுபத்தைந்து கள்ளச் சாராயக் கடைகள் இருக்கின்றன என்றால், தொகுதி முழுவதும் எத்தனை இருக்கும் என்று நீங்களே கணக்கிட்டுக் கொள்ளுங்கள்...'' என்றார்கள் எளம்பிள்ளையிலுள்ள சில இளைஞர்கள்.

கள்ளச் சாராயக் கடைகளைப் பொறுத்தவரை, வீரபாண்டித் தொகுதி வெகு ஜரூராகத்தான் இருக்கிறது. நாங்கள் பயணம் செய்த பல இடங்களிலும் டீக்கடைகளை விட கள்ளச் சாராயக் கடைகளே அதிகம் இருந்தன!

''உண்மைதான். எல்லாம் ஆளுங் கட்சிக்காரர்கள் நடத்தும் கடைகள்தான். எம். எல். ஏ.வின் அனுமதியோடுதான் எல்லாம் நடக்கின்றன. அதனால்தான் போலீஸாரால் ஏதும் செய்ய முடிவதில்லை... தமது அனுமதி பெற்ற கள்ளச்சாராயக் கடை என்பதற்கு அடையாளமாக எம். எல். ஏ. ஒரு டோக்கன் தருவார். அதை வைத்திருந்தால் போலீஸார் ஒன்றும் செய்ய மாட்டார்கள்...'' என்றார் ஆட்டையாம்பட்டி சேர்மன் வேங்கா கவுண்டர்.

''வேங்கா கவுண்டர் சொல்கிற மாதிரி டோக்கன் என்றெல்லாம் ஏதும் கிடையாது. அதே போல் ஆளுங்கட்சிக்காரர்கள்தான் கள்ளச்சாராயக் கடை வைத்திருக்கிறார்கள் என்பதும் சுத்தப் பொய். எல்லாக் கட்சிக்காரர்களுமே வைத்திருக்கிறார்கள் என்பதே உண்மை. என்ன செய்தும் கள்ளச் சாராயத்தை ஒழிக்க முடியாது என்பதால்தானே 'மலிவு விலையில் மது' திட்டத்தைக் கலைஞர் கொண்டு வந்திருக்கிறார் என்றார் எம். எல். ஏ. வெங்கடாசலம்!

எங்கள் ஆட்சியின் போது கள்ளச் சாராயம் என்பது கண்டும் காணாமல்தான் இருந்தது. எனவே ரவுடித்தனமும் அவ்வளவாக இல்லை. ஆனால் தி. மு. க. ஆட்சியில் கள்ளச்சாராய வியாபாரம் வெளிப்படையாகவே நடக்கிறது. அதனால் வீரபாண்டித் தொகுதியில் ரவுடித்தனமும் அதிகமாகி விட்டது. இந்த ரவுடித்தனத்தையெல்லாம் தி. மு. க. எம். எல். ஏ. வான வெங்கடாசலம்

---



''உங்க சொந்த வேலைக்காக, கம்ப்யூட்டர் வாங்கி இருக்கீங்களாமே?''

''ஆமாங்க...! என்னென்ன வேலைக்கு, எவ்வளவு 'சம்திங்' வாங்கலாம்னு 'ரேட்'டை நிர்ணயிக்கிறதுக்காகத்தான்...!''

— ஆர். அப்துல் சலாம்.

* எளம்பிள்ளை மகளிர் உயர்நிலைப் பள்ளி: பாவம் மாணவிகள்!

தான் தூண்டி விடுகிறார். அ. தி. மு. க. காரர்கள் மீது பாய்ந்து அடிக்கிறார்கள். பொய் வழக்குப் போடுகிறார்கள். இதைத் தவிர அவர் வேறு என்ன செய்து விட்டார் தொகுதிக்கு?'' என்றார் பாரப்பட்டியிலுள்ள முன்னாள் அ. தி. மு. க. அமைச்சரான திருமதி விஜயலட்சுமி பழனிச்சாமி.

''திருமதி விஜயலட்சுமி பழனிச்சாமி தனிப்பட்ட விரோதம் காரணமாகவே அப்படிச் சொல்கிறார். அ. தி. மு. க. இளைஞர் அணியினர் சும்மாவே இருப்பதில்லை. பலரிடமும் வம்புக்குப் போகிறார்கள். அப்போதும் கூட நான் தலையிட்டுச் சமாதானம் செய்கிறேன். போலீஸ் ஸ்டேஷன்களிலும் அவர்களைச் சமாதானப்படுத்தி அனுப்பி வைக்குமாறே கேட்டுக் கொள்கிறேன். அப்படியும் முடியாத போதுதான் வழக்குப் போடுகிறார்களே தவிர, வேண்டுமென்றே யார் மீதும் வழக்குப் போடுவதில்லை...'' என்று பலமாக மறுத்தார் எம். எல். ஏ.

ஆயினும் அனைவரும் சொன்ன வேறொரு விஷயத்தை எம். எல். ஏ. மறுக்கவில்லை. ஆட்டையாம்பட்டியிலுள்ள நான்கு சினிமா தியேட்டர்களிலும் டிக்கெட்டில் அச்சிடப்பட்டுள்ள விலைக்கு மேலாக டிக்கெட் கவுண்டரிலேயே விற்கப்படுகிறது. அதில் ஒரு தியேட்டர் எம். எல். ஏ. வுக்கே சொந்தமான தியேட்டர் என்பதுதான் அது.

''இப்போதெல்லாம் சினிமா தியேட்டரில் லாபமே இல்லை. ஆட்டையாம்பட்டி போன்ற இடங்களில் நிலைமை படுமோசம். அதனால் சில சமயங்களில் அப்படி விற்கப்படுகிறது என்பது உண்மைதான். இதில் குற்றச்சாட்டை மட்டுமே நீங்கள் கவனிக்கக் கூடாது. தியேட்டர்காரர்களுக்குள்ள கஷ்டங்களையும் நீங்கள் கவனிக்க வேண்டும். எங்கள் கஷ்டங்களை உணர்ந்தால் அதுவொரு பெரிய விஷயமே இல்லையென்பதை நீங்களே உணர்ந்து கொள்வீர்கள்..." என்றார் எம். எல். ஏ.!

"எங்கள் ஊரான போடிநாய்க்கன் பட்டியைப் பாருங்கள்; சேலம் ஜங்ஷனை ஒட்டியே உள்ளது. எங்கள் ஊரை ஒட்டிய கிராமங்களாக ஆண்டிப்பட்டி, காட்டூர் வெள்ளையக் கவுண்டன் தெரு, சேலத்தாம்பட்டி, கந்தம்பட்டி என்று பல கிராமங்கள் உள்ளன. எல்லாவற்றிலுமாகச் சேர்ந்து சுமார் பத்தாயிரம் பேருக்கு மேல் இருப்போம். ஆயினும் எங்களுக்கு மருத்துவ வசதியோ, பஸ் வசதியோ ஏதும் இல்லை. பாதை வசதியும் இல்லை. எனவே, ஜங்ஷன் சென்று தண்டவாளங்களைக் கடந்து செல்லும் நிலை. அப்படிக் கடந்து செல்லும் போது ரயில்வே பாதுகாப்புப் படையினர் எங்களைத் தடுத்து நிறுத்துகிறார்கள். கேஸ் போடுகிறார்கள்.

''வாகனத்தில் செல்ல வேண்டுமானால், பாருங்கள்... இரயில்வே லைன்களுக்கு அடியில் மழைநீர் செல்வதற்கான இந்த குகை போன்ற இருண்ட – குறுகிய பாலத்தில் புகுந்துதான் போக வேண்டும். நூறடிக்கும் மேலாக உள்ள இப் பாலம் இருண்டு கிடப்பதால், தனியாகச் செல்லும் பெண்களுக்குப் பாதுகாப்பே இல்லை. நீங்கள்தான் எப்படியாவது எம். எல். ஏ. விடம் சொல்லி, எங்களுக்குப் பாதை வசதியும் பஸ் வசதியும் செய்து தர ஏற்பாடு செய்து தர வேண்டும்..." என்று நம்மிடம் கேட்டுக் கொண்டார்கள் போடிநாய்க்கன்பட்டியிலுள்ள திருப்பதியும் மற்றுமுள்ள பலரும்.

''அவர்கள் நிலை மிகவும் பரிதாபகரமானதுதான். நான் அவர்கள் கஷ்டத்தை உணர்ந்தே இருக்கிறேன். அவர்களுக்கு உடனடியாகக் காட்டூர் வழியாகப் பஸ் விட முடியும்தான். ஆயினும் பாதை மிகவும் குறுகலானது. சம்பந்தப்பட்ட பஞ்சாயத்து, பாதையை ஒழுங்குபடுத்தித் தந்தால்தான் அது சாத்தியம். அவர்கள் இதற்கு முன்வரவில்லையே, என்ன செய்வது?'' என்றார் எம். எல். ஏ.

வீரபாண்டித் தொகுதியைப் பொறுத்த வரை, பல கிராமங்களும் அடிப்படை வசதிகள் கூட இல்லாமல் தங்கள் நிஜமான முகங்களை இழந்து பரிதாபமாகவே காட்சியளிக்கின்றன.

— இளங்கோவன்

வண்ணப்படங்களும், படங்களும்: சுபா

கவிதைக்குள் ஒரு கவிதை!

# பழமும் பறக்குமோ?

நிலாமுக நேரிழை; செந்நிறச் சேயிழை; அவள் ஒரு மாலைப் பொழுதில் மலர்ச் சோலைக்குள் நுழைகிறாள். தென்றல் போல் நடைபயில்கின்றாள். அவள் நடந்து செல்லும் பாதையில் — மலர்களின் தேனை உறிஞ்சிக் குடித்த போதையில் ஒரு கரு வண்டு சுருண்டு கிடக்கிறது. மயங்கிக் கிடக்கும் வண்டை — நாவற்பழம் என எண்ணிக் கையில் எடுக்கிறாள் நங்கை.

பொதுவாக, மங்கையர் கரம் பட்டால் மயக்கம் வரும். மாறாக, மங்கையர் கரம் பட்டதும் அந்த வண்டு விழித்துக் கொண்டது!

விழித்த வண்டு, அழகு கொழித்த குமரியின் முகத்தைப் பார்த்தது. முகம் முழுமதி போல் ஒளிர்ந்தது. கைகளைக் கண்டது. சிவந்த நிறக் கைகள் செந்தாமரை போல் தெரிந்தது.

அய்யோ! நிலா வந்து விட்டது; நிலாவைப் பார்த்தால் தாமரை கூம்பிக் கொள்ளுமே! தாமரை கூம்பிக் கொண்டால் விடியும் வரை மலருக்குள்ளேயே சிறைப்பட்டிருக்க நேருமே என்று அஞ்சியது!

அஞ்சிய அடுத்த கணமே அவள் கரங்களை விட்டுப் பறந்து விட்டது! நாவற்பழம் பறப்பதைப் பார்த்து அந்த ஆரணங்கு ஆச்சரியப்பட்டாள்!

இப்படி ஒரு பாடல் ''விவேக சிந்தாமணியில்.''

பெண்ணின் முகத்தை நிலாவிற்கும் — கைகளைச் செந்தாமரைக்கும் ஒப்பிட்டுச் சொல்வது தொன்று தொட்டு வழக்கம் என்றாலும் — இக் கருத்தை ஒரு காட்சியின் மூலம் — நாடக நயத்தோடு விளக்கியுள்ளார் விவேக சிந்தாமணி ஆசிரியர். கவிதை திரைப்படக் காமிரா போல் செயல்படுகிறது:

''தேனுகர் வண்டு மதுதனை யுண்டு
தியங்கியே கிடந்ததைக் கண்டு
தானதைச் சம்புவின் கனியென்று
தடங்கையால் எடுத்துமுன் பார்த்தாள்
வானுறு மதியம் வந்ததென் றெண்ணி
மலர்க்கரங் குவியுமென் றஞ்சிப்
போனது வண்டோ பறந்ததோ
பழந்தான்
புதுமையோ இதுவெனப்
புகன்றாள்!''

— கே. ஜி. ராஜேந்திரபாபு,
மதுரை — 2.

## இதுவரை நடந்த கதை

பதினெட்டு ஆண்டு பாடுபட்ட நிலம் கை மாறிய வேதனையால் அதைவிட்டு வெளியேற மறுத்தான் மாசிலா. குடிசையோடு அவன் எரிக்கப்பட்டான். கிணறுகளில் மோட்டார் பம்ப் ரிப்பேர் செய்யும் பட்டதாரி கௌதமின் பள்ளித் தோழன் ஆதியைப் போலீஸ் கைது செய்கிறது. கௌதமின் காதலி நித்யா ஊர்ப் பெரிய புள்ளி துளசிங்கத்தின் தலையீடு இருக்கும் என எச்சரித்தும் ஆதியின் விடுதலைக்கு கௌதம் மும்முரமாக முயற்சி செய்கிறான். வக்கீல் பீஸுக்கு வாட்சை விற்கவும் சித்தமாகிறான். வாட்ச் கடையில் அவனது பழைய சிநேகிதியும் உள்ளூர் இன்ஸ்பெக்டரின் தங்கையுமான பிலோமினா சந்திக்கிறாள். கன்யா ஸ்தீரியாகி விட்டிருந்த அவளே வாட்சை வாங்கிக் கொள்கிறாள். மறுநாள் ஜாமீனுக்கு முயற்சி செய்யலாம் என்று வக்கீல் கூறுகிறார்.

கானந்தரும் இந்தச் சாலையில் நடந்திருக்கிறார். காந்திஜியின் பாதங்கள் கூட விட்டலாபுரத்தை மிதித்துக் கடந்திருக்கின்றன.

எனினும் தைரியமாய் இருக்கும் நம்பிக்கை விட்டலாபுரத்திற்கு வரவில்லை.

ஒரு தைரியசாலியை அது பயத்தோடு, சந்தேகத்தோடு, பொறாமையோடு பார்க்கிறது. எனினும் அவன் வேண்டும் என்ற துடிப்பை அதனால் அடக்கிக் கொள்ள முடியவில்லை.

பஸ் ஸ்டாண்டில், இறங்கி நடக்கும் போதே பல முகங்களில் அந்தச் சாயல்கள்.

கவலையா பட முடியும்? மனசுக்குள் சிரித்தான். வீடு சென்று, முகம் கழுவி, சவுந்தரம்மாள் வார்த்துத் தந்த பூவிதழ் போன்ற தோசையைத் தின்னும் போது ஆதி நினைவு வந்தது.

# 14 மணல்வெளி மான்கள்

விட்டலாபுரம் வரும் போது மாலை மணி ஆறு. இருவரைச் சந்திக்க வேண்டும். துளசிங்கம் எதிர்பார்ப்பான். ஆதியின் அம்மா மங்கலட்சுமி.

பஸ் ஸ்டாண்டிலேயே விசாரணைகள் தொடங்கி விட்டன.

''என்ன கௌதமா, ஆதியை ஜாமீன்ல விட்டுட்டாங்களா?''

''தெரியாதே!''

''ஜாமீன்ல இட்டாரத்துக்காக நீதான் வேலூருக்குப் போயிருக்கேன்னு சொன்னாங்க?''

''நான் வேற வேலையாப் போயிருந்தேன்.''

கேட்டவர்கள் நம்பவில்லை. விட்டலாபுரம் விழித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறது. அதை ஏமாற்ற முடியாது. அதன் கண் மூடியிருந்தால் அது பாவனை, பாசாங்கு. நூற்றாண்டு நூற்றாண்டுகளாக வலிமையும் கொடுமைகளும் அதை உதைத்து மிரட்டி நசுக்கிச் சென்றன.

பயம். இலி. உயிர் தப்பி வாழும் அவா.

இதனால் அது பாராமுகமாகக் கண்மூடி இருக்கும்.

இங்கே திப்புசுல்தானின் தண்டு இறங்கியிருக்கிறது. ஆற்காட்டு நவாபின் குதிரைக் குளம்போசை மிரட்டிச் சென்றிருக்கிறது. பிரிட்டிஷ் பீரங்கிகள் இதே சாலையில் சக்கர வண்டியில் கடந்து சென்றிருக்கின்றன.

பயப்பட வேண்டிய அவசியமில்லை என்று உலகறியப் பிரகடனம் செய்த விவே

ஜெயிலில் கூழ் இல்லை. ராகிக் களி.

''வாட்ச் எங்கேப்பா?''

''ரிப்பேர் ஆயிடுச்சி பெரியம்மா. வேலூர்ல குடுத்திருக்கேன்.''

''ஆதியை ஜாமீன்ல விடலியா?''

''நாளைக்கு வரச் சொல்லி இருக்காங்க.''

''அந்தத் தொளசிங்கத்தைப் பார்த்துட்டு வந்துடுப்பா. பெரிய எடத்துப் பொல்லாப்பு.''

''பயப்படறீங்களா பெரியம்மா?''

''அதுக்கில்லே, அனுசரிச்சுப் போன்னு சொன்னேன்.''

அவன் சவுந்தரம்மாளை நிமிர்ந்து பார்த்தான். என்ன லட்சுமீகரம்! இதில் பயத்தின் புகை படரும் போது மனசு பதைக்கிறது.

அவன் சைக்கிளை எடுத்துக் கொண்டு சன்னிதி வீதிக்குப் போனான்.

மங்கலட்சுமியின் குடிசையருகில் நிறுத்தினான். உள்ளே மின்விளக்கு அழுது வடிந்தது.

''பா... பா... பா...'' என்று அவனைப் பார்த்ததும் கையை ஆட்டிக் கொண்டு எழுந்து வந்தாள் மங்கலட்சுமி.

''நான் போய்விட்டு வந்தேன். நாளை வரச் சொல்லியிருக்கிறார்கள்'' என்று சைகை காட்டினான்.

எதிர்பாராமல் மின்விளக்கு பளிச்சென்று ஜொலித்தது.

மங்கலட்சுமியின் முகம் தெளிவாய்ப் புலப்பட்டது. நனைந்த கன்னங்கள். தீனப் பார்வை. கை வயிறு தொட்டு ஓசையிட முடி

யாத வாயைப் பற்றிப் புதைத்தது.

இவளுக்கு மனம் தேற ஒரு தளம தேவை. பயத்தையும், கவலையையும் மூட்டை கட்டித் தூக்கிப் போட ஒரு பரண் தேவை. கௌதமுக்கு அனந்தசயனப் பெருமாள் நினைவு வந்தது.

''வா, பெருமாள் கோயிலுக்குப் போய் வரலாம்,'' என்று சைகை செய்தான். அந்த யோசனை பொருத்தமானது.

அவள் கதவைத் தாளிட்டுவிட்டுப் பின்னால் வந்தாள். சந்நிதியில் பெருமாளின் குறுங்கண் திறந்த அறிதுயில், யாவுமறிந்த மந்தஹாஸம். வாய்மொழியற்ற தாயுடன் ஓர் அறிதுயில்மௌனத்தைச் சந்திப்பது. அனந்த சயனப் பெருமாளின் புன்னகையில் தேற்றிக் கொள்வது.

கர்ப்பக்கிரகத்துக்கு எதிரே சாஷ்டாங்கமாக விழுந்து அவள் சேவித்தாள். பிராகாரம் சுற்றிவிட்டு வெளிவந்ததும், 'நான் அன்னவாசல் போய்விட்டு வருகிறேன்' என்று சைகையில் விடைபெற்றுச் சைக்கிள் ஏறினான்.

நித்யா வீடு நெருங்கியதும் சைக்கிள் வேகம் தணிந்தது. சொல்லி வைத்தாற்போல தெருக் கதவைப் பிடித்து நின்று கொண்டிருந்

# வையவன்

தாள். போன போது பார்த்திருக்க வேண்டும்.

வீதியில் ஜன நடமாட்டம். அவன் வீட்டிற்கு எதிர்ச்சாரியில் ஸ்டாண்ட் போட்டு நிறுத்தினான்.

அவள் திரும்பி வீட்டிற்குள் கைகாட்டி வாய்மேல் விரல் வைத்துச் சைகை செய்தாள்.

சரிதான், இங்கே ஒரு சைகை ஆரம்பமா? அவன் ஸ்டாண்ட் போட்டு நிறுத்திய சைக்கிளில், விழாத செய்ன் விழுந்து விட்டது போல் ஒரு தடவை கழற்றி மீண்டும் மாட்டினான். கையில் கிரீஸ்.

சைக்கிள் ஆக்ஸில் இடுக்கில் செருகி வைத்திருந்த கந்தல் துணியில் கைதுடைத்துக் கொண்டே நித்யாவைப் பார்த்தான்.

''என்ன ஆச்சு?'' என்று மடக்கிய கையை உலுக்கி அவள் சைகையில் கேட்டாள்.

அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். யாருமில்லை.

''நாளைக்குச் சாயங்காலம் பார்க்கிறேங்க'' என்று யாருக்கோ, யாரோ சொல்



வது போல் பொதுவாய்ச் சொன்னான்.

அவள் வந்த சிரிப்பை வாய் பொத்தி அடக்கினாள்.

சைக்கிள் ஏறினான் கௌதம்.

அன்னவாசலில் துளசிங்கம் அவன் வீட்டில் இல்லை.

அங்கிருந்து கொஞ்ச தூரத்தில் கரும்பாலைக்குப் போயிருப்பதாக வேலைக்காரன் சொன்னான். கௌதம் திரும்பி விடலாமா என்று யோசித்தான்.

"நீ வந்தால் அங்கே வரச் சொன்னாரு."

பார்க்காமல் திரும்பி விட்டால் பகைமைக்கு வலுவேறும். மேலும் துளசிங்கத்தின் திட்டம் என்னவென்று புரியாமலே போய் விடும்.

கௌதம் அங்கே போனான்.

சாலைத் திருப்பத்தில் கரும்பாலை மோட்டார் ஓடிக்கொண்டிருந்தது. ஆட்கள் பரபரப்பாக வேலை செய்தனர்.

"ஏ சொர்ணம்! வெள்ளச்சி... இந்த அன்னநடை நடந்தாப் பொழுது விடிஞ்சி வெல்லம் கொப்பறையை விட்டு எறங்கின மாதிரிதான்."

அதிகாரக் குரல் வந்த திசையைப் பார்த்தான். ரஞ்சிதம். மாசிலாவின் மனைவி.

தணதணவென்று எரியும் கரும்பாலை அடுப்பு இருந்த கொட்டகைக்கு வெளியே கூப்பிடு தூரத்தில் நிலா வெளிச்சத்தில் நாற்காலி போட்டு உட்கார்ந்திருந்தான் துளசிங்கம். அவன் பக்கத்தில் அவள் நின்றிருந்தாள். தூரத்திலேயே ஒரு பிளாஸ்கிலிருந்து தம்ளரில் எதையோ ஊற்றிக் கொண்டிருப்பது தெரிந்தது.

இப்போது ரஞ்சிதத்தின் மீது அவனுக்கிருந்த வெறுப்பு மாறி ஆழ்ந்த பரிதாபம் பிறந்தது. துளசிங்கத்தின் எந்தெந்த வாக்குறுதிகளை நம்பி இவள் இரையாகியிருக்கிறாளோ! அவன் வளர்ச்சிக்குத் தான் கருவியாகப் போவதை இவள் புரிந்து கொள்ள வெகு காலமாகும். அப்போது இவள் இளமை முடிந்து அவன் தயவுக்குக் கையேந்தும் துர்ப்பாக்கியம்தான் இவளுக்கு மிஞ்சும்.

அவன் துளசிங்கத்தை நெருங்கினான். சட்டென்று பிளாஸ்கைக் கீழே வைத்து விட்டு ரஞ்சிதம் நகர்ந்தாள். மானாபிமானம், உறுத்தல் இன்னும் அவளுக்கு மிச்சமிருப்பதைக் கௌதம் புரிந்து கொண்டான்.

"வா தம்பீ" கரும்பாலைக்குப் போட்டிருந்த டாப் லைட் வெளிச்சத்தில் துளசிங்கத்தின் முகத்தில் ஒரு நைச்சியப் புன்னகை.

அந்தப் புன்னகை அபாயகரமானது என்று கௌதமின் உள்ளுணர்வு எச்சரித்தது.

"கூப்பிட்டு அனுப்பிச்சிங்கன்னு சொன்னாங்க."

"ஆமா... நெலத்திலே ஒரு பத்து ஹார்ஸ் பவர் மோட்டார் போடணும். எதை வாங்கலாம்...? என்னன்னு ஐடியா கேக்கலாம்னு கூப்பிட்டேன்..." என்றவன் திரும்பி ஆலைப் பக்கம் பார்த்து, "ரஞ்சிதம்... அங்கே ஒரு ஸ்டூலு இருக்கும் பாரு... அதை இப்படிக் குடுத்தனுப்பு" என்றான்.

"உங்களுக்குத் தெரியாத மோட்டாரா...? என்னைப் போய் ஐடியாக் கேக்கறீங்களே! எத்தனையோ பேர் இருக்காங்களே!"

ஸ்டூல் வந்தது.

"உக்காரு தம்பீ!"

கௌதம் அமர்ந்தான்.

"இருக்காங்க... நான் இல்லேன்னு சொல்லலே. நீ படிச்சவன். விவரம் தெரிஞ்சவன். மோட்டார்கள்லே அனுபவம் உண்டு. மத்தவங்க சொல்றதுக்கும் நீ சொல்றதுக்கும் ஒரு வித்தியாசம் இருக்குமில்லே!"

என்ன சாதுரியமாக இவன் ஆளை அணுகுகிறான்! பெண்களை வீழ்த்த இது அரிச்சுவடி.

"எல்லா மோட்டாரும் நல்லதுதாங்க! ஒண்ணு ரெண்டு தவிர!"

"குறிப்பா ஒரு மோட்டாரைச் சொல்லேன்."

மீண்டும் ஆலைப் பக்கம் திரும்பி, "ரஞ்சிதம், ஒரு எவர்சில்வர் செம்பிலே கொஞ்சம் கரும்புச் சாறு குடுத்து விடு" என்றான்.

"யாருக்கு?"

"ஒனக்குத்தான் தம்பீ! ஏலக்காய், இஞ்சி, எலுமிச்சம்பழம் போட்டு பெசலாக் கொஞ்சம் தயார் பண்ணச் சொல்லியிருக்கேன்."

"எனக்கு வேண்டாங்க!"

முகத்திலடித்தாற் போல் நறுக்கென்று சொன்னான் கௌதம். துளசிங்கம் துணுக்குற்றிருக்க வேண்டும். "சரி விடு!" என்று சமாளித்தான்.

"அப்ப எந்த மோட்டார்னு குறிப்பா ஒண்ணு சொல்லேன்."

துளசிங்கம் விஷச் சிலந்தி. இதற்குப் பதில் தேவையில்லைதான். ஆனாலும் கௌதமின் தொழில் நாணயம் முந்தி நின்றது. ஒரு மோட்டாரின் பெயர் சொன்னான்.

"இதையே ரெண்டு மூணு பேரு சொன்னாங்க! எனக்கு ஒன்னைக் கலந்துக்காம முடிவு பண்ணத் தோணலே. ரொம்ப சந்தோஷம். ஆமா, உனக்கு ஏதோ சக்கரை மில்லுலே 'இண்டர்வியூ' வந்திருக்கிறதாப் பேசிக்கிட்டாங்களே!"

கௌதம் உஷாரானான்.

"அந்தச் சக்கரை மில் டைரக்டரு, சேர்மன்

"நீங்க எம். எல். ஏ. ஆனதுக்கு அப்புறம் தொகுதியில் எதுவுமே நடக்கலையாமே?"

"ஏன் நடக்கலை? ஒரு தடவை எனக்குப் பாராட்டு விழா நடந்ததே!"

— சேலம். அ. கதிர்வேல்.



லாம் நமக்கு ரொம்ப வேண்டியவங்க! நான் ஒரு வார்த்தை சொன்னாத் தட்டமாட்டாங்க!"

கௌதம் எப்படி அதை ஏற்றுக் கொள்கிறான் என்று கவனிக்கத் துளசிங்கம் பேச்சை நிறுத்தினான். கௌதம் மௌனமாயிருந்தான்.

"நீ இப்பிடிப் பட்டப்படிப்பு படிச்சுட்டுக் கெணறு கெணறா கொல்லை கொல்லையாச் சுத்தறது எனக்கு உண்மையிலேயே மனசுக்கு ரொம்பக் கஷ்டமா இருக்கு!"

மீண்டும் அவன் நிறுத்தினான். கௌதமின் மௌனம் நீடித்தது.

"ஒனக்கு அந்த வேலை பிரியம்னா சொல்லு! நாளைக்குக் காலம்பறவே நான் போய்ச் சேர்மனையும் டைரக்டர்களையும் பாத்துட்டு வர்றேன்."

இப்போதும் கௌதம் பேசவில்லை.

கௌதம் பேச மாட்டான் என்று புரிந்து கொண்டான் துளசிங்கம். அவனும் விட்டு விடத் தயாராயில்லை.

"என்ன சொல்றே தம்பி! இந்தப் பட்டிக் காட்டு ஜனங்களுக்கு உன் அருமை புரியாது. இவுங்களுக்காக நீ உயிரை விட்டுப் பாடுபட்டியானாக் கூட இவங்களுக்குப் புரியவும் புரியாது. நன்றியும் இருக்காது. நீ எதுக்கு இவங்களுக்காக மல்லாடி மண்டையை ஒடைச்சுக்கறே?"

பேச்சு வரவேண்டிய இடத்திற்கு வந்து விட்டது. தான் வரவழைக்கப்பட்ட விவரமும் கௌதமுக்கு விளங்கிற்று.

"வேலை வர்ற காலத்துக்குத்தானா வந்துட்டுப் போகட்டுங்க! எனக்கு இப்படிக் குறுக்கு வழியெல்லாம் ஒத்து வர்றதில்லே!"

கௌதம் பிசிறில்லாமல் அந்த யோசனையைக் கத்திரித்தான்.

"அப்படியா?" துளசிங்கத்திற்கு ஏமாற்றத்தை வெளிக்காட்டுவதில்கூட ஒரு பெரிய மனுஷ தோரணை உண்டு. "அப்போ சரி!"

சந்திப்பு முடிந்து விட்டதென்று எழுந்தான் கௌதம்.

"உட்கார் தம்பி! ஏதாவது அவசர வேலையா?"

"இல்லே."

"அப்ப உட்காரேன். எனக்கு ஒம்மாதிரி படிச்சவங்ககிட்டே, அதுவும் இப்படிச்சுயமரியாதையோட உள்ளவங்ககிட்டே பேசறதுன்னா ரொம்பப் பிடிக்கும்!"

சிலை போல் நிச்சலனமாகக் கேட்டுக் கொண்டான் கௌதம்.

"உன்னை மாதிரி பொதுக் காரியத்திலே ஈடுபாடு உள்ளவங்க இப்ப வரவரக் குறைஞ்சுக்கிட்டே போறாங்க... உனக்கு மாரிமுத்து தெரியும்லே?"

"தெரியாது."

"அதாம்பா... பக்கத்தூர்க்காரன். பாய் பின்ற தொழிலாளிங்களுக்கெல்லாம் லீடரு... அவனும் ஒன்னைப் போல ஊர்ல நல்லது கெட்டதுன்னா நாந்தான்னு முன்னே நிப்பான். ரொம்ப பேமஸ் ஆச்சே...! நீ பாத்ததில்லே?"

"இல்லே."

"ஒன்னை மாதிரியே துடிப்பானவன்! என்ன ஆச்சு தெரியுமா? ராவோட ராவா அடிச்சுத் தீத்துக்கட்டி ரயில்வே லைன்லே தூக்கிப் போட்டுட்டானுங்க. எல்லாம் நம்ப ஆளுங்கதான். குடிவெறி! வாய்த் தகராறு கைச் சண்டையா முத்திப் பெரிய கோளாறாய்ப் போச்சு! அப்புறம் எங்கிட்டே ஓடியாந்தானுங்க."

மீண்டும் துளசிங்கம் அமர்த்தலாக ஓர் இடைவெளி கொடுத்தான். வெளிப்படையான பயமுறுத்தலைக் காட்டிலும் இது சிறுபிள்ளைத்தனமாக இருப்பதாகக் கௌதமுக்குப் பட்டது.

"தப்புத்தண்டாதான்! பண்ணிட்டானுங்க. நம்ப ஆளுங்களாச்சே. விட்டுட முடியுமா? ஜாமீன்லே இட்டாந்துட்டேன். கேஸு பிசுபிசுத்துப் போச்சு."

கௌதம் மனசுக்குள் ஒரு சிரிப்போடு கேட்டுக் கொண்டான்

"இன்னிக்கே ஒருத்தனைக் காட்டி தட்டிட்டு வாடான்னா தீத்துக் கட்டிட்டுத் தலை குனிஞ்சு நிப்பானுங்க இவனுங்க."

"நல்லதுங்க! நீங்க வாங்கறதுன்னா நான் சொன்ன மோட்டாரையே வாங்குங்க."

என்று அதற்குமேல் அவன் சொன்ன எந்த மிரட்டலும் தன்னைச் சற்றும் பாதிக்கவில்லை; தனக்குச் சிறிதும் சம்பந்தமற்றவை என்று முகத்திலடித்தாற்போல் உணர்த்திவிட்டுச் சைக்கிளை நோக்கி நடந்தான் கௌதம்.

(தொடரும்)

# எனக்கென்று ஓர் உரிமை

வந்தனா சாவகாசமாக அலங்காரங்களைக் கலைத்துக் கொண்டிருந்தாள். பெண் பார்க்க வந்து விட்டுப் போனவர்கள், நுனி நாக்கால் ருசி பார்த்து விட்டுப் பெரும் பகுதி மிச்சம் வைத்து விட்டுப் போன டிபன் தட்டுகள் ஹாலில் இறைந்து கிடந்தன. கல்யாணி அவற்றை அடுக்கி எடுத்துப் போய் பின்புறம் குழாயடியில் போட, வாசவன் ஜமுக்காளத்தைச் சீராக மடித்து வைத்தான்.

"ரொம்பப் பெரிய இடம். அவங்களாவே நம்மைத் தேடி வந்தது நாம செய்த புண்ணியம்." ஈரக்கைகளைத் துடைத்த படி சோபாவில் உட்கார்ந்திருந்த விசுவத்திடம் வந்தாள் கல்யாணி.

"அவங்க சம்மதம் சொல்லியாச்சு. சீர் வரிசையும் அப்படி ஒண்ணும் பிரமாதமாக் கேட்கலே. சூட்டோட சூடா முகூர்த்த நாள் குறிச்சிட வேண்டியதுதான்" என்றார் விசுவம் உற்சாகமாக.

"அதுக்கு முன்னாடி என் அபிப்பிராயம்னு ஒண்ணு இருக்கே..." தலை முடியை அவிழ்த்து ஓசாகத் தோளில் படர விட்டுக் கொண்டே வந்து நின்றாள் வந்தனா.

"ஏண்டி! இந்தப் பையனுக்கென்ன? படிப்பு, அழகு, உத்தியோசம், பணம்... எதிலே குறைச்சல்?" எரிச்சலுடன் கேட்டாள் கல்யாணி.

"இதோ பார் வந்தனா. அப்பா, அம்மா எது செஞ்சாலும் அதுக்கு எதிரா உன் இஷ்டம்னு மறுத்துப் பேசறதே உனக்கு வழக்கமாப் போச்சு. அவங்க நீர யோசிச்சுத்தானே உனக்காக மாப்பிள்ளை தேர்ந்தெடுத்திருக்காங்க!" வாசவன் தங்கையைச் சமாதானம் செய்தான்.

"அதுக்காக? என் இஷ்டத்துக்கு விரோதமா என் எதிர் காலம் அமையறதை நான் ஒப்புக்கவே மாட்டேன் அண்ணா!" தீர்மானமாகக் கூறினாள் வந்தனா.

"இதோ பாரும்மா. உனக்குப் பிடிக்கலேன்னா சரி. ஆனா அதுக்குக் காரணம் என்னன்னு சொல்லிடு..." —விசுவம் கேட்டார்.

"நீங்க பிள்ளையோட படிப்பு, வேலை, பணம், அழகுன்னுதான் பார்த்தீங்க. ஆனா அவன் குணத்தைப் பத்தி உங்களுக்கு என்ன தெரியும்?"

"உனக்கு ரொம்பத் தெரிஞ்சு



போச்சோ?'' கல்யாணி கோபத்துடன் கேட்டாள்.

''லெண்ட் பிரசன்ட் தெரியும். பையன் சரியான பொறுக்கி. நான் வந்து நின்னப்போ என்னைப் பார்த்த பார்வையே கீழ்த்தரமா இருந்தது. தனியாப் பேசணும்னு தானே என்ன கேட்டான் தெரியுமா? கல்யாணம் ஆறதுக்குள்ளேயே நான் தினம் அவனோட பீச், சினிமா, ஹோட்டல்னு சுத்தணுமாம். அதுக்கு வேறே ஆளைப் பாருடான்னு மூஞ்சியிலே அறைஞ்ச மாதிரி சொல்லிடலாமான்னு தோணித்து. கஷ்டப்பட்டு, அதுவும் உங்களுக்காக அடக்கிண்டேன்'' என்று படபடவெனப் பொரிந்தாள் வந்தனா.

''இந்தக் காலத்திலே பிள்ளைகள் இப்படி ஆசைப்படறது சகஜம்தானே வந்தனா! இதுக்குப் போய் நீ...'' வாசவன், வந்தனாவின் முறைப்பைப் பார்த்துச் சட்டென நிறுத்தினான்.

விசுவம் — கல்யாணி தம்பதி பெற்றெடுத்த இரண்டு குழந்தைகளுமே இரு துருவங்கள். வாசவன் மிக மென்மையானவன். சிறு வயது முதலே பயந்த சுபாவம். கொஞ்சம் கண்டிப்பாகப் பேசிவிட்டாலே போதும், அழுதுவிடுவான். நூறு முறை 'சாரி' சொல்லி விடுவான். அப்பா சொன்னதே வேத வாக்கு. இம்மியளவும் தவற மாட்டான்.

வந்தனா அதற்கு நேர் எதிர். இரண்டு வயதுக் குழந்தையாக இருக்கும்போதே தனக்குப் பிடித்தமான உடைதான் வேண்டுமென்று அழுது ரகளை செய்து விடுவாள். படிப்பிலும் அப்படித்தான். அப்பா, அம்மா கெஞ்சியும் மிரட்டியும் பார்த்தார்கள். ஊஹூம்... நடக்கவில்லை. தனக்குப் பிடித்த சப்ஜக்டாக காமர்ஸைத் தேர்ந்தெடுத்துப் படித்துத்தானாகவே அப்ளிகேஷன் போட்டு பாங்க்கில் வேலைக்குச் சேர்ந்தாள். பெண், டாக்டராக வேண்டும் என்று திட்டம் போட்ட பெற்றோர்கள் பல்லைக் கடித்தார்கள்.

அதனால், வீட்டில் வந்தனா தனிக் கட்சிதான். மற்ற மூவரும் ஒரு கட்சி. அந்த இடம் தட்டிப் போனது. அதன்பின் வந்த இடங்களையும் வந்தனா ஒவ்வொரு காரணம் காட்டி ஒதுக்கி விட்டாள். கடைசியாக மாதவனை அவளே தேர்ந்தெடுத்தாள். அவள் தோழியின் அண்ணனாம். அப்பா அம்மாவிடம் சொல்லி ஜாதகத்தை எடுத்துப் போய்க் கேட்கச் செய்தாள்.

ஏதோ இந்த மட்டிலாவது மாதவனைப் பற்றிச் சொன்னதுடன் நிறுத்திக் கொண்டாளே. அவளாகப் போய் ஏதாவது கோயிலில் தாலி கட்டிக் கொண்டு வந்து நிற்காத வரை சரி என்று உடனேயே, விசுவமும் கல்யாணியும் ஓடினார்கள் ஜாதகத்தோடு.

மாதவன் நல்ல பையனாக இருந்தான். சொத்து என்று அதிகம் இல்லாவிட்டாலும் எம்.எஸ்ஸி. படித்துக் காலேஜ் லெக்சரராக இருந்தான். ஜாதகமும் பொருந்தி இருந்தது. ஏற்கெனவே பார்த்த பிள்ளைகளைவிட இவன் கொஞ்சம் மட்டுதான் என்றாலும், வந்தனா ஒப்புக் கொண்டு விட்டாளே என்ற திருப்தியில் கல்யாணத்தை நல்ல விதமாக நடத்திக் கொடுத்தார்கள்.

அப்புறம் வாசவனுக்குப் பெண் பார்க்கும் படலம் தொடங்கியது. ஆரம்பத்திலேயே அவன் சொல்லி விட்டான்.

''அம்மா! நான் வந்தனா மாதிரி இல்லை. உங்களைப் பரிபூரணமாக நம்பறேன். நீங்கள் பார்த்துச் சரி என்கிற பெண்ணையே கல்யாணம் பண்ணிக்கிறேன்,'' என்றான்.

விசுவமும் கல்யாணியும் பிள்ளையின் அடக்கத்தைப் பார்த்துப் பூரித்துப் போனார்கள்.

இரண்டு மூன்று இடங்களில் அலசி எடுத்துப் பூரணியை வாசவனுக்குக் கல்யாணம் செய்து வைத்தார்கள். வந்த புதிதில் பூரணி பூரணமாகத்தான் இருந்தாள். நாளாக நாளாக பூரணம் வெறும் ரணமாக மாறத் தொடங்கியது.

ஜாடைமாடையாகவும், செய்கையாலும் மாமனார் மாமியாரை வெறுக்கத் தொடங்கிய பூரணி ஒரு நாள் அவர்கள் எதிரிலேயே கணவனிடம் கேட்டுவிட்டாள்.

''ஏங்க! உங்க அப்பா ரிடையர் ஆனவர் தானே? உத்தியோகமா பாழாப் போறது லீவு எடுக்க முடியாமே? இப்படி எங்காவது போய் வரக் கூடாதா? நானும் பார்க்கிறேன், ரெண்டு பேரும் வீட்டைச் சுத்தற பெருச்சாளிகள் மாதிரி இங்கேயே சுத்திக்கிட்டு இருக்காங்களே?''

விசுவமும் கல்யாணியும் துடித்துத்தான் போனார்கள். அவர்கள் சம்பாத்தியத்தில் கட்டிய வீட்டில் அவர்கள் வாழ்வதற்குப் பெருச்சாளி என்கிற பட்டமா?

''என்னடா இது?'' என்று கல்யாணி பதற்றத்துடன் கேட்டாள்.

''என்னமோ அவளுக்குப் பிடிக்கலை போலிருக்கு அம்மா.'' பிள்ளை அமைதியாகப் பதில் சொன்னான். எப்பொழுதுமே அதிர்ந்து பேசி அறியாதவன். அடங்கிக் கிடந்தே பழக்கப்பட்டவன்.

மறுநாளே விசுவமும் கல்யாணியும் மூட்டை கட்டினார்கள்.

''எங்கே அப்பா?''

'போக வேண்டாம்' என்று சொல்லத் தைரியமில்லாமல், அதுவும் பூரணி அருகில் இல்லை என்கிற தைரியத்தில் கேட்டான், பிள்ளை.

''எங்கேயோ! ஆனால் போனதும் அட்ரஸ் தெரிவிச்சுடறேன். ஏன்னா எங்களுக்கு ஏதாவது ஆயிட்டா நீ வந்துதானே கொள்ளி போடணும்? பிள்ளை கையாலே கொள்ளி வைக்காட்டா எங்களுக்கு நரகத்திலே கூட

பானுமதி ராஜகோபாலன்



"என்ன சார், ஹோட்டல்லே டிபன் சாப்பிட்டுட்டு வர்றீங்களா?"

"ஆமா, எப்படிக் கண்டுபிடிச்சீங்க?"

"சட்டை, பேண்டெல்லாம் மாவா இருக்கே! அதை வைச்சுத்தான்!"

— நீடாமங்கலம் ஜே. பி.

இடம் கிடைக்காதே?" — அப்பா இடக்காகப் பதில் சொன்னார்.

இருவரும் கையிலுள்ள பணத்தை வைத்துக் கொண்டு காசியில் போய் ஸெட்டில் ஆகிவிட வேண்டும் என்று முடிவு செய்தார்கள்.

போவதற்கு முன் பெண்ணை ஒரு தடவை பார்த்துவிட்டுப் போய் விடலாம் என்று மதுரைக்குக் கிளம்பினார்கள். அங்கே மாப்பிள்ளை, பெண்ணைப் பற்றி என்னவெல்லாம் புகார் செய்யப் போகிறாரோ என்ற பயமும் கூடவே வந்தது.

ஆட்டோவில் வந்து இறங்கியதுமே ஓடி வந்தாள் வந்தனா. சற்று பெருத்திருந்ததைப் பார்க்கப் பெற்ற மனம் பூரித்தது.

"என்ன அம்மா! அப்பா! சர்ப்பிரைஸ் விசிட். வாங்க உள்ளே..." என்று அழைத்துப் போனாள்.

வீடு பிரமாதமாக இருந்தது. வந்தனா, மாதவன் இருவருமே வேலைக்குக் கிளம்பிக் கொண்டிருந்த நேரம் போலும்!

"ஆபீஸ் கிளம்பிக்கிட்டிருக்கீங்க போல இருக்கு. போயிட்டு வாங்க. நாங்கள் இருந்து பேசிட்டுச் சாயங்காலமாகக் கிளம்பறோம், நீங்க வந்த பிற்பாடு," என்றார் விசுவம்.

"நோ... நோ... ஆபீஸுக்கு இல்லை. சும்மா பிக்னிக்... இன்னொருநாள் போனால் போச்சு!"

மாதவன் மார்க்கெட்டுக்குக் கிளம்பினான்.

கல்யாணி அதுவரை அடக்கி வைத்திருந்த கண்ணீரைப் பொலபொலவெனக் கொட்டித் தீர்த்தாள்.

வந்தனா பதறி விட்டாள். விசுவம் நடந்தவற்றையும் தங்கள் முடிவையும் சொன்னார்.

வந்தனா சீற்றத்துடன் கேட்டாள்: "ஏம்மா! உங்களுக்கு வாசவன் ஒரு பிள்ளை தானா? நான் ஒரு பெண் இருக்கிறது மறந்து போச்சா?"

"என்ன இருந்தாலும் நீ பொண்ணுதானே அம்மா. உன்கிட்டே மிஞ்சிப் போனா ஒரு மாசத்துக்கு மேலே இருக்க முடியுமா?" கல்யாணி கேட்டாள்.

"அங்கேதான் அம்மா தப்புப் பண்ணறீங்க. பெற்றதிலே பெண் என்ன, பிள்ளை என்ன? பார்க்கப் போனால் நீங்கள் பிள்ளையைத்தான் பெண் மாதிரி வளர்த்தீங்க. அடக்க ஒடுக்கமா வளர்ந்த பிள்ளை, எப்பவுமே சுயமாக யோசிக்கத் தெரியாதவன், இத்தனை நாள் உங்கள் யோசனைப்படி நடந்தான். இப்ப பெண்டாட்டியின் யோசனைப்படி நடக்கிறான்."

பெற்றவர்களுக்கு அந்த உண்மை உறுத்தியது.

"நீ சொல்றது உண்மைதான் அம்மா."

"அதனாலேதான் சொல்றேன். காசியும் வேண்டாம், ராமேச்வரமும் வேண்டாம். இங்கேயே நிரந்தரமா இருந்துடுங்க."

விசுவத்துக்குக் கண்கள் பனித்தன. "நீ சொல்லலாம் அம்மா! பெத்தவங்கன்னு பாசம். ஆனால் உன் புருஷன்?"

வந்தனா சிரித்தாள்.. "என்னப்பா என்னைப் பத்தித் தெரியாத மாதிரி கேட்கிறீங்க. எப்பவுமே எனக்குன்னு ஒரு முடிவு, என் இஷ்டம், என் உரிமைன்னு போராடறவ தானே நான்? இப்ப உங்களை இங்கே வெச்சுக்கிறதிலே மட்டும் அந்த உரிமையை விட்டுக் கொடுத்துடுவேனா? சண்டை போட்டாவது வாங்கிட மாட்டேனா?"

"உனக்கு வேணா அது உரிமைப் போராட்டமா இருக்கலாம்... எங்களுக்கு அது கேவலமில்லையா வந்தனா?" கல்யாணி மறுத்தாள்.

"அதுக்கு அவசியமில்லை அத்தை." திடுக்கிட்டுத் திரும்பினார்கள். — மாதவன்தான்!

"கல்யாணமாகறதுக்கு முன்னாடியே வந்தனா எங்கிட்டே தீர்மானமாச் சொல்லிட்டா. நீங்க பார்த்த இடங்களையெல்லாம் அவ நிராகரிச்சதுக்குக் காரணமே நீங்கதானாம். அவளுக்கு வாசவன்கிட்டே நம்பிக்கை கிடையாது. எப்பவுமே சுயமாச் சிந்திக்கத் தெரியாதவன். இப்ப அப்பா அம்மாவுக்குத் தலையாட்டறவன் அப்புறம் பெண்டாட்டிக்குப் பலமா தலையாட்டுவான். பிறகு உங்க கதி நிர்க்கதியாயிடும். அதனாலே கடைசி வரை உங்களை வெச்சுக் காப்பாத்தற நிலைமை வரும். அப்ப முகம் சுளிக்காமே ஏத்துக்கணும்னு கண்டிஷன் போட்டுட்டுத்தான் கல்யாணம் பண்ணிண்டா. நானும் சின்ன வயசிலே அப்பா அம்மாவை இழந்தவன். பெரியவங்களோட அன்பு பாசத்துக்காக ஏங்கறவன். அதனாலே சந்தோஷமா ஏத்துண்டேன். இப்பச் சொல்லுங்க, இங்கே தங்கறதை நீங்க கேவலமா நினைக்கறீங்களா?"

அதுவரை வந்தனாவை எரிச்சலும் கோபமுமாகவே பார்த்துப் பழகிய கல்யாணி இப்பொழுது அவளை ஒரு தேவதையைப் பார்ப்பது போல் பார்த்தாள்.

"அம்மா வந்தனா! வாசவன் மாதிரி ஒரு பிள்ளைக்குப் பதில் உன்னை மாதிரி பத்துப் பொண்ணுகளைப் பெத்துக்கலாம் அம்மா!" என்றார் விசுவம், மனம் நெகிழ.

# "ராஜாஜி—93"

பலமான மழை கொட்டிய ஒரு நாளில், போக்குவரத்து ஸ்தம்பித்து நின்ற தினத்தில், வயது முதிர்ந்த வீரர் வெளியே கிளம்பினார். அவர் 1937ல் மதுவிலக்குச் சட்டத்தை உருவாக்கி அமுலுக்குக் கொண்டு வந்தவர். கருணாநிதியின் இல்லத்துக்குக் காரை விடச் சொன்னார். அங்கே அவரிடம் தமிழக மக்கள் சார்பாக, 'மதுவிலக்குத் தொடர வேண்டும்' என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டார் ராஜாஜி. வீடு திரும்பும் போது அவர் மனநிலை எப்படி இருந்தது? அவரே கூறுகிறார்: "நம்பிக்கையுடன் அல்ல; மனசஞ்சலத்துடன் தான் வீடு திரும்பினேன்." சீக்கிரமே, மதுவிலக்கை ரத்து செய்தது சட்டப்படி செல்லாது என்று வழக்குப் போட நடவடிக்கை எடுத்துக் கொண்டார் ஸி. ஆர். 93 வயதான மூளை, முன்னெப்போதையும் போல் சுறுசுறுப்பாக வேலை செய்தது. சுயமாகச் சிந்தித்துப் புதிய கோணங்களில் பிரச்னையைப் பார்த்தது. சென்னை நகரின் முதல் தரமான வழக்கறிஞர்களுக்கு ஸி. ஆர்., உரிய மரியாதையுடன் கூடிய தயக்கம் காட்டி, மதுவிலக்கு ரத்து செய்யப்பட்ட முறையில் உள்ள தவறுகளைச் சுட்டிக் காட்டினார்!

மது வேண்டுவோரிடையே ஓரிரு நாட்களுக்கு ரொம்பக் கவலை நிலவியது. அரசாங்கத்தின் சட்ட நிபுணர்கள், மதுவிலக்கு ரத்து உத்தரவை, ஓட்டைகளை அடைப்பதற்காக மாற்றி எழுதினார்கள். அபரிமிதமான மெஜாரிட்டி பலம் இருந்ததால் கருணாநிதி, ஸி. ஆரின் எதிர்ப்பை நசுக்கினார். "மதுவிலக்கு ரத்துச் சட்டத்துக்கு அங்கீகாரம் அளிக்க வேண்டாம்" என்று ராஜாஜி, ஜனாதிபதி கிரியைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். "உங்கள் கருத்துக்களைக் கவனித்தேன்" என்று கிரி பதில் எழுதி விட்டு, மதுவிலக்கு ரத்துச் சட்டத்துக்கு அங்கீகாரம் அளித்தார்.

ராஜாஜியுடன் தினமும் சற்று நேரம் செலவிட்டு வந்த சதாசிவம், மதுவிலக்கு ரத்து செய்யப்பட்டதானது ராஜாஜியின் ஜீவனையே காயப்படுத்தி விட்டதாகக் கருதினார். தமது 93 வது பிறந்த நாளுக்குச் சில தினங்கள் முன்னதாகத் தமது இறுதிக் கடமைகள் பற்றி ஸி. ஆர்., சதாசிவத்திடம் பேசினார். "உயிர் வாழ வேண்டும் என்கிற மனோபலத்தை நீங்கள் இழந்து விட்டீர்களா, என்ன?" என்று சதாசிவம் நேரடியாகவே ஸி. ஆரைக் கேட்டார். "இல்லை" என்றார் ராஜாஜி. "ஆனால் ஒருவர் தொடர்ந்து உயிர் வாழ்ந்து கொண்டிருப்பதற்கு ஏதேனும் ஒரு முக்கியமான நோக்கம் இருக்க வேண்டுமல்லவா?"

ராஜாஜியின் இந்த மனச்சோர்வு நிரந்தரமானதாகி விடவில்லை. வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக்கிக் கொள்ள அவர் தொடர்ந்து முயற்சி மேற்கொண்டார். சுயராஜ்யா வாசகர்களுக்கு அவர் எழுதிய ஒரு குறிப்பு இதனை உணர்த்துகிறது. அதன் பின்னணி என்ன?

சதாசிவமும் அவரது நண்பர்களும் ராஜாஜியின் சரித்திரத்தை இயன்ற மட்டில் ஏட்டில் பதிவு செய்து பாதுகாக்க முயற்சி எடுத்து வந்தனர். இதற்காக "ராஜாஜி —




* ராஜாஜி — சதாசிவம்: அன்பான கவனிப்பு.

93'' என்ற தலைப்பில் ஒரு மலர் வெளியிட முடிவு செய்து, உழைத்தனர். இந்த முயற்சி ராஜாஜிக்குத் திருப்தி அளித்த போதிலும் இதன் காரணமாகத் தமது வாழ்க்கைப் பணி முற்றுப் பெற்று விட்டதாக யாரும் எண்ணி விடக் கூடாது என்றும் கருதினார். இதை சுயராஜ்யா வாசகர்களுக்கு அவர் எழுதித் தெளிவுபடுத்தினார்:

'''ராஜாஜி — 93' என்ற மலர் வெளியிடுவது குறித்து ஏகப்பட்ட பரபரப்பான நடவடிக்கைகள் காணப்படுகின்றன. இது, 'இந்த டிசம்பருடன் பொது வாழ்விலிருந்து விலகிக் கொள்' என்று எனக்கு உத்தரவிடுவது போல் இருக்கிறது. இதை நான் செய்யப் போவதில்லை. என் வாழ்நாளின் எதிர்ப்புப் பணி வழக்கத்துக்கு மாறாக மிக நீண்ட ஒன்றாக இருந்து வந்திருப்பதை நான் உணர்கிறேன். ஆனால் அதை நான் முடித்துக் கொள்ளப் போவதில்லை. எத்தனை காலம் நாம் வாழ்வோம் என்பதை நிர்ணயிக்கும் அதிகாரம் நம்மிடம் இல்லை. ஆனால் வாழ் நாளில் என்ன செய்யப் போகிறோம் என்பதை நிர்ணயிப்பதற்கு நமக்கு நாமேதான் எஜமானர்கள். எனக்கு வயதாகி விட்டது, பலவீனமடைந்து விட்டேன் என்பது உண்மைதான். ஆனால் பொது வாழ்வில் நடக்கின்ற அநீதிகளை, அதிகார துஷ்பிரயோகங்களைப் பார்க்கும் போது இந்த நிலைமை மாறி நாடு முன்னேறத் தேவைப்படும் போராட்டத்திலிருந்து விலகி ஓடிப் போய் விட எனக்குச் சம்மதமில்லை. (13.11.71)

புது வருஷம் — 1972 — தொடங்கிய போது ராஜாஜி மேலும் பலவீனமடைந்திருந்தார். அவரது கை விரல்களுக்கு இயக்கச் சக்தியை ஊக்கும் வகையில், தமது தேவைகளை அவர் இதுவரை தாமே கவனித்து வந்தார். ஆனால் இப்போது அவர் பிறர் உதவியை நாட நேர்ந்தது. காலையில் தாமே முக ஷவரம் செய்து கொள்வதை நிறுத்தினார். கல்கி காரியாலயத்தில் இருந்த ஒரு கூர்க்கா காவல்காரர், இந்தப் பணியை அன்புடன் ஏற்று, ராஜாஜிக்குத் தினமும் காலையில் முக க்ஷவரம் செய்து வைத்தார். மார்ச் மாதத்தில் ஒரு நாள், ராஜாஜி நிலை தடுமாறிப் படுக்கை அறையில் விழுந்து விட்டார். பார்க்கப் போனால் அந்த வயதில் அவருக்கு இதனால் பல இடங்களில் எலும்பு முறிவுகள் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆனால் ஒரு சிறிய விரிசல் கூட எக்ஸ்ரேயில் எங்கும் காணப்படவில்லை! ''ஏன் நான் காயப்படாமல் தப்பினேன்? எதனால் இன்னும் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்?'' என்று ராஜாஜி தம்மைத் தாமே கேட்டுக் கொண்டார். ''இந்தியாவுக்கும் பாக்கிஸ்தானுக்கும் இடையே நட்புறவைப் பலப்படுத்த என்னால் ஆன உதவியைச் செய்யத்தான்'' என்று பதில் கூறிக் கொண்டார்!

நான்கு மாதங்களில் இந்தியா — பாகிஸ்தான் உச்சகட்ட மாநாடு ஸிம்லாவில் நடந்தது. இந்திராவும் புட்டோவும் பகுதி ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திட்டார்கள். புட்டோவுக்கு வாழ்த்தும் வரவேற்பும் தெரிவித்துத் தந்தி கொடுத்திருந்த ராஜாஜி, இந்த ஒப்பந்தத்தை ''நன்னம்பிக்கை ஒப்பந்தம்'' என்று வர்ணித்தார். சீக்கிரமே இரண்டாவது உச்சகட்ட மாநாடு நடந்து இந்தப் பகுதி ஒப்பந்தம் முழுமையான ஒப்பந்தமாக மாற வேண்டும் என்று விருப்பம் தெரிவித்தார். ''இருதரப்பிலும் உள்ள மக்கள், 'இன்னும் தீர்க்கப்படாத பிரச்னைகள் இவ்வளவு இருக்கின்றனவே' என்று அவை குறித்துக் கவலைப்பட்டுக் கொண்டிருக்க அனுமதிக்கக் கூடாது.''

வேறு பல விஷயங்களிலும் அவர் கவனம் சென்றது. 'சுதேசமித்திரன்' மீண்டும் தோன்றியதை வரவேற்றார். பத்து வயது பெண்ணைக் கற்பழித்த ஒருவனுக்குத் தரப்பட்ட தண்டனை போதாது என்று வாதாடினார். 'இந்தியன் எக்ஸ்பிரஸ்', விஸ்கி விளம்பரங்களை வெளியிடுவதைக் கண்டித்தார். இந்திரா காந்தியின் சர்வாதிகாரப் போக்குகளையும் நீதிமன்றங்களின் சுதந்திரத்தில் தலையிட்டு அச்சுறுத்துகிற போக்கையும் சாடினார். உகாண்டா நாட்டு அதிபர் இடி அமீனின் அசுரத்தனங்களை உலகமே ஒன்றுபட்டு எதிர்க்க வேண்டும் என்று அறைகூவல் விடுத்தார்.

சதாசிவத்துக்குத் தம்மிடம் இருந்த பக்தியையும் தமது நலன்களைக் காப்பதில் இருந்த திறமையான அக்கறையையும் ராஜாஜி வெகுவாக மதித்தார். ''என்னுடைய கவனிப்பில் நீங்கள் இருக்கப் போவதில்லை; உங்களுடைய அன்பான கவனிப்பில்தான் நான் இருக்கப் போகிறேன்'' என்று 1966 லேயே ஸி. ஆர். சதாசிவத்துக்கு எழுதியிருந்தார். இப்போது 1972 கோடையில், ஸி. ஆர். எவ்வளவு ஆட்சேபித்தும் கேளாமல், சதாசிவம் அவர் படுக்கை அறையில் ஒரு ''ஏர் கண்டிஷனர்'' பொருத்தினார். அதன் பிறகு ராஜாஜி, தாம் ஆட்சேபித்தது ஏன் என்பதை விளக்கினார்:

''என் தகப்பனார் காலமாவதற்குச் சில தினங்கள் முன்னதாக நான் ஒரு டேபிள் ஃபேன் வாங்கியிருந்தேன். ஒரு நாள், அவர் தூங்கிக் கொண்டிருக்கிறார் என்று நினைத்து நான் டேபிள் ஃபேனை நிறுத்தி விட்டேன். அவர் இலேசாக அசைந்து கொடுத்து, 'டேபிள் ஃபேனுக்கு ரொம்பச் செலவாகுமா?' என்று கேட்டார்.''

இதைச் சொன்ன போது ஞானி ராஜாஜியின் கண்கள் பனித்திருப்பதை சதாசிவம் கண்டார்.

(தொடரும்)

# ஒரு 15 போஸ்ட் கார்டு போதும்!

நானும் வீட்டிலிருந்த படியே, ஓய்வு நேரத்தில் தபால் மூலம் ஆங்கிலம் கற்க விரும்புகிறேன்.
எனவே பயிற்சிபற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் மேற்கண்ட முகவரிக்கு உடனே அனுப்பிவைக்கவும்.
இப்படிக்கு,
கற்க வேலு

WRITE PIN CODE IN ADDRESS




To
விவேகானந்தா கல்வி நிலையம்
தபால் பெட்டி எண்: 4986
9. மேட்லி ரோடு, தி. நகர்.
சென்னை
PIN 600017

உங்களுக்கும் உங்களது முன்னேற்றத் திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறு வதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடை யாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண் டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதில ளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங் கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற் றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டுபோதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழை யின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல் களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற் கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர் கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

NAGA

# அதிர்ஷ்ட தேவதை ①

**1986 — டிசம்பர் 5 — வெள்ளி**

'**சா**ண்டில்யா பிரதர்ஸ்' என்ற நிறுவனத்தின் ஆரம்ப உரிமையாளர் கிருஷ்ண சாண்டில்யாவின் பேரன் ரமேஷ் சாண்டில்யா இன்று காலை பம்பாய்க்கு ஓடியிருக்கிறான். நாளை மறுநாள் ஞாயிறன்று அவனுடைய 'மோகினி' மகாலட்சுமியில் ஓடுகிறது. ஏற்கெனவே நான்கு பந்தயங்களில் தொடர்ந்து, மற்ற குதிரைகளைப் பின்னுக்குத் தள்ளியிருந்த 'மோகினி' இந்த ஞாயிறன்றும் தனக்குத் தங்கக் கோப்பையையும் ஒரு லட்சம் ரூபாய் பரிசுப் பணத்தையும் அள்ளிக் கொடுக்கப் போகிறது என்று ரமேஷ் நம்பியிருக்கிறான்.

நிறுவனத்தில் மானேஜர், உதவி மானேஜர் என்ற பதவிகள் எதுவும் கிடையாது. தனக்கு அந்தரங்கக் காரியதரிசி போல நடந்து கொள்ளக்கூடியவன், கே. எஸ். வி. ரமணி ஒருவன்தான் என்று எண்ணிய ரமேஷ், அவனைத் தலைமை குமாஸ்தாவாக வைத்துக் கொண்டு, அவன் மூலம் மற்ற குமாஸ்தாக்களிடமிருந்தும், ஏனைய சிப்பந்திகளிடமிருந்தும் வேலை வாங்கினான். சம்பள விஷயத்தில் ரமேஷ் சற்றுத் தாராளமாக இருந்ததால், ஒட்டிக் கொண்டவர்கள் விலகவில்லை.

முதலாளி ஊரில் இல்லையென்றால்,



ஆபீஸ் ஆபீசாக இராது. ஒரு மனமகிழ் மன்றமாக மாறிவிடும். இந்த மன்றத்திலி ருந்து விடுபட்டுத் தனித்து நிற்கிறவன் 'நெய் ரோஸ்ட்' இச்சாதான். அவன் தனக்குத் தானே பேசிக் கொள்ளுவான். சிரித்துக் கொள்ளுவான். ஆனால் ஒரு நாள் கூட அழுதது கிடையாது. ஆகஸ்ட் பத்தாம் தேதி அன்று தனது இருபத்தெட்டாவது பிறந்த நாளை மௌன சோகத்துடன் கொண்டா டிய டைப்பிஸ்ட் சுகந்தி, அவ்வளவாக ஆபீஸ் அக்கப்போரில் கலந்து கொள்ள மாட் டாள். ஓர் ஆண் துணை இன்னும் அமைய வில்லையே என்ற தாபத்தில் அவள் தன்னுள் ளேயே முடங்கிப் போவாள். ரமணி மீது அவளுடைய மனம் புயலாய் அடித்துக் கொண்டிருந்தது. ஆனால் அவன் ஓரக் கண்ணால் கூட அவளுக்குக் கிருபை காட்ட வில்லை. காரணம், அவனுடைய இரு கண் களும் எம். மணிமாலா மீதே நிலைத்துப் போயிருந்தன. எம். மணிமாலா தன் பெயரை, எம். எம். மாலா என்று அடக்கி வைத்திருந் தாள். ரமணி அழைக்கும் பெயர் மாலு. அவ ளைப் பற்றி நினைக்கும் போதெல்லாம்



எம். எம். ரப்பர் மெத்தை நெஞ்சில் விரியும். மாலுவும் ஒரு குமாஸ்தா.

இந்த மூன்று குமாஸ்தாக்கள் மற்றும் டைப்பிஸ்ட் சுகந்தியைத் தவிர இரண்டு சிப்பந்திகளும் ஒரு வாட்ச்மேனும் உண்டு. அவர்களில் வெங்கடாசலம், என்கிற வெங்கிக்கு வயது அறுபதாகப் போகிறது. ரமேஷுக்கு ரேஸ் விஷயங்களில் குழப்பம் ஏற்படும் போதெல்லாம் கீதோபதேசம் செய்கிறவன் வெங்கிதான். அவனுடைய உபதேசம் பீஷ்மர் துரோணர்களையெல் லாம் வீழ்த்தவில்லை என்றாலும் பல அசுவங்களின் மூலம் பணத்தை வாரிக் கொடுத்திருக்கிறது. இதனால் வெங்கியும் பணம் ஏதும் கட்டாமலேயே பலன் அடைந் திருக்கிறான். வாட்ச்மேன் மயில்சாமியை மாலை ஆறு மணிக்கு மேல்தான் பார்க்க முடியும். இதன் காரணமாக அவனால் மன மகிழ் மன்றத்தில் கலந்து கொள்ள முடி யாது.

கடைசியாக —

ரங்கன். ஒருவன் அவனுடைய விரலை விட்டால், 'நறுக்'கென்று கடிக்க வேண் டாமோ? ஊஹூம். ரங்கன் விரலை நாக் கால் மிருதுவாகத் தடவிக் கொடுக்கக் கூட மாட்டான். பாம்பு, தேள், வெறிபிடித்த நாய் இவற்றை எல்லாம் கண்டு பயப்படாத அவன் மற்ற மனிதர்களைக் கண்டு பயந் தான். இந்தப் பயம் அவன் அம்மாவின் வயிற்றில் இருக்கும் போதே பிறந்த பயம் என்று ரமணி கருதினான். ரமணியின் ஆத் மார்த்த சிநேகிதன் ரங்கன் என்றால், ரங்க னுக்கு ரமணி ஒரு விசுவரூபம் போல. ரமணி நண்பன். ரமணி வழிகாட்டி. ரமணி ஒருவன் தான் அவனுடைய நல்வாழ்க்கையில் அக் கறை கொண்டுள்ளவன். ரமணிதான் அவனை என்றும் ஏமாற்றாமல் இருப்பான்.

இப்படி ஒரு நம்பிக்கை ரங்கனுடைய உள் ளத்தில் ஆலமரத்து வேராக நிலைத்துப் போயிற்று. அவனைக் கண்டு ஆபீசே ஏளனம் செய்யும். ஆனால் ரமணி ஒருவன் தான் பரிவு காட்டுவான். சம அந்தஸ்து கொடுப்பான்.

மனமகிழ் மன்றத்தில் ரங்கன் தனக்கு இடப்படும் பணிகளை நிறைவேற்றுவ தோடு நிறுத்திக் கொள்ளுவான்.

**"ஹாய்**, ரமணி!'' — மாலு தன் கைப் பையை மேஜையின் மீது அலட்சியமாகப் போட்டுவிட்டு அவனை நோக்கி வந்தாள். ஓர் அப்சரஸ் தரையில் கால் பாவாமல் மிதந்து வருவதான காட்சி ரமணியின் மனத் தில் எழுந்தது. என்றுதான் அவளும் அவனும் மணமேடையில் அமர்வார்கள், முதல் இர வில் சந்திப்பார்கள், தேன் நிலவில் கை கோத்து ஓடுவார்கள்?

தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக்

ம.வி.ஆர்.

கொண்டு ரமணி —

"வா மாலு, வா. ஓ, இன்னிக்கு வெள்ளி. அதான் கூந்தலைப் பாயா விரிச்சு முனையிலே ஒரு சின்ன முடிச்சாப் போட்டிருக்கே, இல்லே!" என்றான்.

மாலு அருகே ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தாள். ஹாலின் ஒரு மூலையில் டைப்பிங் மெஷினையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கும் சுகந்தியையோ, இன்னொரு மூலையில், மேஜை மீது இரு விரல்களால் தாளம் போட்டுத் தனக்குத் தானே பாடிக் கொண்டிருக்கும் 'நெய் ரோஸ்ட்' கிச்சாவையோ, அவள் லட்சியம் செய்யவில்லை.

"ரமணி!"

"என்ன மாலு?"

"ரெண்டு நல்ல நியூஸ்!"

"பெரிய நல்ல நியூஸை முதல்ல சொல்லு!"

"நேத்து ராத்திரி நீங்க என் சொப்பனத்திலே வந்தீங்க!"

"இதென்ன பெரிய நியூஸ், மாலு? நான் தினசரி வந்தாகணுமே!"

"நேத்து ஸ்பெஷலா வந்தீங்க, ரமணி! இதுவரையில் செய்யாததை நீங்க செய்தீங்க!"

"என்ன சொல்றே, மாலு?"

"வெக்கமாயிருக்கு!"

"நாம ரெண்டு பேரும் வெட்கப்படற வயசிலா இருக்கோம்? எனக்கு முப்பது. உனக்கு இருபத்தஞ்சு."

"நீங்க என்னை ஒரு தடவை கூடத் தொட்டதில்லே!"

"அதனால் என்ன, நீ தொட்டுப் பாரு!"

"சொப்பனத்திலே நீங்க தொட்டதோட நிறுத்திக்கலே ரமணி!"

"பின்னே?"

"என்னைக் கட்டி... கட்டிப் பிடிச்சு முத்தம் கொடுத்து, அப்புறம்..."

"ஓ, ரொம்ப சுவாரசியமா இருக்கே, மாலு... சொல்லு... சொப்பனத்திலே வந்தது நான்தானா... இல்லே, வேறே யாராவது...? உம், கோபிச்சுக்காதே... என்னை அப்படிப் பார்க்காதே... எனக்கு என்னமோ செய்யறது. கம் ஆன் மாலு, அப்புறம் நான் என்ன செய்தேன்?"

"சொல்றேன்."

"வணக்கம், ரமணி சார்... வணக்கம் மாலு அம்மா..."

ரங்கன் பிளாஸ்க்குடன் வந்தான்.

"காப்பி நன்னா ஸ்ட்ராங்கா இருக்கா, ரங்கா?"

"வேறே எப்படி சார் வாங்குவேன்! இருங்க, தம்ளர் எடுத்தாரேன்."

"ரெண்டாக் கொண்டு வா."

அவன் நகர்ந்ததும், "சிவபூஜையில் கரடி

வந்துதான் பார்த்திருக்கேன்...'' என்று மாலு இழுத்தான்.

''கரடி வந்து பார்த்திருக்கியா? நான் கேள்விதான் பட்டிருக்கேன்!''

''இப்ப குரங்கே வந்தது.''

''ரங்கனைக் குரங்குன்னு சொல்லாதே, மாலு. பாவம் அவன் அப்பாவி. ஆபீஸ்லே நாம இன்னிக்கு விசேஷமா இப்படிப் பேசறோம்னு அவனுக்கு எப்படித் தெரியும்?''

''அவன்கிட்டே சொல்லி வையுங்க, ரமணி!''

''என்னன்னு?''

''நாம ரெண்டு பேர் இப்படிக் கிட்டக் கிட்ட உட்கார்ந்து பேசிக்கிட்டிருக்கிறப்ப அவன் இடையிலே வரப்படாதுன்னு.''

''ரங்கன் ஒரு பரமசாது, மாலு.''

''தெரியும். நான் சாதுக்களை நம்பறதில்லை.''

''அதோ, அவனே வர்றான். பேசாம இரு.''

இரு தம்ளர்களில் காப்பியை ஊற்றிய பிறகு, ரங்கன் தன்னுடைய ஷர்ட் பாக்கெட்டிலிருந்துமூன்றுகாகிதங்களைஎடுத்துரமணியிடம் நீட்டினான். கூடவே ஒரு டயரியையும் மேஜை மேல் வைத்தான்.

''ஏன் ரங்கா இப்படிப் பணத்தை லாட்டரிச் சீட்டிலே கொட்டி அழறே? இந்த அஞ்சு வருஷத்திலே நீ இதுக்காக எவ்வளவு செலவழிச்சிருக்கே, தெரியுமா? கிட்டத்தட்ட அஞ்சாயிரம்! ஒரு அம்பது ரூபாயாவது பரிசாத் திரும்பி வந்திருக்கா?''

காப்பியை, பேசும் போது, நடுநடுவே உறிஞ்சி உறிஞ்சி ருசித்த ரமணி ரங்கனைப் பரிதாபமாகப் பார்த்தான்.

ரங்கன் தலைகுனியாமல் மௌனமாக நின்றான்.

''இரு. டயரியில் நம்பர்களைக் குறிச்சுத் தர்றேன்.''

''டிக்கெட்டு பத்திரம், ரமணி சார்.''

''கவலைப்படாதே... நீ வாங்கி இருக்கிற டிக்கெட்டெல்லாம் பத்திரமா வீட்டிலே என் அலமாரியிலே இருக்கு.''

''நல்லது ரமணி, சரர்!''

''நட்ட நடு ராத்திரியிலே நீ எழுப்பிக் கேட்டாலும் கிடைக்கும்.''

''உங்களைத் தெரியும், ரமணி சார்...''

''ஹங், அப்புறம், இன்னொண்ணு. உன் பாங்க் அக்கௌண்ட்லே இப்ப மூவாயிரத்து சொச்சம் இருக்கு. ரெண்டு வருஷம் முன்னாடி ஐயாயிரம் ரூபாய் டெபாசிட்டாப் போட்டிருந்தியே, அது பத்தாம் தேதி. அதான் அடுத்த புதன் கிழமை ஆறாயிரத்துச் சொச்சமாக் கிடைக்கப் போறது. இன்னும் ரெண்டாயிரம் போட்டு எட்டாயிரத்தை பாங்க்லேயே டெபாசிட் பண்றியா?''

''டெபாசிட்லே இப்ப இருக்கிற பணமே இருக்கட்டும் ரமணி சார். நீங்க இப்ப சொன்ன மூவாயிரத்துச் சொச்சம் எனக்குத் தேவைப்படும் போல இருக்கு.''

''அவ்வளவுக்கும் லாட்டரிச் சீட்டு வாங்கப் போறியா?''

''கேலி செய்யாதீங்க, ரமணி சார்.''

''அப்ப எதுக்குத் தேவைப்படும்னு சொல்லு.''

''உங்களுக்குப் பிடிக்காத சமாசாரமுங்க.''

''ஓ, கல்யாண விஷயமா?'' கேள்வி கேட்ட ரமணி, அப்போதுதான் உணர்ந்தான், மாலு ஏற்கெனவே எழுந்து போய்விட்டாள் என்று.

வாயால் பதில் சொல்லாமல் ரங்கன் தலையாட்டினான்.

ரமணி அவனை ஏறிட்டுப் பார்த்தான்.

ஐந்து அடி உயரமான குள்ள உருவம். வற்றலான, சதைப் பற்றே இல்லாத உடல். உடலமைப்புக்குச் சம்பந்தமில்லாத மண்டை. இன்னும் கொஞ்சமாவது சிறிதாக இருந்திருக்கலாம். முன் மண்டையில் ஏற்கெனவே பிறந்திருந்த பாலைவனம் இன்னும் அகலமாகி ஓர் ஆற்றுப் படுகை போலிருந்தது. இருபுறமும் இருந்த ரோமக் கொத்தை எண்ணெய் தடவிச் சீவியிருந்தான். நல்ல வேளையாக, கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற ஆசைத் துடிப்பில் உள்ளவன் மீசை வைத்துக் கொள்ளவில்லை. அது வேறு இருந்தால் அகோரமாகக் காட்சி அளித்திருப்பான்.

''என்ன ரமணி சார், பேச மாட்டேங்க றீங்க?'' அவன் குரலில் அழுகையின் கண்ணீர் ஓடியது.

''நான் யதார்த்தமாப் பேசினால் உனக்குப் பிடிக்கிறதில்லே, ரங்கா. நீ வாழ்க்கையிலே சந்தோஷப்படக் கூடாதுன்னு நான்



## தூக்கம் இல்லை!

சமீபத்தில் நமீபியாவுக்குப் பிரதமர் சென்றிருந்த போது, நிறைய நிகழ்ச்சிகள் இருந்ததினால் சரியாகத் தூங்க முடியவில்லை.

அருகில் இருந்த ஓர் அதிகாரி, ''இந்தியாவில் பிரதமரை தேவிலால் தூங்க விடவில்லை... நமீபியாவில் நிகழ்ச்சிகள் தூங்க விடவில்லை...'' எனக் கூறவும் பிரதமர் உள்பட அனைவரும் சிரித்து விட்டனர்.

— ராஜி ராதா.

நினைக்கிறதா நீ தப்புக் கணக்குப் போடறே... நீ மனசுக்குள்ளே ஒரு முடிவு எடுத்துட்டே.... அந்த முடிவு நல்ல முடிவுன்னு நான் சொல்லணும்னு நீ ஆசைப் படறே... ஆனா என்ன செய்யறது, ரங்கா... நீயும் நானும் இந்த நாலு வருஷமா ரொம்ப நெருங்கிப் பழகிட்டோம்... நீ என்னை மலையா நம்பி, உன் பணம், உடைமை, லாட்டரிச் சீட்டு எல்லாத்தையும் ஒப்படைக்கிறே... நான் வஞ்சகம் செய்ய மாட்டேன்னு! அப்படி ஒரு நம்பிக்கை. உன் நம்பிக்கை வீண்போகாதபடி நானும் ஆண்டவன் அருளாலே நடந்து வந்துட்டேன்... ஆனால் உண்மையான, ஆத்மார்த்தமான சிநேகிதன்னா, அவன் கொடுக்கிற புத்திமதியையும் ஏத்துக்கணும். ஆனால் கல்யாண விஷயத்திலே மட்டும் உன் மனசு என் மனசோடு உடன்பட மாட்டேங்குது.''

''ரமணி சார், நான் உங்களை மனுஷனாகவே மதிக்கலே... தெய்வமாக நினைக்கிறேன்.''

''ஆனா தெய்வத்தோட பேச்சையும் கேட்க மாட்டேங்கிறியே, ரங்கா?''

''ஒரு பொண்ணோட வாழணும்ங்கிற ஆசை எல்லாருக்கும் இயற்கையா வர்ற ஆசைதானே, ரமணி சார்?''

''இல்லேன்னு சொல்லலே... ஆனா உன் நிலையை நீயே நினைச்சுப் பாரு. சோனியா இருக்கே. மனசுலே மட்டும் தெம்பு இருந்தாப் போதுமா, ரங்கா? உடம்பிலேயும் இருக்கணும். நிறையச் செலவாகுதேன்னு நீ சாப்பாட்டுச் செலவையே குறைச்சிருக்கே. நீ ஒரு ஓட்டல்லே அஞ்சு ரூபா கொடுத்து முழுசாச் சாப்பாடு சாப்பிட்டு நான் பார்த்தது இல்லே. தினசரி ரெண்டு ரூபாய்க்கு ரெண்டு பொட்டலம் மோர்ச் சாதம் சாப்பிட்டால் உடம்பு எப்படித் தேறும்? ராத்திரி நாலு இட்லி தின்னுட்டுத் தண்ணியைக் குடிச்சுட்டுப் படுக்கிறே. உடம்பு என்னத்துக்கு ஆகும்? முட்டை, இறைச்சி, பால், காய்கறி இதெல்லாம் ஏன் சாப்பிடக் கூடாது? சாப்பிட மாட்டே! ஏன், பணம் செலவாகும்... பணத்தைச் சேர்த்துச் சேர்த்து என்ன சாதிக்கப் போறே, ரங்கா?''

''எல்லாம் ஒத்துக்கறேன், ரமணி சார்... கல்யாணமாயிட்டா என் பெண்டாட்டி சோறு ஆக்கிப் போடுவா. நிறைய பணியாரமெல்லாம் பண்ணுவா. என் உடம்பு கொழு கொழுன்னு ஆயிடும்.''

''நீ உன் மனசிலே போட்டோ பிடிச்சு எனக்குக் காட்டற பொண்ணு உனக்குக் கிடைக்கணுமே, ரங்கா! அப்படிப்பட்டவ எங்கே இருக்கா?''

''கிடைப்பா, ரமணி சார்.''

''உன் அஞ்சு அடி உசரத்துக்கு ஏத்தபடி அவ அமையணும். நீ ஒரு சாது. நல்லவன். ரெண்டு வார்த்தை அடிச்சுப் பேசத் தெரியாது. உனக்கு வர்றவ ராட்சசியா இருந்தால் உன்னைப் பந்தாடிடுவா!''

ரங்கன் பதில் சொல்லவில்லை. ரமணி சொல்லுவதெல்லாம் உண்மைதான். அவனுக்குச் சாதாரணமாகவே பெண்களைக் கண்டால் பயம்தான். அவன் இப்போது தன் மனத்துக்குள் மணமேடை கட்டி, அதில் உட்கார வைத்திருக்கும் தனம் என்னும் தனபாக்கியம் நல்ல பெண் மாதிரி தென்படுகிறாள். ஒருவேளை ராட்சசியாக மாறி விடுவாளோ? இதுபற்றி அவன் தெரிந்து கொள்ள வேண்டும். ரமணிக்குப் பிடிக்காதது எதையும் அவன் இது வரையில் செய்ததில்லை. முதன் முறையாக அவனை மீறிச் செயல்புரியப் போகிறான். நாளைக்கு ரமணி அவனைப் பார்த்து ஏளனமாகச் சிரிக்க மாட்டான்தான். ஆனால், 'அன்னிக்கே சொன்னேனே, ரங்கா, என் பேச்சைக் கேட்டியா?' என்று பரிவும் கனிவுமாகக் கேட்பானே? அப்போது என்ன பதிலை ரங்கனால் கூற முடியும்?

ரங்கன் மௌனமாய் வெளியேற, ரமணி ஓரிரு வினாடிகள் அவனுடைய தளர்ந்த நடையையே பார்த்தவண்ணம் உட்கார்ந்தான். இப்படிப்பட்ட ஒரு நல்ல, சாதுவான ஜீவன் இந்த உலகத்துக்கு அவசியம்தானா என்ற கேள்வி எழுந்தது.

திடீரென்று மாலு தன்னருகே நிற்பதை ரமணி உணர்ந்தான்.

''உட்கார், மாலு.''

''உட்கார்றது இருக்கட்டும். இப்ப எனக்கு ஒன்று தெரிஞ்சாகணும்'' என்றாள் மாலு.

''தினசரி கேட்கிற கேள்விதானே, மாலு. ரங்கன் ஆபீசுக்குள்ளே ரொம்ப வேண்டியவன். நீ என் வாழ்க்கைக்கே ரொம்ப வேண்டியவள். சரி, இப்ப சொல்லு. அது என்ன இரண்டாவது நியூஸ்? நான் கேட்க ரெடி!''

''நான் சொல்ல ரெடி இல்லே.''

''ஓகே. நான் காத்திருக்கேன். நான் கொக்கு மாதிரி, பொறுமையாகக் காத்திருப்பேன்!''

இவனிடம் தன் ஜம்பம் என்றுமே சாய்ந்த தில்லை என்று மாலுவுக்குத் தெரியும்.

''கேளுங்க ரமணி... ரெண்டாவது நியூஸ் நம்ப காதலையே பாதிக்கிறது. ஏன், நாம காதலுக்கே ஒரு முடிவு கட்ட வேண்டிய நிலை பிறந்துட்ட மாதிரி எனக்குத் தோணறது.''

மாலு சிரிக்காமல், முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு பேசினாள்.

எதற்குமே அசையாத ரமணி கூட ஒரு சில வினாடிகள் ஆடிப் போனான்.

(தொடரும்)

## தமிழ் கூறும் நல்லுலகத்திற்கு

# ஆர்.சி.எப்பின்

## உளமார்ந்த நல்வாழ்த்துக்கள்

மண் செழித்து பொன் விளைய
சுபலா 15:15:15 20:20:0
காம்ப்ளக்ஸ் உரங்கள்

ஆசியாவின் மிகப் பெரிய யூரியா நிறுவனம்,
பாரத விவசாயிகளின் தனிப்பெரும் பொக்கிஷம்













ராஷ்ட்ரீயா கெமிக்கல்ஸ் அண்டு பெர்டிலைசர்ஸ் லிமிடெட்
(இந்திய அரசாங்க நிறுவனம்)
'பிரியதர்சினி' ஈஸ்டர்ன் எக்ஸ்பிரஸ் ஹைவே, பம்பாய்-400 022
சென்னை வட்டார அலுவலகம்:
No. 3, குஷ்குமார் ரோடு,
நுங்கம்பாக்கம்,
சென்னை — 600 034. போன்: 866245



* நுஜோமா




# நமீபியா: விலங்கு உடைந்தது; விடுதலை கிடைத்தது!

கிட்டத்தட்ட பதினைந்து லட்சம் நமீபிய மக்கள் சுதந்திரக் காற்றைச் சுவாசிக்க ஆரம்பித்திருக்கிறார்கள். அவர்களுடைய 23 ஆண்டு காலப் போராட்டம் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறது. நூறாண்டுகளுக்கும் மேற்பட்ட அடிமை விலங்கு உடைக்கப்பட்டிருக்கிறது.

நமீபியாவின் பழைய பெயர் தென் மேற்கு ஆப்பிரிக்கா. எட்டு லட்சம் சதுர மீட்டர்கள் பரப்புடைய நாடு. 1880 — இல் ஜெர்மானியர்களால் நமீபிய நிலப்பரப்பு கைப்பற்றப் பட்டது. 1916 — ஆம் ஆண்டில் தென் ஆப்பிரிக்க நிறவெறி அரசின் ஆளுகைக்குள் வந்தது.

கனிம வளங்கள், நிரம்பிய நாடு நமீபியா. தங்கம், வைரம், செம்பு, தாமிரம், மற்றும் மாங்கனீஸ் சுரங்கங்கள் நாடெங்கிலும் பரவிக் கிடக்கின்றன. இதுதவிர, அணுசக்தி உற்பத்திக்குத் தேவையான யுரேனியமும் கிடைக்கிறது.

ஆனால் இத்தனை வளங்களையும் அனுபவித்து வந்தவர்கள் வெள்ளையர்கள்தான். தென்மேற்கு ஆப்பிரிக்கக் குடிமக்களை அடக்கி, கொடுமைப்படுத்தி, அடிமைகளாக நடத்தினர். மரம் வெட்டுவதற்கும், தண்ணீர் கொண்டு வரவும் அவர்களைப் பயன்படுத்திக் கொண்டனர். எந்தவிதமான ஜனநாயக உரிமையும் அம்மக்களுக்குத் தரப்படவில்லை.

ஓவம்போ, நமாஸ், புஷ்மேன், போன்ற பழங்குடி இனங்களைச் சேர்ந்தவர்கள், தென்மேற்கு ஆப்பிரிக்க மக்கள். இவர்களுள் அறுபது சதவிகிதத்தினர் ஓவம்போ இனத்தைச் சேர்ந்தவர்கள். இந்த இனத்திலிருந்துதான் நமீபிய மக்களின் கலங்கரை விளக்கமாகத் தோன்றினார் ஸாம் நுஜோமா. இவர் தலைமையில்தான் தென் மேற்கு ஆப்பிரிக்க மக்கள் அமைப்பு, (SWAPO) தென் ஆப்பிரிக்க நிறவெறி அரசை எதிர்த்துக் கொரில்லாப் போராட்டம் நடத்தி வந்தது.

ஸாம் நுஜோமா முப்பது வருடங்கள் தலைமறைவு வாழ்க்கை நடத்திப் போராட்டங்களை முறைப்படுத்தினார். ஆயிரக் கணக்கான மக்கள் — போராட்டத்தில் உயிரைக் கொடுத்திருக்கின்றனர்.

நமீபியாவுக்கு விடுதலை பெற்றுத் தர ஐ. நா. சபை 1966 — லிருந்தே முயற்சி செய்து வந்தது. ஆனால் பலன் கிடைத்தது சென்ற ஆண்டில்தான். ஐ. நா. சபை பார்வையாளர்களின் கண்காணிப்பில், நமீபிய அரசியல் நிர்ணய சபைக்குத் தேர்தல் நடந்தது. எழுபது சதவீத வோட்டுக்களைப் பெறும் என்று எதிர்பார்க்கப்பட்ட 'ஸ்வாப்போ' 57 சதவீத வோட்டுக்களைத் தான் பெற்றது! இதனால் வெள்ளையர்கள் உட்பட, பல்வேறு இன மக்களை அணைத்துச் செல்லும் நிலையில் உள்ளார் நுஜோமா.

விவசாயம், மீன்பிடிப்பு, சுரங்கத் தொழில் ஆகியவற்றில் அனுபவம் மிக்க 70,000 வெள்ளை இன மக்கள் இன்னமும் நமீபியாவில் இருக்கிறார்கள். அரசியல் சுதந்திரம் பெற்று விட்டாலும், பொருளாதாரச் சுதந்திரம் கிடைக்க வேண்டுமென்றால், வெள்ளையர்களையும் அரவணைத்துக் கொண்டு போனால்தான் முடியும். இதை நன்றாக உணர்ந்திருக்கும் நுஜோமா, மந்திரி சபையில் ஐந்து வெள்ளையர்களுக்கு இடமளித்துள்ளார்.

நமீபியாவை விட்டுத் தென் ஆப்பிரிக்க அரசு வெளியேறினாலும், அதன் கடற்கரையில் உள்ள வல்விஸ் பே என்ற ஆழ்கடல் துறைமுகத்தை மட்டும் தொடர்ந்து தனது ஆளுகையின் கீழேயே வைத்திருக்கிறது. பிடிவாதம் பிடிக்காமல், இந்தத் துறைமுகத்தையும், நமீபிய அரசின் கையில் ஒப்படைக்க வேண்டும் என்று ஐ. நா. சபை தென் ஆப்பிரிக்க அரசைக் கேட்டுக் கொண்டிருக்கிறது.

— தில்லப்பா.

# முதல்வர் அமைதிப் படையை வரவேற்காதது நியாயமா?



* காரணம் நியாயமா?



* கருத்து சரியா?

* ஏ. எம். பழனிசாமி, கோணவாய்க்கால் பாளையம்.

? இலங்கையிலிருந்து திரும்பிய இந்தியப் படையை வரவேற்கச் செல்லாமைக்குக் காரணம் சொல்லும் முதல்வரின் பேச்சில் நியாயம் உள்ளதா?

! இந்திய ராணுவத்தினிடம் தமக்கு மதிப்பும் மரியாதையும் உண்டு எனவும் ஆனால் ராஜீவ் காந்தியால் தவறான காரணத்துக்கு ராணுவம் பயன்படுத்தப்பட்டதாகவும் கூறுகிறார். இப்படிச் சொல்ல அவருக்கு உரிமை உண்டு. (இதில் கருத்து மாறுபட நமக்கு உரிமை உண்டு என்பது வேறு விஷயம்.) ஆனால் இந்திய ராணுவத்தை மதித்து வரவேற்ற பிறகு, இவர் தமது இந்தக் கருத்தை வெளியிட்டிருந்தால் வரவேற்கலாம். முகத்திலடித்தாற் போல் அமைதிப் படையைப் புறக்கணித்து விட்டு 'எனக்கு ராஜீவிடம்தான் கோபம்; ராணுவத்தின் மீது இல்லை' என்று கூறுவது அபத்தம்.

* என். வி. உச்சிமாகாளி, தச்சநல்லூர்.

? இலங்கைத் தமிழ் அகதிகளை ஒரிஸாவுக்கு அனுப்பித் தங்க வைத்தது எவ்வகையில் நியாயம்?

! ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டில் ஏராள அகதிகள் குடியேற நேர்வது ஒரு தேசியப் பிரச்னை. அதனை எல்லா மாநிலங்களுமே பகிர்ந்து கொள்வது நியாயம்தான். ஆனால் முதல்வர் இந்தக் காரணத்தைக் கூறவில்லை. 'போராளிகளால் தமிழ் நாட்டில் அமைதி குலைய வேண்டாம்' என்பதாகக் கூறியுள்ளார். தெளிவான விளக்கமாக இல்லை. ஒரிஸாவிலிருந்து அகதிகள் சிறிது சிறிதாகத் தமிழ் நாட்டில் குடிபுக அதிக நாளாகாது.

* எஸ். யோகலிங்கம், சென்னை.

? தேசிய முன்னணி அரசின் தற்போதைய நிலை என்ன?

! நித்திய கண்டம்; பூர்ணாயுசு!

* லைப்ரரி கண்ணன், கம்பம் *

? 'புகை பிடிக்கும் வழக்கத்தை விட ஒரே வழி அதன் விலையை உயர்த்துவதுதான்' என்று கூறியுள்ள மது தண்டவதேயின் கருத்து சரிதானா?

! சரியில்லை. விலை உயரும் போது வரி தவிர மேலும் லாபமும் அதிகரிக்குமாறு சிகரெட் நிறுவனங்கள் கவனித்துக் கொள்ளும். அந்த உபரி லாபத்தைக் கூடுதல் விளம்பரங்களில் செலவிட்டு, விற்பனை குறையாமல் கவனித்துக் கொள்ளும். எனவே, சிகரெட் விளம்பரங்களுக்குத் தடை விதிப்பதும் அதே சமயம் சிகரெட்டுக்கு எதிராக அரசு செலவில் பிரசாரம் நடத்துவதும்தான் சரியான வழி. ஆனால் அரசு, வருவாய் குறைகிற — செலவு அதிகமாகிற இந்தக் காரியத்தைச் செய்யாது!

* என். சம்பத், திருச்சி.

? உ. பி. அரசு ஆங்கிலத்தைத் தடை செய்துள்ளதே?

! அங்கே இந்தி — ஆங்கிலம், இங்கே தமிழ் — ஆங்கிலம் என்ற இரு மொழித் திட்டம்தான்



* பாரத ரத்னா பற்றி?

## நீங்கள் கேட்டவை — தராசு

தேசிய ஒருமைப்பாட்டுக்கும் உலக ஒருமைப் பாட்டுக்கும் உகந்தது. தன் தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டால் யார் தடுக்க முடியும்? நஷ்டம் உ.பி. அரசுக் குத்தான்; ஆங்கிலத்துக்கு அல்ல.

* எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'பாகிஸ்தான் பிரிவினையை வலியுறுத்தி ஆதரித்தது ராஜாஜிதான்' என்று கருணாநிதி கூறியிருக்கிறாரே?

! அவருக்கென்ன, தேவைப்படும் போது ராஜாஜியை இழுத்து அணைத்துக் கொள்வார். தேவைப்படாத போது (மதுவிலக்கு ரத்து) ஒதுக்கித் தள்ளி விடுவார்.

* ஏ. எஸ். முத்து, அய்யன்கோட்டை.

? அம்பேத்காருக்கு இப்போது பாரத ரத்னா வழங்கப்படுவது பற்றி?

! காலங்கடந்த ஞானோதயம்.

* என். எடிசன் மதுபாக்கியா, அச்சம்பாடு.

? தேசிய முன்னணியின் சாதனையையும் தி. மு. க. வின் இயலாமையையும் கூற முடியுமா?

! அங்கு மெஜாரிட்டி இல்லாதிருந்தும் செல்வாக்கு குறையாமல் தாக்குப்பிடிக்கும் நிலை. இங்கு அபரிமித மெஜாரிட்டி இருந்தும் செல்வாக்குக் குறையத் திணறும் நிலை.

* என். சம்பத், திருச்சி.

? அகாலி தளத் தலைவர் மான், தேசிய முன்னணிக்கான தமது ஆதரவை விலக்கிக் கொண்டு விட்டாரே?

! அவரது நடவடிக்கைகளைப் பார்த்தால் அவர் மான் அல்ல, மாயமான் என்று தோன்றுகிறார். பிரதமர் எப்படியும் அவரை வெற்றி கொள்வார்; அம்பினால் அல்ல, அன்பினால் என்று எதிர்பார்ப்போம்.

* எஸ். அருள்மொழி, காட்டூர்.

? தோல்வி அடையத் தாம் கற்றதில்லை என்கிறாரே சௌடாலா?

! வெற்றி பெறப் பின்புற வழிகள் பல வைத்திருக்கும் துணிவில் பேசுகிறார். அவை காலை வாரி விடும் போது தோல்வி பாடம் கற்பிப்பதை உணர்வார்.

* ஆர். பிரகாசம், நல்லாலம்.

? 'அஞ்சாறு பெண் பிறந்தால் அரசனும் ஆண்டியாவான்' என்பது அந்நாளைய பழமொழி... இன்று?

! ஒரு நண்பர் வீட்டுக்குப் போயிருந்தேன். அவருக்கு நாலு பெண்கள். "கவலைப்படாதீர்கள்! எதிர்காலத்தில் ஆண்கள் வரதட்சிணை கொடுக்கும் நிலை வரப் போகிறது!" என்று ஆறுதலாகவும் தமாஷாகவும் சொன்னேன். உடனே அவர் மூத்த மகள், "நாங்கள் ஆண்களைப் போல் அவ்வளவு



* தோல்வி தெரியாது?



* மாயமான்?

மட்டமானவர்கள் இல்லை; வரதட்சிணை வாங்க மாட்டோம்" என்றாள். புத்துணர்வு பட்ட நான், 'போட்டியே ஒரு போடு!' என்று அவளை வாழ்த்தினேன். ஆக, இன்று எப்படியோ, நாளை நம்பிக்கை அளிப்பதாகத்தான் இருக்கிறது.

* கிஷோர், திருச்சி — 21.

? தொடர்ந்து மலிவு விலை மதுவை நியாயப்படுத்தி வருகிறாரே, கருணாநிதி?

! அதையாவது சகித்துக் கொள்ளலாம் போலிருக்கிறது; 'மதுவினால் ஏற்படும் தீமைகள் குறித்து பிரசாரம் பண்ண ஐந்து கோடி ஒதுக்கத் தயார்' என்று கூறுவதோ வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவதாக உள்ளது. இவரே மக்கள் கண்களைக் கெடுத்து விட்டுப் பிறகு சூரிய நமஸ்காரம் செய்யச் சொல்வதா?

* போத்தனூர் புலிச்சோழன், கோவை.

? மலையைத் தோண்டி எலி பிடிக்கும் சமீப சம்பவம் அரசியலில் எது?

! சட்டசபையில் கருணாநிதியின் புராண — இதிகாச ஆராய்ச்சி முடிவுகள்!

* சி. மகேஷ், மதுரை.

? விமானப் போக்குவரத்து இந்தியாவில் தொடர்ந்து அபாயகரமாக ஆகி வருகிறதே?

! பீரங்கி, நீர்மூழ்கி, விமானம், ஹெலிகாப்டர் என்று எதை வாங்கினாலும் அதில் லஞ்ச ஊழல் அபாயத்துக்கு நேற்று வரை ஆண்டவர் இடம் கொடுத்து வந்ததால்தான்.

* கே. ஏ. காளிமுத்து, காரை.

? மான்னுக்குப் புலிகள் ஆதரவு தெரிவித்திருப்பது பற்றி?

! முளையிலேயே கிள்ளி விடப்பட வேண்டிய ஆபத்தான விஷயம். நகைமுகனைக் கைது செய்வதில் முதல்வர் கண்டிப்புக் காட்டியது வரவேற்கப்பட வேண்டிய விஷயம். அதே போல் தமிழ் மண்ணில் — மதுரையில் — பிரபாகரன் — மான் சந்திப்பை அனுமதிக்க இயலாது என்பதையும் அவர் தெளிவுபடுத்த வேண்டும்.

> * ரூ. 20 பரிசு பெறுபவர்:
>
> **செ. லைப்ரரி கண்ணன்,**
> **23, செக்கடித் தெரு,**
> **கம்பம் — 626 516.**

## வட்டமேஜை




* ஒவ்வொரு வாரமும் ஆவலைத் தூண்டும் வகையில் கவர் ஸ்டோரியைத் தேர்வு செய்யும் உம்மை எத்தனை பாராட்டினாலும் தகும்!

திருச்சி — 4. தாயு. ஆண்டாள்.

* 'சந்தோஷங்களும், சங்கடங்களும்' கவர் ஸ்டோரி புதுமையாக இருந்தது. இரட்டையர்களின் மழலை முகங்களைப் பார்க்கவே சந்தோஷமாக இருந்தது.

சென்னை — 45. ஏ. ஜப்பார் காதர்.

* இரட்டைக் குழந்தைகளைப் பற்றிய கட்டுரையில் அக்குழந்தைகளின் பெற்றோர்களைப் பற்றி மட்டுமே வெளியிடாமல், டாக்டரிடமும் பேட்டி கண்டு வெளியிட்டு இருக்கிறீர்களே, உங்களிடம் எங்களுக்குப் பிடித்த அம்சமே இதுதான் சார்!

அரூர். மு. மதிவாணன்.

* பட்ஜெட்டில் நல்லனவற்றைப் பாராட்டியும் அல்லனவற்றைக் கண்டித்தும் சுட்டிக்காட்டியிருக்கிறீர்கள். மத்திய அரசின் பட்ஜெட்டைப் பாரபட்சமில்லாமல் விமர்சித்துள்ள இதழ் கல்கிதான்.

திருக்குவளை. கவிஞர் வெற்றிப்பேரொளி.

* மதுதண்டவதேயின் பட்ஜெட்டைக் 'கிராமப்புற பட்ஜெட்' என்று தலையங்கத்தில் கூறி இருந்தது நூற்றுக்கு நூறு சரி!

சங்கராபுரம். கே. மகேஷ்.

* ஏப்ரல் 1 ஸ்பெஷல் வித்தியாசமாகவும், கலகலப்பாகவும் இருந்தது. ஆனால் இந்தச் சென்னையில் நான் நடத்தியிருக்க வேண்டுமா? வெளியூர் ஒன்றில் நடத்தியிருந்தால் என்னவாம்!

வேலூர். — 13. கே. ஆர். தேவேந்திரன்.

* தம் திறமையால் உருவாக்கிய ஓவியங்களை விற்று அதில் ஏழைகளுக்கு 108 திருமாங்கல்யங்கள் வாங்கித் தர முயற்சி செய்யும் திருமதி ஜெயாவின் முயற்சி அற்புதமானது; போற்றுதலுக்குரிய சேவை அது!

சிதம்பரம் — 1. ராஜ் அண்ட் ராஜ்.

* அரசியல் கருத்துப் படங்கள், இன்றைய அரசியல் தரக்குறைவை நினைத்து வேதனையடையச் செய்தாலும், அதே சமயத்தில் சிரிப்பை வரவழைப்பதாகவும் அமைந்திருந்தன.

ஈரோடு — 1. டி. சந்திரன்.

சென்னையில்தான் நடத்த வேண்டுமா?

* நல். ஆறுமுகத்தின் 'பிள்ளை யார் பிடிக்கப்போய்...' சிறுகதை. அதிகாரவர்க்கத்திற்குச் சுகாதாரம் என்ற சொல், அவர்களின் சுகத்திற்கு ஆதாரமானது மட்டுமே என்பதை மிக அழகாக வெளிப்படுத்தி விட்டது.

ஸ்ரீரங்கம். மேகதூதன்.

* "தமிழக சோமாளிக் கலை விழா" கார்ட்டூன் இன்றைய தமிழக அரசியலை அப்படியே படம் பிடித்துக் காட்டியுள்ளது.

தஞ்சை. எஸ். பாலமுருகன்.

* வாயில்லா ஜீவன்களின் உணர்வுகளையும் அதன் இன்பதுன்பங்களையும் உணர்ந்து தன்னைத் திருத்திக் கொண்ட வேங்கடநாயகத்தின் உள்ளம் அற்புதத்திலும் அற்புதம். 'ராஜாளிக்குள் ஒரு சின்னப் புறா' என்ற கதையின் தலைப்பே ஒரு கலையழகுடன் கதையின் கருத்தைப் பிரதிபலிக்கிறது.

மங்கைநல்லூர். ஆர். செல்வராணி.

* பி. எச். பாண்டியனின் விளக்கத்தால் அரசியல் சட்டப்பிரிவு 370 — ஐப் பற்றி விரிவாகத் தெரிந்து கொள்ள முடிந்தது. இவ்வளவு சலுகைகளும், விசேஷ அந்தஸ்தும் ஜம்மு — காஷ்மீருக்கு அளிக்கப் பட்டிருந்தும், ஏன் அம்மாநிலம் நம் நாட்டிற்கு ஒரு தீராத தலைவலியைத் தோற்றுவித்திருக்கிறது என்பதுதான் புரியவில்லை!

கும்பகோணம். கே. பட்டு.

* குஞ்சுக்கு ஆபத்து எனும் போது, இறக்கையுள்ள கோழியே சிலிர்த்து எழுகிறதே அப்படியிருக்க, அருமை மகளுக்காக, அடங்கியே வாழ்ந்த மீனாட்சி ஆர்ப்பரித்து முழங்கியதில் ஆச்சரியமென்ன! மகளின் நலனுக்காக வாதாடி வெற்றி பெறும் சராசரித் தாயின் அருமையான கதை உமா கல்யாணியின் 'வேலிகள் நகர்கின்றன'.

திருப்பரங்குன்றம். டி. கே. சுப்பிரமணியன்.

* கல்கி 1.4.90 இதழில் "படம் பார்த்துக் கதை கேட்ட பரமாச்சாரியார்" — என்ற தலைப்பில் என்னைப் பற்றியும் என் ஓவியங்கள் பற்றியும் வெளியிட்டமைக்கு நன்றி. பேட்டியின் போது பரமாச்சாரியார் என்னைப் படிக்கச் சொன்ன நூல் Gordon Woodrofe எழுதிய Garland of Letters என்று தவறுதலாகக் கூறி விட்டேன். அந் நூலை எழுதியவர் Sir John Woodroffe.

சென்னை — 28. ஜெயா சந்திரசேகரன்.

* கல்கி 1.4.90 இதழில் எனது பேட்டிக்கு 'இரட்டையர் என்று தெரிந்தால் சிசேரியனுக்குத் தயாராவோம்!' என்று தலைப்பு கொடுத்து வெளியிட்டிருந்தது அதிர்ச்சி அளித்தது. இரட்டையர் விஷயத்தில் பிரசவம் நார்மலாக இருப்பது அரிது என்ற கருத்து தவறாகும். இது தாய்மார்களை அனாவசிய அச்சத்துக்கு உள்ளாக்கியிருக்கிறது. இரட்டைக் குழந்தைகளைப் பெறுவது, சாதாரணப் பிரசவத்தைப் போலவே பெரும்பாலும் நார்மலாகவே அமையும்.

சென்னை — 17. டாக்டர். ருக்மிணி செளந்திரராஜன்.


பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்:- கி. ராஜேந்திரன்.

முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.





# கீரன் கூறும் கதைகள்

**கல்கி**

15.4.90 இதழுடன் இலவச இணைப்பு






**கல்கி** 8.4.90 இதழுடன்

இலவச இணைப்பு

**கடவுளுக்கு இரண்டு மனைவியர் என்று சொல்லி, வழிபட வேறு செய்கிறோமே?**

கடவுளுக்கு இரண்டு மனைவியர் என்பது உலகத்தில் மனிதன் செய்து கொள்வது போல அல்ல. உதாரணத்திற்கு முருகனை எடுத்துக் கொள்வோமே!

நக்கீரர் பாட்டு ஒன்று உலகில் உயர் பதவியுடையார் யார்? தாழ்ந்த பதவியுடையார் யார்? என்ற கேள்விகளை எழுப்பிக் கொண்டு, உயர் பதவியில் இருப்பினும் தாழ்ந்த பதவியில் இருப்பினும் அனைத்து மக்களுக்கும் இன்றியமையாத தேவை உண்பதற்கு நாழி அளவு உணவும், உடுப்பதற்கு இரண்டு ஆடைகளும் என்று கூறுகிறது (புறநானூறு):

**"தென்கடல் வளாகம் பொதுமை யின்றி
வெண்குடை நிழற்றிய ஒருமை யோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலும் துஞ்சான்
கடுமாப் பார்க்கும் கல்லா ஒருவற்கும்
உண்பது நாழி; உடுப்பவை யிரண்டே**
... ... ... ... ... ... ... ... ... ... ... ... ..."

மேற்குறித்த பாட்டில், தெளிந்த கடல் சூழ்ந்த உலகை ஆள்பவன் என்றால் இந்திரன். இரவு பகல் வேட்டையாடுபவன் வேடுவன்.

முருகனை மணந்த தெய்வயானை யார்? இந்திரன் மகள். வள்ளி யார்? நம்பிராசன் என்ற வேடுவனின் மகள். உயர் பதவிக்குரிய தெய்வயானையையும், தாழ்ந்த பதவிக்குரிய வள்ளியையும் முருகன் ஒருசேர ஏற்றுக் கொண்டதன் மூலம், "என் சந்நிதியில் உயர்ந்தாரும், தாழ்ந்தோரும் வேறுபாடின்றி ஒருசேர ஏற்றுக் கொள்ளப்படுகின்றனர்" என்று காட்டுகின்றான். இதுவே முருகன் செய்த இரு திருமணத்துள் அடங்கிய அற்புதத் தத்துவம்.

**சுவாமிக்குப் பூப் போட்டுப் பூஜை செய்வதேன்?**

மலர் தோன்றுவதற்கு அடிப்படையான வித்து மண்ணுக்கு அடியில் போடப் பெறுகிறது. அது தன் முயற்சியில் மண்ணைப் பிளந்து கொண்டு தன் மீது போடப் பெறுகின்ற தழை ஆகிய குப்பைகளையே எருவாகப் பயன்படுத்திக் கொண்டு முளைத்து வெளி வருகிறது. சூரியன் ஒளியால் அழகிய வண்ணமிக்க மலரை வெளிப்படுத்துகின்றது.

மனிதனும் வித்தாக இருந்தே விளைவாகிறான். மலரின் வித்தைப் போலவே மனிதனும் தனக்கு வரும் துன்பங்களையே உரமாக்கிக் கொண்டு, மலர் செடியில் சூரியன் ஒளியால் உருவாவது போல், கடவுள் கருணையால் வாழ்வில் மலர்ச்சி பெறுகிறான். அதனால் தன்னையே இறைவனுக்கு அர்ப்பணம் செய்வதற்கு அடையாளமாக மலரை இட்டு வழிபடுகிறான்.

மலர்ந்த பூ அழகாக இருப்பினும், அந்த நிலையில் அதன் வாழ்வு மிகக் குறைவே. அது காயைத் தோற்றுவித்துக் கனியாகி, வித்தையீன்று அடுத்த செடி வளர்வதற்குத் துணை புரிந்துவிட்டுப் போக வேண்டியதுதான். மனிதனின் நிலையும்





"**கா**லையில் கணக்கு, மத்தியானம் கிராமர்! — இரண்டு கஷ்டமான பரீட்சைகள் ஒரே நாள்ல வைச்சா ஒரே 'டென்ஷன்' பா....!" — இப்படி உங்கள் மூன்றாம் வகுப்பு மகள்கூட அலுத்துக் கொள்ளும் அளவுக்கு வாழ்வோடு கலந்துபோயிருக்கிற ஒரு வலுவான உணர்ச்சி டென்ஷன். நம்மை ஆட்டி வைக்கிற டென்ஷனைப் பற்றித் தெரிந்து கொண்டாலே அதைப் பாதி வென்றமாதிரிதான். எனவே முதலில் டென்ஷன் என்றால் என்ன என்று புரிந்து கொள்வோம்:

மனித உடலின் சூட்சுமமான இயல்புகளுள் ஒன்றுதான் டென்ஷன். ஆபத்து நேரும்போது எதிர்த்துப் போராடவோ தப்பி ஓடவோ தூண்டுகிற அடிப்படை தற்காப்பு உணர்வாக ஆதி மனிதனுக்கு இயற்கையால் வழங்கப்பட்டது. இந்த உணர்வு ஏற்படும்போது உடலில் சில மாற்றங்கள் உண்டாகின்றன. அட்ரினலின் அதிகமாகச் சுரக்கிறது. ரத்த அழுத்தம் மற்றும் நாடித் துடிப்பு அதிகரிப்பதோடு தசைகள் இறுக்கம் அடைகின்றன. உடல் ரீதியான தற்காப்புக்கு இதன் மூலம் தயாராகிறோம். ஆபத்து அகன்றதும், துரிதப்பட்ட உடல் இயக்கங்கள் நார்மலுக்குத் திரும்பும்.

ஆனால், தற்காலத்தில், டென்ஷன் உடல் ரீதியான தற்காப்பு உணர்வு மட்டுமல்ல. பரிணாம வளர்ச்சியின் பயனாக, வாழ்க்கையில் போட்டியும் சவால்களும் அதிகரித்துள்ளதன் விளைவாக, நமது சமூக அந்தஸ்து, சுயகௌரவம் ஆகியவற்றுக்கு நேரடியான அல்லது மறைமுகமான தாக்குதலோ, எதிர்ப்போ, தடையோ ஏற்படும்போது, டென்ஷன் உணர்ச்சி விழிப்படைகிறது.

ஒவ்வொரு நிமிஷமும் நம்மை நாமே நிலை நிறுத்திக் கொள்ள, நமது ஆற்றலுக்கு அங்கீகாரம் பெற, எடுத்துக் கொள்ளும் முயற்சிகள் ஏராளம். மூன்றாம் வகுப்புக் குழந்தைக்குக் கணக்குப் பரீட்சையில் 'பாஸ்' ஆவது அதிமுக்கியம்; குடும்பத் தலைவிக்கு, மாசக் கடைசியில் கடன் கேட்க வேண்டிவராமல் செலவை நிர்வகிப்பது சவால்; வேலைக்குப் போகும் பெண்ணானால் வீட்டில் நல்ல பெயர் எடுத்து, பஸ்ஸைத் தவறவிடாமல் ஆபீஸ் போய், தப்பில்லாமல் லெட்டர் டைப் செய்து, திட்டு வாங்காமல் வீடு திரும்புவது கௌரவப் பிரச்னை; அவள் கணவனுக்கு அம்மா, மனைவி — இருவரிடமும் சுமுகமாக உறவு வைத்துக் கொண்டு ஆபீஸில் புரமோஷனுக்காக உழைப்பது அவசியத் தேவை, ரிடையரான தாத்தாவுக்குக்கூட 'யூஸ்லெஸ்' என்று பெயர் வாங்காமல் உதவிகரமான ஆசாமி என்று பெயரெடுக்கத்தான் ஆசை... இதில் ஒரு சவால் முடிவடைவதற்குள் ராமபாணம் போல் இன்னொரு சவால் பாய்ந்து வருகிறது. வாழ்க்கையே சவால்களின் தொடர் சங்கிலியாகிறது. விளைவு......?

ஆதி மனிதனின் தற்காப்புக்காக ஏற்படுத்தப்பட்ட டென்ஷன் உணர்ச்சி ஜவ்வு போல் இழுக்கப்படுகிறது. உடலும் மனமும் இறுக்கி முடுக்கப்



அப்படித்தானே! இந்த உண்மையை மலர்ந்த மலர் நமக்குக் காட்டுகிறது. 'மலரின் வாழ்வு சிறிதே காலம்.' அது போலவே நம் வாழ்வும்' என்பதைப் பக்தர்கள் நன்றாகவே தெரிந்து வைத்திருந்தனர்.

ஒரு கதை: அனந்தாழ்வார் என்ற ஒருவர் திருப்பதியில் ராமானுஜ ஏரி என்ற ஓர் ஏரியை வெட்டி, அருகில் நந்தவனம் ஒன்றும் வைத்திருந்தார். தினமும் நந்தவன மலர்களைப் பறித்து 'மாலை கட்டி, இராமானுஜ ஏரியில் நீராடி விட்டு, மலையேறிப் போய் வேங்கடேசப் பெருமாளுக்கு மாலையைச் சாத்துவார். ஒரு நாள் அனந்தாழ்வார் மலர் பறிக்கும்போது பாம்பு ஒன்று அவரைக் கடித்து விட்டது. அதற்காக அவர் கவலைப்படவில்லை. வழக்கம் போலவே மாலை கட்டி எடுத்துச் சென்றார். பெருமாளுக்குப் பரபரப்பு! "என்ன அனந்தாழ்வாரே! பாம்பு கடித்த அன்றும் வழக்கம் போல் மாலை கட்டி எடுத்துக் கொண்டு வருகிறீர்! நீர் மருந்து போட்டுப் படுத்திருப்பீர் என்று நினைத்தேன்' என்று அதிர்ச்சியுடன் கேட்டார். அனந்தாழ்வார் அமைதியாகச் சொன்னார்: "சுவாமி! பாம்பு கடித்ததை நான் அறிவேன். அப்போதே ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன். அதாவது கடித்த பாம்பு சாதாரண பாம்பாக இருந்தால் ராமானுஜ ஏரியில் குளித்து விட்டு உம்மைத் திருப்பதியில் தொழுவது; கடித்த பாம்பு அதிக விஷமுள்ள பாம்பாக இருந்தால், குளிக்கிற வேலை கூட என் வேலையில்லை, மற்றவர்கள் என்னைக் குளிப்

பட்ட வீணைத் தந்திகள் போல் அறுந்து தெறிக்கத் தயார் நிலையில் உள்ளன. மேலும், உடலுக்குள் அட்ரினலின் 'ஓவர் டைமில்' சுரப்பது நிற்ப இல்லை; ரத்த அழுத்தம் நார்மலுக்குத் திரும்புவ தில்லை; முறுக்கேறிய தசைகள் தளர்ந்து, சம நிலைக்கு வருவதில்லை. இந்த முக்கியமான இயக்கங்களுடன் தொடர்புடைய உடலின் பல நூறு சிறு சிறு இயக்கங்களும் 'உச்சி முதல் பாதம் வரை' பாதிப்புக்குள்ளாகின்றன. நோய்கள் வருகின்றன.

'டென்ஷனில் கட்டுண்ட ஒரு நபரின் வயிற்றை **gastroscope** என்ற கருவி கொண்டு ஆராய்ந்தால், இளஞ்சிவப்பாக இருக்க வேண்டிய உட்பகுதி, அரிந்த தக்காளிப்பழம் போல் கோபச் சிவப்பாக இருப்பதைக் காணலாம்.

> **அளவான கட்டுப்பாடும்**
> **அது விளைவிக்கும்**
> **டென்ஷனும் வாழ்வில்**
> **அவசியம் தேவை.**
> **இந்த அளவான**
> **டென்ஷன் இல்லா**
> **விட்டால் சாதனை**
> **புரிய வேண்டும்**
> **என்ற ஆவலே**
> **மனிதனுக்கு**
> **ஏற்படாது.**

டென்ஷனின் விளைவாக வயிற்றில் அதிகப்படி அமிலம் சுரப்பதால் ஏற்படும் நிலை இது. இப்படியே தொடர்ந்தால் மனிதனுக்கு **'hyper acidity'** என்ற நிலை உண்டாகி, அது முற்றிய நிலையில் அல்சராக மாறும் வாய்ப்புக்கள் தாராளமாகவே இருக்கின்றன.

டென்ஷனால் ஏற்படும் வேறு சில நோய்கள்.

டென்ஷன் — தலைவலி அல்லது இடுப்பு, முதுகு வலி.

டென்ஷன் — அஜீரணம் — மலச்சிக்கல் — மூலம்.

டென்ஷன் — சர்க்கரை வியாதி — ரத்த அழுத்தம் — இதயக்கோளாறு.

டென்ஷன் — ஹைபர்டென்ஷன் — ஹிஸ்டீரியா — வேறு சில மன நோய்கள்.

டென்ஷன் — மாதவிடாய்க் கோளாறுகள் — ஹார்மோனல் உடன் விளைவுகள்.

டென்ஷன் — கொத்துக் கொத்தாய் முடி உதிர்தல் — வழுக்கை.

என்ன! 'இதையெல்லாம் படித்தாலே டென்ஷன் தாங்க முடியவில்லை; போதுமடா சாமி!' என்கிறீர்களா? அதற்குத்தான் ஆரம்பத்திலேயே கூறினோம்:

டென்ஷனைப் பற்றித் தெரிந்து கொண்டாலே அதைப் பாதி வென்ற மாதிரிதான் என்று. மேலும், இங்கே சொல்லியிருக்கிற எல்லா வியாதிகளும் நமக்கு வந்துவிடும் என்று பயந்து அலறிக் குடும்ப டாக்டரிடம் ஓடாதீர்கள்!

'ாட்டிக் கொண்டிருப்பார்கள். உம்மை வைகுண்டத்திலேயே வந்து தரிசிப்பது.''

**குந்தி என்பவள் முறையான திருமணம் இல்லாமலே கர்ணனைப் பெற்றுக் கொண்டாள். இதுபோன்ற கதை வருகிற மகாபாரதத்தைத் தெய்வத் தன்மையுடைய நூல் என்று ஏற்றுக் கொள்வது பொருந்துமா?**

மிகப் பொருந்தும். குந்திக்கு, துருவாசர் ஒரு மந்திரத்தை உபதேசித்துத் 'தேவைப்படும் போது மட்டுமே சொல்' என்று எச்சரித்திருந்தார். அந்த மந்திரத்தைச் சொல்லி எந்தத் தெய்வத்தை எண்ணினாலும், அத்தெய்வத் தொடர்பும் அதனால் பிள்ளையும் பிறக்குமென்பதால், நன்றாகவே எச்சரித்திருந்தார். குந்தி விளையாட்டாக எண்ணிக் கதிரவனை நினைத்து மந்திரத்தைச் சொன்னாள். கர்ணன் பிறந்தான். பிறகு ஊரார் பழிக்கு அஞ்சிப் பெற்ற பிள்ளையைக் கங்கையில் விட்டு விட்டாள்.

**இக் கதையால் 1990ல் வாழும் நாம் தெரிந்து கொள்கிற நீதி என்ன?**

1. எந்தப் பொருளையும் பயன்படுத்தத் தகுதி வர வேண்டும். தகுதியில்லாத காலத்தில் ஒரு பொருளைப் பயன்படுத்தினால் கேடுதான் விளையும்.

2. பெரியோர் செய்யும் தவறால் பிள்ளைகள் பாதிக்கப்படுகின்றனர். அடுத்த தலைமுறை பாதிக்கப்படுகிறது. பாரதம் இவை போன்ற பல நீதிகளைக் காட்டும் தெய்வத் தன்மையுடைய நூல்.

**பழைய கோவில்கள் பராமரிப்பு இன்றிப் பழுதடைந்து கொண்டிருக்கையில் கோடி கோடியாய்ச் செலவழித்துப் புதிய கோவில்கள் கட்டுவது ஏன்?**

தேவையில்லைதான். ஆனால் புதிய புதிய குடியிருப்புக்கள் தோன்றும் இடங்களில் சிறிய அளவில் கோயில் கட்டுவது தேவையே. தொலைவான இடத்தில் உள்ள பழைய கோயில்களுக்குச் செல்ல முடியாத நிலை இருப்பதால்.

பழைய கோயில் பராமரிப்பு இன்றிக் கிடப்பதைப் பற்றி எந்த இந்து கவலைப்படுகிறான்? இந்து சமய அறநிலையத் துறையை அரசாங்கத்திடமிருந்து எடுத்தால் மட்டுமே பழைய கோயில்களின் பராமரிப்பு செம்மைப்படும்.

**'செய்யுந் தொழிலே தெய்வம்' — கோயிலுக்குப் போகா விட்டால் என்ன?**

கோயிலுக்குப் போவதே, செய்யும் தொழிலே தெய்வம் என்பதை இன்னும் உறுதிப்படுத்திக் கொள்ளத்தான். செயல் வலிமைக்கு மனவலிமையே அடிப்படை. மனம் வலிமை பெற்றால் செயல் வலிமை இரண்டு மடங்காகும். கோயிலுக்குச் செல்லாமல் இருந்த இடத்தில் இருந்தபடியே தெய்வத்தை வணங்குகிறேன் என்பதெல்லாம் நடைமுறைக்கு உதவாது. தெய்வத்திடம் உறுதியான பக்தி வைராக்கியத்தை வைப்பது

ஆபீஸ் கவலை இல்லாமல் சற்று நேரம் டீ.வி.யில் மகாபாரதத்தை மனமொன்றிப் பார்க்க முடிகிறதா? சாயங்காலம் வீடு திரும்பும் போது மல்லிகைப்பூவைப் பார்த்தால் மனைவி ஞாபகம் வருகிறதா? (பஸ்ஸிலிருந்து இறங்கி வாங்க முடியாது போனாலும் பாதகமில்லை). போன மாதம் பையனுக்கு வாங்கிய டிரெஸ் இந்த மாதம் கொஞ்சம் சின்னதாகிவிட்டதைக் கவனித்து, வேறு வாங்க வேண்டுமே என்ற விசாரத்தோடு, 'அட! எவ்வளவு சீக்கிரம் வளர்கிறான்' என்ற சந்தோஷமும் எழுகிறதா? தூக்க மாத்திரை, மது, லாஹிரி வஸ்துக்களை நாடாமல் ஆறு மணி நேரமாவது ஆழ்ந்து தூங்க முடிகிறதா?.... இந்தக் கேள்விகளுக்கெல்லாம் முழுமனத்தோடு 'ஆமாம்' என்று பதில் சொல்ல முடிந்தால் மேலே சொன்ன பெரிய பெரிய வியாதிகளெல்லாம் டென்ஷன் காரணமாக உங்களுக்கு வராது.

'ரொம்ப தாங்க்ஸ்!' என்று கூறி விடை பெறப் பார்க்காதீர்கள். இன்னொரு ரகம் உண்டு. அவர்களைப் பார்த்தால் டென்ஷன் உள்ளவர் போலவே தோன்றாது. சின்ன விஷயத்துக்கு எரிந்து விழாமல், காலைப் ப ர ப ர ப் பி லு ம் நெற்றிச் சுருங்காமல், பக்கத்து வீட்காரர் வம்படித்து நேரத்தை வீணக்கினாலும் எரிச்சல் படாமல், மாமியார் 'ஏண்டீம்மா! இப்படிச் செய்வாளோ...?' என்று நீட்டி முழக்கும்போதும் முகம் சுருங்கி மனம் வாடாமல் இருப்பார்கள். ஆனால் இந்தச் சின்னச் சின்ன எரிச்சல்களைச் சேர்த்து வைத்துக் கொண்டு இனி தாங்க முடி



போலத் தொழிலிலும் உறுதியான நாட்டம் கொள்ள வேண்டும் என்ற அளவில்தான் 'செய்யும் தொழிலே தெய்வம்' என்று சொல்லப்படுகிறது. பஞ்சாங்கத்தில் இந்த ஆண்டு இருபது மரக்கால் மழை பொழியும் என்று போட்டிருக்கும். பஞ்சாங்கத்தைப் பிழிந்தாலே மழை பெய்யுமா? மழை தனியாகத்தானே பெய்ய வேண்டும்? 'செய்யும் தொழிலே தெய்வம்' என்பதும் இதைப் போலத்தான்.

**விளக்கு வைக்கிற நேரம் என்று பவ்யமாய்ச் சொல்லி 'ஸ்பெஷல்' ட்ரீட்மெண்ட் எதற்குக் கொடுக்க வேண்டும்?**

• பகலும் இரவும் இணையும் மாலைக் காலம் ஒளியை இழந்து இருட்டைக் கொண்டு வருகிற காலம். அப்போது விளக்கேற்றி வைத்தே ஆக வேண்டும். இருள் வெறுக்கத்தக்க பண்புகளுக்கு ஒரு குறியீட்டுப் பெயர். ஒளி தெய்வத் தன்மையுடைமைக்கு ஒரு குறியீட்டுப் பெயர். (அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை ஆர் இருள் உய்த்துவிடும்.)

இனிய மாலைப் பொழுதில் விளக்கேற்றி வாழ்வில் இருள் அகலப் பிரார்த்திக்கிறோம். அந்த நேரத்தில் நல்ல முறையில் அலங்கரித்துக் கொள்வது உடல், மன சுத்தத்துடன் இறைவனை அணுக வேண்டும் என்ற ஐதீகத்தில். நமது தோற்றத்தாலும் வீட்டின் ரம்மியமான சூழ்நிலையாலும் பிறர் மனமும் மகிழும். மாலை நேரத்தில் தலையை விரித்துப் போட்டுக் கொண்டிருப்பதோ, வீட்டில் விளக்கேற்றி வைக்காமலிருப்பதோ ஒரு வெறுப்பைத் தானாகவே உண்டாக்கி விடும்.

இவையெல்லாம் பழைமையான கருத்துக்கள் என்று ஒதுக்குவாருமுண்டு. ஆனால், புதுமையான உலக விரும்பி ஒருவர் மற்றொருவரிடம் விடைபெறும்போது 'குட்நைட்' என்கிறார். அது மட்டும் ஏன்? அவர் அப்படிச் சொல்லாவிட்டால் அது 'Bad Night' ஆகவா போய்விடும்?

**'மனமே எல்லாவற்றிற்கும் காரணம்' என்று பெரியோர்கள் 'ஏ மனமே' என்று விளித்து நீதிகளைச் சொல்கிறார்களே' — ஏன்?**

ஒரு முதலாளி தன் வேலைக்காரனை அழைத்து 'ஒன்பது மணி ரயிலில் நம் சொந்தக்காரர் ஒருவர் வருகிறார், போய் அழைத்து வா' என்கிறார். இவன் 8.55 க்குத்தான் ரயில் நிலையம் போகிறான். ரயிலுக்காக ஐந்து நிமிஷம் காத்திருக்கிறான். அதற்குள் அவன் படும் வேதனை சொல்லி முடியாது. நீண்ட நேரம் காத்திருந்தது போல ஓர் உணர்ச்சி — ஒரு வெறுப்பு, ஏன்? ரயிலில் வருகிறவருக்கும் அவனுக்கும் ஒரு சம்பந்தமுமில்லை. ஆனால் அதே வேலைக்காரனின் மனைவி 'நாளை பன்னிரண்டு மணி பஸ்ஸில் ஊரிலிருந்து வருகிறேன்' என்று அவனுக்குக் கடிதம் போடுகிறாள். அவ்வேலைக்காரன் காலை ஆறு மணிக்கெல்லாம் பஸ்ஸ்டாண்டில் சென்று உட்கார்ந்து விடுகிறானே, ஏன்? அவன் மனத்துக்கு இனியவள் வருவதால்!

மனம்தான் எல்லாவற்றுக்கும் காரணம். அது தூய்மையுடையதாயின் நாம் பார்க்கும்,

யாது என்ற நிலையில் கணவனிடமோ மனைவியிடமோ கொட்டித் தீர்ப்பார்கள்! இப்படியெல்லாம் இல்லாமல் சமனமனத்துடன் எப்போதும் இருக்க வழி சொல்லுங்கள் என்கிறீர்களா?.....



கங்கிராட்ஸ்! எப்போது நீங்கள் டென்ஷனைக் குறைக்க விரும்பி வழி தேட ஆரம்பித்துவிட்டீர்களோ, அப்போது நிச்சயம் முயற்சி கைகூடி விடும். நம்பிக்கையுடன் மேலே படியுங்கள்.

**வி.** பி. சிங் பிரதமரான புதிதில் நமது அமைச்சரவை, சில திட்டங்களை நிறைவேற்றும் என்று பட்டியலிட்டார். ஒவ்வொரு திட்டத்துக்கும் ஆறு மாதம், ஒரு வருடம், என்று காலவரையறை வகுக்கப்பட்டது. அரசியல் ஆய்வாளர்கள் இந்தக் காலக்குறியீட்டை வரவேற்றுப் பாராட்டினார்கள். இந்த அரசாங்கம் நாட்டின் முன்னேற்றத்தில் நிஜமான அக்கறை கொண்டுள்ளது என்று எழுதினார்கள். நமக்கு நாமே காலக்கெடுவை நிர்ணயித்துக் கொள்ளும்போது திட்டமிட்டுச் சீராகச் செயல்படுவோம் என்ற அடிப்படை சித்தாந்தத்தை வி. பி. சிங்கின் பிரகடனத்தில் அவர்கள் கண்டதே இதற்குக் காரணம். அன்றாட வாழ்க்கையிலும் காலக் கெடு என்று ஒன்று இருப்பதால்தான் பல காரியங்கள் சீராக நடக்கின்றன. வார இறுதியில் டெஸ்ட் இருப்பதால் குழந்தைகள் தினமும் கவனமாகப் படிக்கிறார்கள்; 9 — 5 வரை ஆபீஸ் என்பதால்தான் நாமும் கட்டுப்பட்டு வேலை செய்கிறோம். எப்போது வேண்டுமானாலும் வரலாம் — போகலாம் ஆனால் ஒரு நாளைக்கு எட்டு மணி நேரம் வேலை செய்ய வேண்டும்என்று கட்டுப்பாட்டைத் தளர்த்தினால் அலுவலகங்கள் எல்லாம் குழப்பத்தின் எல்லையில் அல்லவா இருக்கும்....!

னுபவிக்கும் எதுவும் நமக்குத் தூய்மையாகவே
தான்றும் அதனால்தான் திருவள்ளுவர் மனத்துக்
ண் மாசிலனாதல் அனைத்து அறன்' என்றார்.

**தியானம் என்றால் கண்ணை மூடிக் கொண்டு டவுளை நினைத்துக் கொண்டிருக்கிறேன் ன்பதுதானா?**

தியானம் என்பது கடவுளை நினைத்துக் காண்டிருப்பது மட்டுமல்ல. நாம் எடுத்த சயல்களில் உறுதியாக இருப்பதும் தியானம் ான். இதற்குச் சிரத்தை என்று பெயர். தியான ும் சிரத்தையும் ஒன்றே. மனத்தை அலைய விடாமல் இறைவனை எண்ணுவது தியானம். அதேபோல மனத்தை அலைய விடாமல் எடுத்த செயலில் உறுதியாக இருப்பது சிரத்தை. மனம் அடிக்கடி மாறக்கூடியது. அலையக் கூடியது. அதைக் கட்டுப்படுத்தி எண்ணத்தில் நிறுத்தினா ும், செயலில் நிறுத்தினாலும் தியானமே.

ஒருவன் தன்னுடைய பெரிய தோட்டம் ன்றில், ஒரு கிணறு வெட்ட வேண்டும் என்று விரும்பினான். ஓர் இடத்தில் இருபது அடி ஆழம் வெட்டினான். தண்ணீர் வரவில்லை. வேறு இடத்தில் முப்பது அடி வெட்டினான். அங்கும் தண்ணீர் தென்படவில்லை. மற்றோர் இடத்திற்குப் போய் நாற்பது அடி வெட்டினான். அங்கும் தண்ணீரைக் காணவில்லை. அவன் கிணறு வெட்டும் எண்ணத்தையே விட்டுவிட்டான். இவன் இருபது, முப்பது, நாற்பது அடி என்று மாறி மாறி மூன்று இடங்களில் தோண்டாமல் ஒரே






அதே போல்தான் தனி நபர் வாழ்விலும் அளவான கட்டுப்பாடும் அது விளைவிக்கும் டென்ஷனும் அவசியம் தேவை. இந்த அளவான டென்ஷன் மட்டும் இல்லாவிட்டால் சாதனை புரிய வேண்டும் என்ற ஆவலே மனிதனுக்கு ஏற்படாது.

பையனுடைய ஹோம் ஒர்க்கில் ஒரு கஷ்டமான கணக்கு... அதைப் போட்டுப் பார்த்து அவனுக்குக் கற்றுத் தர வேண்டும். கணக்கைப் போடும்போது உங்கள் மூளையும் மனமும் அதில் ஒருமுகப்படுகின்றன. விடை கண்டதும் ஒரு சுதந்திர உணர்வு ஏற்படுகிறது — நெற்றிச் சுருக்கம் விலகி இறுக்கம் தளர்கிறது — இது இயல்பான அளவான — அவசியமான டென்ஷன்.

காலையில் எழுந்தது 'லேட்'; வேலைக்காரி வரவில்லை; முதல்நாள் இரவு பாலை ஃப்ரிட்ஜில் வைக்க மறந்ததால் திரிந்துவிட்டது. காலை காப்பி இல்லை..... (படிக்கும் போதே சுறுசுறுவென்று ஏறும் டென்ஷனைக் கற்பனை செய்து பார்க்க முடிகிறது இல்லையா?) பெண் 'அம்மா கறுப்பு ரிப்பனைக் காணும்' என்று வந்து நிற்கும் போது டென்ஷன் படாரென்று **கோபமாய்** வெடித்து அவள் முதுகில் மொத்தச் செய்கிறது. தொடர்ந்து 'ணங்' என்று **ஆத்திரத்துடன்** பாத்திரத்தை இறக்கி வைக்க, இரண்டு கரண்டி ரஸம் சிந்துகிறது. **பதற்றத்துடன்** அதைத் துடைத்து விட்டுக் கிளம்பி, பஸ் பிடித்து ஏறினால் — சீட்டுப் பணம் எடுத்து வர **மறந்து** விட்டோமே என்று மானசீகமாய்த் தலையில் அடித்துக் கொள்வோம்.

டென்ஷன் அளவை மீறும்போது ஏற்படும் உடன் விளைவுகள்: கோபம், ஆத்திரம் பதற்றம், மறதி — எல்லாவற்றையும் குறுகிய காலத்துக்குள் அனுபவித்துவிடுகிறோம். இயல்பான செயல் திறன் பாதிக்கப்படுகிறது.

டென்ஷன், ஆரோக்கியமான எல்லைகளை மீறாமல் இருக்க என்ன செய்வது? முதலில் நம்மால் எவ்வளவு டென்ஷனைத் தாக்குப் பிடிக்க முடியும் என்று நாமே ஆராய்ந்து, தெளிவு பெற்றுக்கொள்ள வேண்டும். அபாய எல்லைகளை அடையாளம் கண்டு கொண்டு அவற்றை நெருங்கும்போதே சுதாரித்துக் கொண்டு விட வேண்டும்.

ஆம்பூர் அத்தை,மடி ஆசாரத்துக்குப் பெயர் போனவர். அவர் வீட்டில் சாப்பிடுவதே டென்ஷன். இடது கையால் பரிமாறிக் கொள்ளக் கூடாது; சாப்பிட்டு எழுந்தால் தெருவிலிருந்து சாணி எடுத்து வந்து எச்சிலிட வேண்டும். சுனந்தாவுக்கு அத்தை வீட்டு கேட்டைத் திறந்து உள்ளே நுழையும்போதே டென்ஷன் ஆரம்பித்து விடும். ஒவ்வொரு விஜயத்தின்போதும் ஏதேனும் இசகுபிசகாகி அத்தையிடம் வாங்கிக் கட்டிக் கொள்வாள். ஒரு முறை டென்ஷனைப் பின்னுக்குத் தள்ள முடிவு செய்தாள். காலிங் பெல்லை **அடித்ததும் 'படக் படக்'க ஆரம்பித்த இதயத்தைத் தலையில் குட்டி உட்கார வைத்தாள். 'எதைச் செய்தாலும் அத்தையைக் கேட்டு விட்டுச் செய்தால் போயிற்று; தப்பாக ஏதேனும் செய்து**

இடத்தில் 90 அடி வெட்டியிருந்தால் நிச்சயம் தண்ணீர் கிடைத்திருக்கும். இதுதான் தியானம்; இதுதான் சிரத்தை.

**விதியை மதியால் வெல்ல முடியும் என்கிறேன். மறுக்க முடியுமா?**

ஒரு போதும் விதியை மதியால் வெல்ல முடியாது. ஏனெனில் விதி மதியைப் பயன்படுத்திக் கொண்டுதான் வரும்.

ஒருவன் ஒரு சோதிடனிடத்திலே போய் தன் ஜாதகத்தைக் காண்பித்தான். அவர், 'நீ இன்னும் ஒரு மாதம்தான் உயிரோடிருப்பாய்' என்று சொல்லி விட்டார். இவன் கலங்கிப் போய் யாரைப் பார்த்தாலும், 'எனக்கு ஒரு மாதம் தானாமே. இன்னும் பத்து ஆண்டு வாழ ஆசையாக இருக்கிறதே!' என்று புலம்ப ஆரம்பித்து விட்டான். அவனைக் கழற்றிவிட வேண்டுமே என்று எல்லோரும், 'நீ வசிட்டரிடம் போ. அவர் பத்து ஆண்டு உன் ஆயுளை நீடிக்க வழி செய்வார்' என்று சொல்லிவிட்டனர். அவனும் வசிட்டரிடம் போய் இறைஞ்சினான். வசிட்டர் அவனுடன் யமனிடம் போனார். யமனோ 'யாருக்கும் போட்ட ஆயுளை நீடிக்க முடியாதே' என்று மறுத்துவிட்டான். வசிட்டர் யமனிடம் 'இவனுக்கு என்று, எத்தனை மணிக்குப் போட்டிருக்கிறாய் என்றாவது சொல்லேன்' என்றார். யமன் 'எல்லோருடைய ஓலையும் இந்த அறையில் உள்ளது. நீங்களே தேடிக் கொள்ளுங்கள்' என்றான். வசிட்டர் தேட ஆரம்பித்தார். தினம் தினம் தேடியும் பயனில்லை. ஒருநாள், 'இவன் ஓலை



விட்டால் உடனே 'ஸாரி' சொன்னால் ஆயிற்று. அத்தை அடிப்படையில் நல்லவர்; என்னிடம் பிரியம் உண்டு' என்று தனக்குத் தானே சொல்லிக் கொண்டாள். அன்று முதல் ஆம்பூர் அத்தை வீட்டுக்குப் படபடக்காத இதயத்துடன் போக முடிந்தது சுனந்தாவால்,

"சுனந்தா எப்போதேனும் ஒரு சமயம் தான் ஆம்பூர் அத்தை வீட்டுக்குப் போகிறாள். நான் தினம் தினம் என் மாமியாருடன் குடித்தனம் நடத்துகிறேன். ஒவ்வொரு நாளும் அசுவமேதயாகமாகத்தான் இருக்கிறது'' என்றார் ராணி. ''என் கணவர் ரொம்ப சாமர்த்தியசாலி — வீட்டில் குருக்ஷேத்திரத்தை அனுபவிக்காமல் ஆபீஸ் விட்டு வந்ததுமே வாக்கிங் கிளம்பிடுவார்.''

ராணியின் கணவர் புத்திசாலிதான்! 'டென்ஷன்' ஏற்படுத்தும் நிலைக்களனிலிருந்து தாம் அகல்வதோடு, ஏற்பட்ட டென்ஷனை வேகமான 'வாக்கிங்' மூலம் வெளியேற்றிவிடுகிறார். ராணியும் கணவருடன் சேர்ந்து தினமும் வாக்கிங் போவதோடு அதிகமாகக் கோபம் வரும் நேரத்தில் துணி துவைப்பது, மாவு ஆட்டுவது போன்ற வேலைகளைச் செய்து டென்ஷனை வெளியேற்றலாம். டென்ஷன் ஏற்படுத்தும் நிலைக்களனிலிருந்து வெளியேற முடியாது போனால் டென்ஷனை இவ்வாறு உபயோகமாய்ப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

ஷீலா மாமியார் மெச்சிய மருமகள். ஊரெல்





இன்று 'கிடைக்காவிட்டால் தேடுவதே இல்லை' என்ற முடிவோடு தேடினார். அன்று அவன் ஓலை கிடைத்தது. அதை எடுத்து வசிட்டர் படித்தார். அதில் எழுதியிருந்தது: ''வசிட்டர் இந்த ஓலையைத் தேடிப் படிக்கிற போது அவன் இறந்து போவான்'' என்று.

**நல்ல நாளில் பெரியவர்கள் காலில் விழுந்து நமஸ்கரிப்பது ஏன்? காலில் விழுவது சமத்துவக் கொள்கைக்கு முரணாக உள்ளதே!**

ஒரு திருடன் சர்க்கஸ் பார்க்கப் போனான். வட்டமான நெருப்பு வளையத்திற்குள் ஒருவன் பாய்கிற காட்சி. நிகழ்ச்சி முடிந்ததும் திருடன் அவனிடம் போய் 'உனக்கு சர்க்கஸில் என்ன சம்பளம் தருகிறான்?' என்றான். அந்த வீரன் ஆயிரம் ரூபாய் என்றான். 'என்னோடு வா, ஐயாயிரம் தருகிறேன்' என்று திருடன் அவனை அழைத்து வந்தான். ஒரு நாள் திருடன் அவனையும் அழைத்துக் கொண்டு போய் ஒரு வீட்டில் உயரமான இடத்தில் ஒரு கன்னம் வைத்து உள்ளே பாய்ந்து அங்குள்ள பொருள்களை எடுத்துக் கொண்டு வா என்றான். சர்க்கஸ் வீரன் திருடனிடம் 'பத்தாயிரம் பேரைக் கொண்டு வா' என்றான். திருடனுக்கு அதிர்ச்சி. 'ஏன்?' என்று கேட்டான். சர்க்கஸ் வீரன் சொன்னான், 'நானாக நெருப்பு வளையத்தில் நுழைவதில்லை. சர்க்கஸ் பார்க்க வருகிறவர்கள் பத்தாயிரம் பேர் கை தட்டுவதால் பிறக்கும் உற்சாகத்தில்தான் நுழைகிறேன். சர்க்கஸ் வளையத்தில் நுழைவதைப் போல்



லாம் நல்ல பெயர். அவள் பீரோவின் அடித்தட்டு முழுவதும் சின்னச் சின்னதாகக் கிழிக்கப்பட்ட காகிதத் துண்டுகள் — மாமியார் படுத்தியபோதெல்லாம் டென்ஷன் தாங்காமல், காகிதத்தைக் கிழித்து ரகசியமாகக் கோபத்தை வெளிப்படுத்தினாள். அதே காகிதத்தில் பகிரங்கமாக ஸ்ரீராம ஜெயம் எழுதியிருக்கலாம் அல்லவா. டென்ஷனும் வெளியேறியிருக்கும்; இறையுணர்வு மிக்க அவளுக்கு, நிச்சயம் மன அமைதியும் கிடைத்திருக்கும்.

**'மா**மியார் — மருமகள் விவகாரம் கிடக்கட்டும்; ஆபீஸ் டென்ஷன்தான் சகிக்கவில்லை' என்று பலர் முகத்தைக் கோணுவது தெரிகிறது. ஆபீஸில் எல்லோரும் அனுபவிக்க முடியாமல் திணறுவது பல்முனைத் தாக்குதலைத்தான். ப்யூன், டைப்பிஸ்ட்டாக இருந்தாலும் சரி, மானேஜராக இருந்தாலும் சரி, அவரவர் அளவில் டென்ஷன்கள். எல்லாப் பிரச்னைகளையும் போட்டுக் குழப்பிக் கொண்டு ஒரே சமயத்தில் தீர்க்க முயலாமல் பிரச்னைகளை வரிசைப் படுத்தி எழுதிக் கொண்டு வந்தால் நல்லது. பிறகு முக்கியத்துவத்தின் அல்லது அவசரத்தின் அடிப்படையில் ஒவ்வொரு பிரச்னையாக அணுகி, தீர்க்க முற்படுங்கள். அவ்வளவாக முக்கியமில்லாதவற்றை வேறொரு பேப்பரில் எழுதி, தனியே வைத்துக் கொள்ளுங்கள். முடிந்து போன பிரச்னைகள், தீர்த்த சிக்கல்களின் பட்டியலைக் கிழித்துப் போடாமல், கொஞ்சம் நாளைக்கு ஃபைல் செய்து வையுங்கள். மிகவும் மோசமான சிக்கல்-





இந்தக் கன்னத்தில் நுழைய வேண்டும் என்றால் பத்தாயிரம் பேரை இங்கு கொண்டு வா' என்றான்.

அடுத்தவர் தரும் ஆதரவிலே உண்டாகும் உற்சாகமே நம் ஆற்றலை அதிகரிக்கச் செய்கிறது! அப்படிப் பெரியோர்கள் வாழ்த்த, வாழ்த்த அந்த உற்சாகம் நம் செயல்திறனை அதிகப்படுத்தும். அதனாலேயே பெரியோர் காலில் விழுகிறோம். இதில் சமத்துவத்துக்கு என்ன வேலை? பெரியோர் பெரியோர்தான். சமத்துவம் பேசும் அரசியல்வாதிகள் பகிரங்கமாக மேடையில் தலைவர் காலில் 'தடாலென' விழுவதுதான் நமக்கு விளங்கவில்லை. அது வாழ்த்துப் பெற அல்ல....!

**திருவண்ணாமலை தீபத்தைக் கண்டு கன்னத்தில் போட்டுக் கொள்கிற பக்தர்கள், குடிசைகள் பற்றி எரிந்தால் தீயணைப்பு நிலையத்துக்குப் போன் செய்வது ஏன்?**

இது நீண்ட காலமாகக் கேட்கப்படுகிற 'தெனாவெட்டு'க் கேள்வி. அந்த முறையிலேயேதான் பதில் சொல்ல வேண்டும்.

ஒரு ஊரில் ஒருவன் சைக்கிளில் விளக்கு இல்லாமல் போய்க் கொண்டிருந்தான். போலீஸ்காரர் 'ஏனப்பா? சைக்கிளில் 'லைட்' இல்லாமல் போகிறாய்? இப்படிப் போவது குற்றமில்லையா?' என்றார்.

சைக்கிளில் போனவன் கிண்டலும் கேலியுமாக, 'ஏன் ஸார்! ஆகாயத்திலே நிலாதான் லைட் மாதிரி இருக்கே! அப்புறம் சைக்கிளில் லைட்

ஏற்படும் போது இந்த ஃபைலை எடுத்துப் புரட்டுங்கள். இவ்வளவு பிரச்னைகளைத் தீர்த்த நமக்கு இன்றைய பிரச்னையைத் தாக்குப் பிடிக்க முடியாதா?' என்று தன்னம்பிக்கை பிறக்கும்.

பொறுப்பான பதவி வகித்த உயர் அதிகாரி ஒருவர் தமது அலுவலக அறையில் தமது நாற்காலிக்குப் பின்னால் ஒரு தொட்டியில் மீன் வளர்த்து வந்தார். டென்ஷன் தாங்க முடியாத அளவை எட்டினால் தமது சுழல் நாற்காலியைத் திருப்பி மீன்களைச் சில நிமிடங்கள் பார்த்துக் கொண்டிருப்பார். அந்தக் காட்சியில் மனம் லயித்து லேசாகியதும் மீண்டும் நாற்காலியைத் திருப்பி வேலையைத் தொடருவார். மீன் தொட்டிக்குப் பதில் சின்ன மணி பிளாண்ட் செடியையோ அழகான குழந்தையின் படத்தையோ,

ஒவ்வொரு நாளும்
னக்கமணிக்கும்
எண்ணங்களை
மனத்தில் வரவழைத்
துக் கொண்டு
சிந்திப்பதற்கென்றே
சில நிமிடங்களைத்
தனியாக
ஒதுக்க வேண்டும்.

அவரவர் ரசனையையும் சௌகரியத்தையும் பொறுத்து, வைத்துக் கொள்ளலாம். ஆனால் ஐந்து நிமிடங்களுக்கு மேல் இவற்றில் மனத்தைச் செலுத்தாமல் மீண்டும் வேலையைக் கவனிக்கிற கட்டுப்பாடு வேண்டும்!

ஓய்ச்சல் ஒழிவின்றி வேலையையும் தொழிலையும் பற்றி மட்டுமே சிந்தித்துச் செயல்பட்டவர் ஜான் டி. ராக்ஃபெல்லர் என்ற அமெரிக்கக் கோடீசுவரர். முப்பத்துமூன்று வயதில் மில்லியன் டாலர்களுக்கு அதிபதியானார். நாற்பத்து மூன்றாவது வயதில் உலகின் மிகப் பெரிய நிறுவனத்தின் தலைவரானார். ஆனால் ஐம்பத்து மூன்றில் டென்ஷன் அவரை, வீழ்த்தி விட்டது. பல்லாயிரம் டாலர் மதிப்புள்ள சரக்கைக் கப்பலில் அனுப்பிவிட்டு அதற்கு 150 டாலர் இன்ஷூரன்ஸ் கட்டச் சுணங்கினார். புயலில் அக் கப்பல் மூழ்கக் கூடும் என அறிந்து கவலையில் துடித்துக் கடைசி நிமிஷத்தில் இன்ஷூரன்ஸ் தொகை செலுத்த, கப்பல் புயலில் சிக்காமல் தப்பிவிட்டது. நூற்றைம்பது டாலர் விரயமாயிற்றே என்று தவித்தார் அந்தக் கோடீசுவரர்! டென்ஷன் காரணமாக 'அலோபீஷியா' என்ற நோய்க்கு உள்ளாக, உடலின் எல்லாப் பாகங்களிலும் முடியை இழந்தார். படுத்த படுக்கையானார். பணமும் வசதிகளும் இருந்தும் அவற்றை அனுபவிக்காமல் சதா அவற்றைக் காப்பாற்றிப் பெருக்கிக் கொள்வதிலேயே கவனம் செலுத்தியதன் விளைவுதான் இது. டாக்டர்கள் அவர் உயிரைக் காப்பாற்ற

தற்கு?' என்றான்.

உடனே போலீஸ்காரர் சைக்கிள் ட்யூப்பில் உள்ள காற்றைத் திறந்து விட்டார்.

சைக்கிளில் வந்தவன் பரபரப்புடன் 'என்ன சார்! சைக்கிளில் காற்றை எடுத்து விட்டீர்களே! டயரில் காற்று இல்லாமல் எப்படிப் போவது?' என்றான்.

போலீஸ்காரர் 'அட! ஆகாயத்திலே லைட் இருக்கிற மாதிரி, எல்லா இடத்திலும்தான் காற்று இருக்கே! சும்மா போயேன்' என்றார்.

எல்லா இடத்திலும் காற்று இருந்தாலும் சைக்கிளின் டியூப்புக்குள் அளவாகக் காற்று இருந்தால் தானே போக முடியும். அது போல நெருப்பு அடக்கமாக, தீபமாக இருந்தால்தானே வணங்க முடியும். தீபத்தை வணங்குபவர் 'குடிசை நெருப்பைக் கண்டால் போன் செய்வது ஏன்?' என்று கேட்பது 'எல்லா இடத்திலும் காற்று இருக்கும் போது சைக்கிள் டியூப்பில் காற்று எதற்கு?' என்று கேட்பதைப் போலத்தான்!

**சம்பிரதாயம் பிசகாமல் வீட்டுக்கு வருபவர்க்கு வெற்றிலை பாக்குக் கொடுத்தால் அதை அவர்கள் எடுத்துச் சென்று வாட வைக்கிறார்கள். மதிப்பில்லாத ஒரு வழக்கத்தை ஏன் கைக்கொள்ள வேண்டும்?**

நாம் கொடுக்கும் மங்கலப் பொருள்களை வந்தவர்கள் எடுத்துக் கொண்ட அளவிலே நம் எண்ணம், கடமை முடிந்தது. வாட வைத்தால் நமக்கென்ன? தின்றால் நமக்கென்ன? தின்றால் நம் அன்பை எண்ணுவதாகப் பொருள். வாட வைத்தால், இறைவனுக்குச் சூட்டிய மாலை காய்ந்துபோனாலும் 'நிர்மால்யம்' என்று மதிப்பு வைத்திருப்பது போல என்று அர்த்தம். வெற்றிலை பாக்குடன் கொடுக்கப்படுகிற ரவிக்கைத் துண்டை யாரும் தூக்கி எறிந்து விடுவதில்லை!

**மனம் ஒன்றி வாழும் கணவன் மனைவி இடையே மஞ்சள் கயிறு, மெட்டி போன்ற புறச் சின்னங்கள் எதற்கு?**

உண்மைதான். நீங்கள் சொல்லும் கணவனும் மனைவியும் நான்கு சுவர்களுக்குள் அடைந்து கிடப்பதானால் சரிதான். புறவுலகில் வாழும் கடமைப்பட்டவர்களுக்குச் சில சின்னங்கள் தேவை. மாங்கல்யம் பூண்டு கொள்வதும் மெட்டி அணிந்து கொள்வதும் இரண்டு நோக்கங்களையுடையவை. ஒன்று தன் கணவன் தன்னுடன், தன்னுயிராய் இருக்கிறான் என்பது. மற்றொன்று, தான் திருமணமானவள் என்பதை பிறர்க்கு உணர்த்துவது. மாங்கல்யமும் மெட்டியும் அணிந்த பெண்ணைக் கண்டால் எந்த ஆடவரும் பெருமதிப்புடனே நோக்க வேண்டும். மெட்டியின் சப்தம் கேட்டாலே, திருமணம் ஆன பெண் வருகிறாள் என்று ஆடவர் ஒதுங்கிக் கொள்வர். (அப்படி ஒரு பண்பாடு தமிழகத்தில் ஒரு காலத்தில் இருந்தது). அதனாலேயே பழைய காலத்தில் ஒரு பெண் திருமணம் ஆகும் வரை சிலம்பு அணிந்திருப்பாள். திருமணம் நிச்சயிக்கப்பட்டு விட்டால் சிலம்பைக் கழற்றி வைக்க ஒரு விழாவே

முயன்றனர். தூக்கமற்ற இரவுகளில் தன் நிலை பற்றிச் சிந்தித்தார் ராக்ஃபெல்லர். பிறரைப் பற்றிச் சிந்திக்கவும் அவருக்கு நேரம் கிடைத்தது. 'பணத்தை எப்படிப் பாதுகாத்துப் பெருக்கிக் கொள்ளலாம்' என்பதை விடுத்து பணத்தால் எத்தனை பேர் எவ்வளவு சந்தோஷமாக இருக்க முடியும்?' என்று சிந்திக்கலானார். உடம்பு குணமாகி, ராக்ஃபெல்லர் ஃபவுண்டேஷன்' என்ற அறக்கட்டளையை நிறுவினார். 98 வயது வரை நிறைவான வாழ்க்கை வாழ்ந்தார்!

'The power of positive thinking' என்பது பற்றி ஆராய்ச்சி நூல்களெல்லாம் இன்று எழுதப்படுகின்றன. Positive thinking நமது முன்னோர்களுடைய வாழ்க்கை முறையாகவே இருந்தது. விடைபெறும் போது ''நான் போய் வருகிறேன்'' என்று சொல்ல வேண்டும்; 'போறேன்' என்று சொல்லக் கூடாது. வீட்டில் ஒரு பொருள் தீர்ந்து போனால் 'இல்லை' என்று சொல்லக் கூடாது. 'நாளைக்கு வாங்கிடலாம்' என்று சொல்ல வேண்டும் — இப்படிச் சில விதிகளை இன்னமும் கடைப்பிடிக்கிறோம். இவையெல்லாம் ஆரோக்கியமான மனப்போக்கை, நம்பிக்கையை வளர்ப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட விதிகளாகத்தான் இருக்க வேண்டும். இதே போல் நமக்கு நாமே positive thinking விதிகளை விதித்துக் கொண்டால் டென்ஷனை நெருங்கவிடாமல் இருக்க முடியும். 'நம்பு தம்பி, உன்னால் முடியும்' — என்று டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி கூறுவது போல, 'இந்த மாசம் நான் திட்டமிட்டு, மாசக் கடைசி டென்ஷனைத் தவிர்ப்பேன்,' 'இந்த வாரம் முழுவதும் ஆபீஸுக்கு நேரம் தவறாமல் போவேன்'. என்று நமக்கு நாமே சொல்லிக் கொள்வதால் நிச்சயம் பலன் உண்டு.



உண்டு. அதற்குச் 'சிலம்பு கழீஇ விழா' என்று பெயர். சிலம்பின் ஓசை கேட்டால் ஆடவர் இன்னும் மரியாதை காட்டுவர்.

இங்கு ஒன்று சிந்திப்போம். துறவிகளுக்குத் துவராடை ஏன்? அவர்கள் காவி ஆடைதான் உடுத்த வேண்டுமா? அது அவர்களுக்காக அல்ல. காவி ஆடை உடுத்திய ஒருவரைக் கண்டால் 'இவர் ஒரு லட்சியத்துடன் வாழ்பவர். அதற்குத் தடையான சபலங்கள், சலனங்கள் இவற்றை நாம் உண்டாக்கக் கூடாது' என்று நம்மை எச்சரிக்க. அதனால் லட்சிய வாழ்க்கைக்குச் சில சின்னங்கள் தேவை.

மாங்கல்யம் போன்ற சின்னங்கள் 'பெண்களை அடிமைப்படுத்தும் விலங்கு' என்று பறைசாற்றும் பகுத்தறிவு வாதிகளும் கறுப்புச் சட்டை அணிந்து கொள்கிறார்களே, ஏன்?

**கனகதாரா ஸ்தோத்திரம் சொன்னால் செல்வமும், கந்தசஷ்டிக் கவசம் சொன்னால் தைரியமும் நிஜமாகவே வரும் என்கிறீர்களா?**

கனகதாரா ஸ்தோத்திரம் சொன்னால் செல்வத்தை ஈட்டுவதற்கான மனவலிமை வரும். அது கொண்டு வினையை வலிமையுடன் செய்து செல்வத்தை ஈட்ட வேண்டியது நம் கடமை. கந்த சஷ்டிக் கவசமும் மனவலிமையைப் பெறவே. இந்தக் காரியம் நம்மால் ஆகாது என்ற சோர்வு உணர்வு நீங்க, உற்சாகம் பெற ஊன்றுகோல் ஸ்தோத்திரங்கள். மனம் ஒன்றிப் பாராயணம் செய்தால்தான் இந்த உண்மை புரியும். துன்பங்கள் வரத்தான் வரும். அவற்றைத் தாங்கும் மனதிடம் நமக்குப் பெருகும்.

**'மதம் மக்களுக்கு அபின்' என்று சிலர் சொல்கிறார்களே?**

அபின் சில மக்களுக்கு மதம். அவர்கள்தான் மதம் மக்களுக்கு அபின் என்கின்றனர்.

**சுயநலம் இன்றி வாழச் சொல்கிறீர்கள். இப்படி வாழ்ந்தால் என் சுயகௌரவத்தைப் பலர் மதிப்பதில்லை... சுயகௌரவம் எங்கே முடிகிறது? சுயநலம் எங்கே ஆரம்பிக்கிறது?**

சுய கௌரவத்தை விடாமலே சுயநலத்தை விடலாமே. அடுத்தவருக்கு வரும் கஷ்ட நஷ்டங்களைப் பற்றிக் கவலைப்படாமல் தன் தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டும் என்று எண்ணுவது சுயநலம். நம்மால் அடுத்தவர் துன்பம், இழப்புக்கு ஆளாகக் கூடாது என்று எண்ணும் இடத்தில் சுயநலம் முடிகிறது.

நான் ஒரு ஊர் நிகழ்ச்சிக்குப் போய், அங்கு ஒரு விடுதியில் தங்கியிருந்தேன். அமைப்பாளர்களில் ஒருவர் கார் வந்து நிகழ்ச்சிக்கு அழைத்துப் போவது வழக்கம். ஒருநாள் அவர் வீட்டில் உடல்நிலை சரியில்லை என்று வைத்தியம் பார்க்கக் காரை வெளியூர் அனுப்ப வேண்டியதாயிற்று. செயலர் வேறு டாக்ஸிக்கு ஏற்பாடு செய்தார். நிகழ்ச்சி நடக்கும் இடம் நான் தங்கியிருக்கும் இடத்திலிருந்து அரை கிலோ மீட்டர். அதற்கு டாக்ஸிகாரர் கேட்ட வாடகை 120 ரூபாய். இது தேவைதானா? நான் ஆட்டோ கொண்டு வரச்



ஒவ்வொரு நாளும் இவ்வாறு ஊக்கமளிக்கும் எண்ணங்களை மனத்தில் வரவழைத்துக் கொண்டு சிந்திப்பதற்கென்றே சில நிமிடங்களைத் தனியாக ஒதுக்கலாம். அதிகாலை நேரம் சிறந்தது. உங்களுக்கென்று அரை மணி நேரம் ஒதுக்கிக் கொள்ளுங்கள். முதல் பத்து நிமிடங்கள் சுறுசுறுப்பாக எளிய உடற்பயிற்சிகள்; அடுத்த பத்து நிமிடங்கள் அமைதியாய் உட்கார்ந்து அன்று செய்ய வேண்டிய பணிகளை வரிசைப் படுத்தி, 'எல்லாவற்றையும் என் முழு ஆற்றலையும் பயன்படுத்திச் செய்யப் போகிறேன் என்று உங்களுக்கு நீங்களே சொல்லிக் கொள்ளுங்கள். அவ்வாறு செய்வதாக, செய்து முடித்து விட்டதாகக் கற்பனை செய்து கூடப் பார்க்கலாம். இந்தப் பத்து நிமிடங்களின் இறுதியில் மனத்தைக் கற்பனையிலிருந்து மீட்டு, மெள்ள மெள்ள தியானத்தில் ஆழ்த்துங்கள். மூச்சை மெ–து–வா–க இ–மு–த்–து– வெளி–யே–ற்–று–ங்–கள். (பிராணாயாமம் செய்யத் தெரிந்தால் செய்யலாம்.) உடல் முழுவதும் அமைதி பரவி வியாபிக்கும். இதே அமைதியுடன் பணிகளைச் செய்து முடிக்க இறைவனை வேண்டிக் கொண்டு, தியானத்தை முடிக்கலாம்.

'இதுக்கெல்லாம் ஏது நேரம் — காலையில் ஷேவ் பண்ணுவேனா, பால் வாங்கி வச்சுட்டுக் குளிப்பேனா, பசங்களை ஸ்கூலில் 'டிராப்' பண்ணிட்டு வருவேனா, நடுவில் தண்ணி லாரி வந்தால் போய்த் தண்ணீர் பிடிப்பேனா...?' என்று கேட்பவர்களுக்கு ஒரு பதில் இருக்கிறது:

சொன்னேன். செயலர் ''ஆட்டோவில் வருவது கெளரவமாக இருக்குமா?' என்று தயங்கினார். 'அவசியப்பட்டால் சைக்கிள் ரிக்ஷாவிலும் வரத் தயார்' என்றேன். என்னால் அடுத்தவருக்கு 120 ரூபாய் செலவு வைப்பது குற்றமல்லவா? இங்கே சுயநலம் முடிகிறது. காரில் போனால்தான் கெளரவமா?

அநுபூதி — விளக்கவும்.

நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்ற ஐந்தும் பூதம். பூதத்தையே உறைவிடமாகக் கொண்ட சக்தியாக இருப்பவன் இறைவன். பூதத்தை உறைவிடமாகக் கொண்டவன் பூதி. அநு என்றால் பக்கம். ஆகவே அநு + பூதி என்றால் 'இறைவன் பக்கம்' என்பது. மண்ணுலகில் சரீரம் இருந்தாலும், மனம் எப்போதும் இறைவன் பக்கம் இருக்கும் நிலை அநுபூதி நிலை. கடமைகளை முற்ற முடித்து விட்டு, பின்னர் எதன் மீதும் பற்று வைக்காத உள்ளம் உள்ளவர்க்கே இந்த நிலை வரும். எதன் மீதும் பற்று இல்லாததால் பேச்சும் ஒடுங்கி விடும். அநுபூதி என்றால் பேசாமல் இருப்பது. ''ஆசா நிகளம் (சங்கிலி) துகளாயின பின் பேசா அநுபூதி பிறந்ததுவே'' என்பது அருணகிரியார் வாக்கு. அநுபூதி பெற்றவர்கள் போற்று தலையும், தூற்றுதலையும் சமமாகவே கருதுவர். புறவுலகக் கவலை அவர்களையும் சேரும். எல்லோரும் நன்னிலையில் வாழ வேண்டும் என்பதே அக் கவலை. அதையும் இறைவன் பக்கமே இருந்து எண்ணுவர். நம் நாட்டில் எவ்வளவோ அநுபூதிமான்கள் உண்டு. என் அனுபவ எல்லைக்கு உட்பட்ட வரை ஒருவரைச் சுட்டிச் சொல்ல வேண்டுமானால் காஞ்சி பரமாச்சார்ய சுவாமிகள்.



'டைம் இல்லை' என்பதால் பல் தேய்ப்பதையோ குளிப்பதையோ செய்யாமல் இருப்போமா? அதே போல் அமைதிப்படுத்திக் கொள்வதையும் ஒரு வழக்கமாக்கிக் கொண்டு விட வேண்டும். முதல் ஒரு வாரம் வழக்கத்தை விட அரை மணி நேரம் முன்னதாக எழுந்து சற்றுத் தூக்கத்தைத் தியாகம் செய்து விட்டு இந்தப் பயிற்சியை மேற்கொள்ளுங்கள். வித்தியாசத்தை நிச்சயம் உணர்வீர்கள். 'டென்ஷன்! டென்ஷன்!' என்று மதுவையும் சிகரெட்டையும் நாடுவதை விட இந்தப் பழக்கம் எவ்வளவோ மேல்.

அதே போல் மாலை வீடு திரும்பியதும் விளக்கேற்றி வைத்து விட்டு வழிபடுங்கள். அமைதி தரும் இசையைக் கேட்கலாம் அல்லது சுலோகங்கள் வழிபாட்டுப் பாடல்கள் படிக்கலாம். இறுக்கமான சூழ்நிலையின் ஆதிக்கத்திலிருந்து விடுபட இது நிச்சயம் உதவும்.

பிறரால் நமக்கு ஏற்படும் டென்ஷன் போக, நாமே ஏற்படுத்திக் கொள்ளும் டென்ஷன் ஏராளம். சற்று நுணுகி ஆராய்ந்தால் 'திட்டமிடுதல்', 'நேர நிர்வாகம்' என்ற இரு விஷயங்களில் நாம் போதுமான கவனம் செலுத்துவதில்லை என்பது புலப்படும். அம்மா காய்கறி நறுக்கியபடியே குழந்தைக்குப் பாடத்தில் சந்தேகமிருந்தால் தீர்த்து வைக்கலாம். பேப்பர் படிக்க நேரமில்லை என்று அப்பா புலம்பாமல் ரேடியோவில் நியூஸ் கேட்டபடியே ஷேவிங்கை முடிக்கலாம். திட்டமிட்டுச் செய்தால் நேரம் மிச்சமாகும்; டென்ஷன் குறையும்.

அதே போல், செய்ய வேண்டிய பணிகளையெல்லாம் குறித்து வைத்துக் கொண்டு, முடிக்க முடிக்க 'டிக்' அடித்து வந்தால் முக்கியமான விஷயங்களை மறந்து விடுவோமோ என்ற டென்ஷன் இருக்காது. இரண்டாம் உலகப் போரின் போது சர்ச்சில் இரண்டு மூன்று மணி நேரம் மட்டுமே தூங்குவாராம். ஆனால் அந்தத் தூக்கம் கனவற்ற, நிச்சலனமான, ஆழ்ந்த நித்திரையாக இருக்கும் என்று அவர் சொல்லியிருக்கிறார். தாம் செய்ய வேண்டிய காரியங்களையெல்லாம் பட்டியலிட்டுக் குறித்து வைத்துக் கொண்டதால் அவரால் நிம்மதியாகத் தூங்க முடிந்தது.

டென்ஷன் குறைவான வாழ்க்கை வேண்டுமென்றால் நமக்கு எது முக்கியம் என்பதை ஆராய்ந்து முடிவெடுக்கும் மனப்பக்குவத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். வேலைக்குப் போகும் பெண்களுக்கு வீட்டு வேலையையும் சமாளித்து அலுவலக வேலையையும் சீராகச் செய்யும் சவால் மிகப் பெரிது. குழந்தை முக்கியமா ஆபீஸில் பிரமோஷன் முக்கியமா? போன்ற சளைக்கச் செய்யும் கேள்விகள் எழுந்து கொண்டேயிருக்கின்றன. ஏதேனும் ஒன்றைப் பெற விரும்பினால் அதற்குப் பதிலாக வேறு ஒன்றைக் கொடுத்தே ஆக வேண்டும் என்ற அடிப்படை விதியை மனத்தில் கொண்டால் விட்டுக் கொடுக்கும் தருணங்களிலும் வளைந்து கொடுக்கும்



**ஒரு பெரிய மதவாதி போல வாழும் ஒருவருக்குக் கடன் கொடுத்தேன். அவர் ஏமாற்றி விட்டார். அவரை யாரும் குறை சொல்லவில்லை. என்னைத்தான் முட்டாள் என்கின்றனர். மதவாதிகள் நேர்மையாக நடப்பதில்லையே?**

தன்னை மதப்பற்று உள்ளவன் என்று காட்டிக் கொள்கிறவர் எல்லோரும் நேர்மையானவர் என்று யார் சொன்னது? ஏமாற்றுகிறவர்கள் மதப் போர்வையில் மறைந்து கொள்வது பரவலான ஒன்று. சீதையைக் கவர வந்த இராவணன் துறவி வேடத்தில் வந்தான். ஏமாற்றுகிறவர்களில் மதவாதிகளும் இருக்கலாம்.

நாம் ஒருமுறை ஏமாந்தால் அது அனுபவம். இரண்டாம் முறையும் ஏமாந்தால் அது முட்டாள் தனம்.

ஒரு நாள் 'துக்ளக்' மன்னன் தன் மந்திரியை அழைத்து ''நம் தேசத்தில் எவ்வளவு முட்டாள்கள் இருக்கிறார்கள் என்று கணக்கெடுத்து ஒரு பட்டியல் போட்டுக் கொண்டு வா'' என்றான்.

மந்திரி தயாரித்த பட்டியலில் முதல் பெயர் 'துக்ளக்' என்று இருந்தது.

மன்னனுக்குக் கடுங்கோபம். ''மந்திரி! என்ன நினைத்து முட்டாள் பட்டியலில் என் பெயரை முதலாகச் சேர்த்திருக்கிறீர்?'' என்றான்.

மந்திரி, 'ஆம்! அரசே! நீங்கள் சென்ற வாரம் ஒருவனை நம்பி ஒட்டகம் வாங்கப் பத்தாயிரம் பவுன்கள் தரவில்லையா? இவ்வளவு பெரும் தொகையை ஒருவனை நம்பிக் கொடுக்கலாமா?' என்றான்.

உடனே மன்னன், 'சரி! நான் யாரிடம் பவுன் கொடுத்தேனோ அவன் ஒட்டகத்துடன் வந்து விட்டால்... என்ன செய்வீர்?' என்றான்.

மந்திரி அமைதியாக 'உங்கள் பெயரைப் பட்டியலிலிருந்து எடுத்து விட்டு அவன் பெயரைச் சேர்த்து விடுவேன்' என்றான்.

**பசுவின் பாலைக் குடிக்கலாமென்றால், பசுவைத் தின்றால் என்ன?**

தென்னை மரத்து இளநீரைக் குடிப்பதனால் தென்னை மட்டையையும் தின்னலாமே!

பசுவின் மடியிலிருந்து பாலை எடுப்பது அதற்கு நாம் செய்யும் உதவி. மடியிலிருந்து பாலைக் கறக்கா விட்டால் பசுவுக்கு வலியும் நோயும் ஏற்படும். பசுவின் துன்பத்தை நீக்குவதால் நமக்குப் பால் கிடைக்கிறது. கடவுளின் கருணையை இதனால் தெரிந்து கொள்ளலாம்.

**முருகன் அமர்ந்திருக்கும் மயிலின் காலில் பாம்பு இருப்பதேன்?**

முருகன் தெய்வம்; மயில் மனிதன் (சூரபத்

சமயங்களிலும் மனோதிடம் குன்றாமல் இருக்கும்.

''சம உரிமை கேட்கும் பெண்களுக்கு பஸ்ஸில் ஏன் தனி இருக்கை ஒதுக்க வேண்டும் என்று இன்றைக்குப் பல ஆண்கள் வாதாடுகிறார்களே! வீட்டில் சம பொறுப்பை இவர்கள் ஏற்பார்களா?" என்று பொருமுகிறார் பத்மாவதி.

''என் பிரமோஷன் எனக்கு முக்கியம். என் கணவர் வேண்டுமானால் விடுப்பு எடுத்துக் கொண்டு வீட்டில் குழந்தையைப் பார்த்துக் கொள்ளட்டும்'' என்று பிடிவாதமாக இருக்கிறார் ராஜி பாய்.

ஆண்களும் புரிந்து கொள்ளாமல் பெண்களும் விட்டுக் கொடுக்காமல் ஓர் இரண்டுங்கெட்டான் தலைமுறையில் நாம் இருக்கிறோம். இதனால் தான் குடும்பத்தில் முக்கால்வாசி டென்ஷன். பேசிப் பரிமாறிக் கொள்வதால் கொஞ்சம் டென்ஷனைக் குறைத்துக் கொள்ளலாம். எதிராளியின் குறைகளை மட்டுமே நினைத்து நினைத்து மருகி, சுய பச்சாதாபத்தில் மூழ்ந்து டென்ஷனை வளர்த்துக் கொள்வதற்குப் பதிலாக இந்தக் கதையைப் பற்றிச் சிந்தியுங்கள்:

டேல் கார்னகி என்ற அமெரிக்க சிந்தனையாளர் நடத்திய சுய முன்னேற்ற வகுப்பில் சேர்ந்தார் ஒரு பெண். தமது கணவரைப் பற்றிய குறைகளையெல்லாம் பயிற்சியாளரிடம் கொட்டினார். பயிற்சியாளர் கேட்டார்: ''உங்கள் கணவர் இறந்து விட்டால் என்ன செய்வீர்கள்?'' அப்போதுதான் அந்தப் பெண்மணிக்குச் 'சொரேர்' என்றது. கணவரின் நல்லியல்புகள் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன.

இவ்வளவு அமங்கலமான கற்பனை வேண்டாம்... உங்கள் கணவனோ மனைவியோ ஒரு மாதம் வெளியூர் போய் விட்டால்... இப்படி யோசித்தாலே எதிராளியின் நிறைகளை வரிசைப் படுத்தித் திருப்தியடையலாம்.

**ப**ல ஆண்களுக்கு — ஏன் சில பெண்களுக்கும் கூடத் தெரியாத விஷயம்: ஒவ்வொரு மாதமும் மாதவிடாய்க்கு முந்தைய சில தினங்களில் பெண்கள் அதிக டென்ஷனுக்கு உள்ளாகிறார்கள் என்பது. **Pre-menstrual tension (P.M.T.)** என்று அழைக்கப்படும் இந்த நிலை, உடலில் உள்ள ஹார்மோன்களின் படுத்தலால் ஏற்படும் விளைவு. அவரவர் உடலில் உள்ள ஹார்மோன் கலவையின் தன்மையைப் பொறுத்து இந்த டென்ஷன், கோபம், சிடுசிடுப்பு என்ற எளிய வடிவங்களில் ஆரம்பித்து ஹிஸ்டீரியா தற்கொலை என்ற விபரீதங்கள் வரை போகலாம்! இந்த சில தினங்களில் பெண்களின் செயல்திறன் குறைவடைகிறது என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

மேலும் மாதவிடாய் நிற்பதற்கு முன்னும் பின்னும் சில வருடங்களுக்கு **Pre-menopausal** மற்றும் **Post-menopausal tension** ஏற்படும் வாய்ப்பும் உள்ளது.

பெண்கள் வெளியில் சொல்லிக் கொள்ள முடியாமல் படும் இந்த அவஸ்தைகளை ஆண்களும் மற்ற பெண்களும் புரிந்து கொண்டு அனுசரணையாக இருந்து உதவலாம்.

புஸ்..ஸ்..ஸ்..

முன் காலத்தில் மாமியார்தான் மருமகளுக்குத் தலைவாரிப் பின்ன வேண்டும் என்று ஒரு வழக்கம் கடைப்பிடிக்கப்பட்டது. புதிய சூழலில் அடியெடுத்து வைக்கும் ஓர் இளம் பெண்ணின் மன இறுக்கத்தைத் தளர்த்த உதவும் என்று கருதியே இந்த வழக்கம் ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும். குழந்தையை மடியில் போட்டுக் கொண்டு தலையை வருடினால் அதன் கண்கள் தானாகச் சொக்கிப் போகும். அதைப் போல் தான் மாமியார் தலையைக் கோதுவதிலும் வருடுவதிலும் மருமகளுக்கு இதம் பிறக்கும், இரு பெண்களுக்குமிடையே இடைவெளி குன்றி, நெருக்கம் வளரும் என்பதற்காகத் தலை பின்னும் வழக்கம் ஏற்பட்டது.



மனே மயில், அவன் முருகனால் ஆட்கொள்ளப் பட்டதால் அவனே ஆட்கொள்ளப்பெறும் எல்லா ஜீவான்மாக்களுக்கும் பிரதிநிதி) அந்த மயிலின் கீழ் இருக்கும் நாகமே நம்மை மீண்டும் உலகில் கருத்தைச் செலுத்த வைக்கும் பந்தம், உறவு. நம்மை இறைவன் மேலே தூக்குகிறான். பந்தங்கள் நம்மைக்கீழே இறக்குகின்றன. நாகப் பாம்பு உலக பந்தத்திற்குச் சின்னம். அதனா லேயே அருணகிரியார் ''நாகபந்த மயூரா நமோ நம'' என்று பாடினார்.



நம்முடைய இன்றைய வாழ்க்கையில் இதைப் போன்ற இதமான ஸ்பரிசங்கள் அடியோடு இல்லாமலே போய் விட்டன. மாமியாரும் மருமகளும் ஒரே வீட்டில் பத்து வருடங்கள் வாழ்ந் தாலும் தொட்டுக் கொள்வதில்லை. கணவன் — மனைவியிடையே கூட காமுறுதல் அல்லாத ஸ்பரிசம் என்பது மிகக் குறைவாகவே உள்ளது. கூச்சம் காரணமாகவோ வாழ்க்கை இயந்திரமய மாகி விட்டதன் பயனாகவோ நாம் தவிர்த்து வரும் இப் 'பழக்கத்தை மீண்டும் ஏற்படுத்திக் கொள்வது பயன் தரும்.

கணவன் ஆய்ந்து ஓய்ந்து வீடு திரும்பும் போது மனைவி அவன் தோள்களை அழுந்தப் பிடித்து விடுவதும் மனைவி காலைப் பொழுதில் டென் ஷனில் சிக்குண்டிருக்கும் நேரத்தில் கணவன் அவள் கைகளைப் பற்றித் தோழமையுடன் அமைதிப்படுத்துவதும் பலவீனமடைந்த உடலுக் கும் மனத்துக்கும் பலத்தைக் கொடுக்கும்.

மீராவின் மாமியாருக்குச் சிறுநீர்க் கோளாறு ஏற்பட்டு, சிகிச்சை எடுத்துக் கொண்டிருந்தார். இவரிடமிருந்து தமக்கும் குழந்தைகளுக்கும் நோய் தொற்றி விடுமோ என்று சதா டென்ஷன் மீரா வுக்கு. மாமியார் உட்காரும் இடத்தையெல்லாம் டெட்டால் போட்டுத் துடைப்பதும்; ஒவ்வொரு முறை துடைத்த பிறகும் தாமும் குளித்து உடை மாற்றிக் கொள்வதுமாக ஒரு வெறி போல் ஆகி விட்டது அவருக்கு. மகள் ஒரு நாளைக்குப் பத்து தடவை குளிப்பதைப் பார்த்து அதிர்ந்து போன பெற்றோர்கள் அவளை மன அமைதி சிகிச் சைக்கு அழைத்துச் சென்றனர். பெற்றோர்கள் கவலைப்பட்டதுதான் மிச்சம். மீராவுக்குத் தமது செய்கை அத்து மீறியது என்ற பிரக்ஞையே இல்லை — தாம் செய்வது சரிதான், நியாயம்தான் என்று தீர்மானமாக நம்பிய அவரைப் பலவித மாகக் கேள்விகள் கேட்டு மாற்ற முயன்ற நிபுணர்களுக்கும் தோல்விதான்! ''ஒவ்வொரு முறை குளிப்பதற்கும் நான் எடுத்துக் கொள்ளும் கால அளவைக் குறைக்க வழி சொல்லுங்கள் போதும்'' என்றார் மீரா!

மீராவின் கோளாறு அபூர்வமானது. ஆனால் அவர் கதை உணர்த்தும் நியதி எல்லோருக்கும் பொது: டென்ஷனால் பாதிக்கப்பட்டவர் தமது பாதிப்பை உணர்ந்து, மாறி, அமைதி அடைய மனப்பூர்வமாய் விரும்பினால் அன்றி அவருக்கு யாரும் உதவ முடியாது!

---

இந்தத் தொகுப்புக்குத் தகவல்கள் கொடுத்து உதவியர்கள்:

**டாக்டர். ஆர். பார்த்தசாரதி.**

**டாக்டர். எச். வி. ஆர். அய்யங்கார் மற்றும் திருமதி வினதா அய்யங்கார்.**

**(Stress control மற்றும் relaxation therapy நிபுணர்கள்)**

தொகுப்பு: **சிஷ்யா**

* கட்டுரையில் குறிப்பட்டுள்ள சம்பவங்களில் குறிப் பிட்டுள்ள பெயர்கள் கற்பனை.